# அலைகள்

லா. ச. ராமாமிருதம்



வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# பொருளடக்கம்


| | |
|---|---|
| கடல் | 5 |
| தபஸ் | 9 |
| கிரஹணம் | 23 |
| பகல் கனவு | 31 |
| குண்டலி | 38 |
| ஆஹுதி | 59 |
| முள் | 72 |
| ஆண்டாளு | 100 |
| நெற்றிக்கண் | 114 |
| மாற்று | 123 |
| கண்ணன் | 148 |
| எங்கிருந்தோ வந்தேன் | 157 |
| வித்தும் வேரும் | 178 |
| சோமசன்மா | 193 |
| அலைகள் | 201 |
| "தெறிகள்" | 246 |
| இதழ்கள் | 259 |

# கடல்

இந்தத் தொகுதியின் தலைப்பை தனதாய் தாங்கிய 'அலைகள்' சுமார் மூன்று வருடங்களுக்கு முன்னால் 'கங்கை' பத்திரிகையில் வெளிவந்தது. ஆனால் தொகுதிக்குத் தலைப்பை நிச்சயித்தபின், தலைப்புக் கதை எங்கு தேடியும் அகப்படவில்லை. அதிர்ஷ்டவசமாக கதையின் மூலப் பிரதியை—முதன் முதலாக உருவாகும் அதன் அத்தனை அடித்தல் திருத்தல்களின் ரணகளத்துடன்—சுருட்டிக் கட்டி எங்கேயோ ஒரு ஜாதிக்காய்ப் பெட்டிக்கடியில் போட்டு வைத்திருந்த ஞாபகம் வந்தது. அதன் மேல் இத்தனை வருடங்களில் சேர்ந்த மற்ற குப்பைகளின் அடியிலிருந்து தோண்டி எடுத்து, திருப்பி எழுதினேன்.

அப்படி எழுதுகையில், அந்தப் பின்புலனில் எனக்குக் கூடவே தோன்றிய சில எண்ணங்களை—தோற்றங்களை என்று சொன்னால் கூட மிகையாகாது— இங்கு வெளிப் படுத்துவது பொருந்தும்.

நான் ஐம்பது வயதை நெருங்கிக் கொண்டிருக்கிறேன். ஆனால், நான் சென்னையைவிட்டு அதிகம் வெளியே போனது கிடையாது.

எங்கள் குடும்பம் கிட்டதட்ட அறுபது வருடங்களாய், நான் பிறப்பதற்கு முன்பேகூட, சென்னையிலேயே வாசம்.

சென்னைவாசிக்கு ஒரு அரும்பெரும் வாய்ப்பு சென்னை கடற்கரை. நான் சிறியவனாய் இருக்கையில் மாலையில்

கடற்கரையில் வந்து மணலில் படுத்து அண்ணாந்து பார்க்கையில், என்மேல் தன் அலுக்காத ஒளி ஜாலங்களுடன் கவிந்த வான்கடலும், என் கைக்கெட்டிய தூரத்தில் என் எதிரே விரிந்த கடலும் இருக்க வேறென்ன வேண்டும் எனப் பலதரம் நினைத்ததுண்டு.

கரையிலிருப்பவனுக்கு தன்னெதிரே விரிந்த கடலைப் பற்றி அதிசயிப்பு.

கப்பலிலோ, கட்டு மரத்திலோ கடலில் இருப்பவனுக்குத் தான் மீளக் கரை இருக்கிற தெம்பு.

தெய்வத்துக்கும் மனிதனுக்கும் உள்ள உறவின் பரஸ்பரமும் இதுதான் என்பது என் துணிபு.

வந்தேன்

பார்த்தேன்

ஜெயித்தேன்

இதை உலகில் உயிரின் யாத்திரையாகக் கொள்வோமா?

ஆனால், யாத்திரை முடிய வேண்டாமா?

முடிந்தால்தானே அது யாத்திரை!

ஜெயித்தேன்.

ஜெயித்த பின் எங்கிருந்து வந்தேனோ அங்கு மீண்டேன்.

இது உலகத்தின் கோளவடிவிற்கு ஒரு சான்றாய் நிற்பதோடு அல்லாமல் மனிதன் தெய்வமாகும் சரிதையும் அதுவே யாகும்.

இத்தொகுதியில் அடங்கியுள்ள கதைகள் என் எழுத்து அனுபவத்தில் இருபத்து மூன்று அல்லது இருபத்து நான்கு வருடங்களின் பார்வைகள். இவைகளைப் பற்றி இப்பொழுது எனக்கு எழும் உள்ளக் கிளர்ச்சியை நான் என்னென்று விவரிப்பேன்?

என் மகன் சேகர் என்னதான் சொல்லியும் கூடத்தில் தூங்கிவிடுகிறான். ஒவ்வொரு தடவையும் அவனை எடுத்துச் சென்று படுக்கையில் தூங்கச் செய்வது எனக்கு நேர்ந்துவிட்ட வேலை. அவன் இரண்டு நிஜார்ப்பைகளும் எக்கச்சக்கமாய் முண்டிக் கொண்டிருக்கின்றன. குழந்தை தூக்கத்தில் புரண்டால் நோகுமே என்று பைகளைக் காலி செய்கிறேன், பைகளிலிருந்து என்னென்னவோ கைக்குக் கிடைக்கிறது. கயிறு சுற்றிய பம்பரம், ஓமப்பொடியாய் உடைத்த சிலேட்டுக் குச்சிகள், ஆணிகள், கசங்கியும் கத்தரித்ததுமான காகிதத்துண்டுகள், வழவழவெனும் கூழாங்கல், பென்சிலில் திருகி எடுத்த விசிறிபோல் சுருண்ட சீவல் சரம், சோடாமூடி, கோலிக்குண்டு இன்னும் இம் மாதிரி ஏதேதோ!

மறுநாட்காலை குழந்தை எழுந்ததும் அவனுடைய சாமான்களைத் தான் முதலில் தேடுகிறான். அவைகளைக் காணாவிடில் அழுகிறான்.

அவன் துக்கத்தைக் காண எனக்குச் சிரிப்பு வருகிறது. அவன் அப்பொருள்களின்மேல் வைத்திருக்கும் ஆசையும், அருமையும் எனக்குத்தான் சிறுபிள்ளைத் தனமாக இருக்கிறது. ஆனால் நானும் ஒருநாள் சேகராக இருந்துதான் இப்பொழுது கிழவனாகிக் கொண்டிருப்பது எனக்கு ஏன் மறந்துவிட்டது? இப்படித் தோன்றியதும், என்னை சில சமயங்களில் என்னால் மன்னிக்க முடியவில்லை.

சேகரின் முதற் புனிதத்தை நான் இழந்து விட்டேன் எனும் இவ்வுணர்வே மெய்யுணர்வின் விடிவு.

இக்கதைகளைப் பொறுத்த வரை என் நிலையும் இப்படித்தான்.

ஒவ்வொரு உணாசசையையும் தனித்துப் பார்க்கையில் ஆசைகள், கோபங்கள், பாசங்கள், ஆசாபாசங்கள், நிறைவுகள், குறைகள் என, தனித்தனிக் கோணங்கள்தான் எழுகின்றன. ஆனால், அவ்வப்போது எது, எது எப்படி

நடக்க வேண்டுமோ அப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது. உலகத்தில் முழுக்க முழுக்க நல்லவனும் இல்லை; கெட்டவனும் இல்லை. லோக ஸ்ருதியின் இயக்கந்தான் விதி. லோக ஸ்ருதியில் அது அது அதனதன் இடம் தவறாது சரியாய்த்தான் இயங்கிக் கொண்டிருக்கிறது. இத்தொகுதியே லோக ஸ்ருதிக்குச் செலுத்தும் அஞ்சலி என நிச்சயமாய்க் கொள்ளலாம்.

கட்டிடம் முடிந்து கொண்டே வருகையில் ஒவ்வொரு சாரமாய் தட்டிக்கொண்டே வரவேண்டியது தானே? தெய்வநிலையை எய்தியபின் அதையும் தட்டிவிட நமக்கு துணிச்சல் வேண்டாமா? அந்த நிலையை நாம் இதுவரை அடையாது இருப்பின் அது நம் மனப்பரப்பு குறுகி இருப்பதால்தான். மன வளர்ச்சி எல்லையற்றிருக்கும்வரை அதுவே நம் பாக்யம், தைரியம், உயிருக்கே ஊக்கம்; எல்லாமே. இதுவேதான் அலைகளின் ஸ்ருதி; பின்புலன்.

**லா. சா. ராமாமிருதம்**

# தபஸ்

நடந்ததெல்லாம் நடந்த பிறகு...

என்னினைவின் முகட்டில் தோன்றுவது ஒரு பெரும் நிலைக்கண்ணாடி, கோவிலில் அம்பாள் சன்னதிக்கெதிரில் இருப்பதுபோல் நான் என்னைக் காண்கிறேன்.

நீறு துலங்கும் என் வெண்ணெற்றியின் இருமருங்கிலும் கருமை செழிந்த மயிர், சுருட்டை சுருட்டையாய் விழுகின் றது. நான் அதை வெட்டவுமில்லை, வழிக்கவுமில்லை. நேரே தூக்கிப் பின்புறமாய் சீவி விட்டிருக்கிறேன். நீண்டு வங்கி வங்கியாய் வளைவுகொண்ட கேசம். எனக்கு ரொம்ப வும் பிடிக்கும்.

நீறு துலங்கும் என் வெண்ணெற்றியில் புருவங்களுக்கு மத்தியில் சிவப்பு திகழ்கின்றது.

—நான் அழகன்.

—நான் பிரம்மசர்யன்.

—ஆம், நான் வீணாகவில்லை. என் மனைவியைக் கல்யாணத்தில் ஓமப் புகையில் கண்ட பிறகு மறுபடியும் நான் கண்டதில்லை. நாங்கள் சின்னஞ்சிறு வயது.

ஆயினும் நான், அவள் என்னிடம் வரும் நாளை எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன்.

கல்யாணமானதிலிருந்து நான் அவளைக் காணாததால் என் மனைவிமேல் நான் வெகுவாய் ஆசை கொண்டிருந்தேன்.

—நான் புத்திசாலி.

—நான் படித்தவன்.

படிக்கப் படிக்க சந்தேகந்தான். புத்தி அதிகமாக ஆகக் குழப்பந்தான்.

புத்தியைவிட உணர்ச்சிதான் உயர்ந்தது. மூளையை விட இதயம்தான் பெரியது. ஞானத்தைவிட பக்திதான் உயர்ந்தது.

என் தகப்பனுக்கு அவர் தொழும் தெய்வத்தினிடம் பக்தி இல்லை.

இத்தனைக்கும் நாலு தலைமுறையாய் நாங்கள் கோவில் குருக்கள்.

அவருக்குப் பக்தியிருந்ததோ என்னவோ, அவர் பூஜை செய்யும் தினுசில் இல்லை. சுவாமி நெற்றியில் காய்ந்து போயிருக்கும் முந்திய நாள் சந்தனத்தைக் கிள்ளக்கூட மாட்டார். அப்படியே ஒரு செம்பு ஜலத்தை, சாட்டை மாதிரி சுவாமி முகத்தில் அடிப்பார்.

நான் கூட இருப்பேன்.

"அப்பா, சுவாமி உடம்பெல்லாம் நனைய வில்லையே?" என்பேன்.

"எனக்கு இடுப்புத்தான் பிடிப்பு. காது செவிடில்லை, இன்னும் கொஞ்சம் மெதுவாய்க் கத்தலாம்" என்று மண்டையிலடிப்பார். நான் அழுதுகொண்டே நிற்பேன்.

அப்புறம் சாவகாசமாய் "நீ, பெரியவனாய்ப்போய் என் வேலையைச் செய்யறப்போ, கோவில் கிணற்றையே தூரெடுத்துச் சுவாமி தலையில் கொட்டு. வேண்டாம் என்கவில்லை. எனக்கு வயசாயிடுத்து. இடுப்புப் பிடிப்பு.

ஒரு தவலை மொள்ளுவதற்குள் உசிரே போய்த் திரும்பி வரது...''

கோவில் நைவேத்திய சாமான்களில் அப்பா கவலையில்லாமல் திருடுவார். சிவசொத்து எனும் கவலையே கிடையாது. வீட்டுக் கவலைகூட கிடையாது. 'அம்மாளு' கவலைதான்.

''அம்மாளுவுக்கு அது. அம்மாளுவுக்கு இது' என்று ஒவ்வொன்றிலும் கொஞ்சம் ஒதுக்கிவைத்துச் சின்ன மூட்டை கட்டுவார்.

''அம்மாளு யார் அப்பா?'' என்று நான் வியப்புடன் கேட்பேன்.

'உனக்கென்ன அதைப்பத்தி?' என்று முதுகில் அறைவார்.

அவரிடமிருந்து அம்மா என்னை அணைத்து ஒரு அறையில் பிடித்துத் தள்ளுவாள். பிறகு அப்பாவும் அம்மாவும் சண்டை போடுவார்கள்.

''மானம் போறதே. நம்ப சந்தி நம்ப பிள்ளைகிட்டக் கூட சிரிக்கணுமா?'' என்று அம்மா அழுவாள்.

''மூடு வாயை, கழுதை!'' என்று அப்பா கர்ஜித்துவிட்டு கட்டின மூட்டையுடன் வெளியே போய்விடுவார்,

அப்பா வீட்டில் சாகவில்லை.

ஒருநாள் அம்மாளு வீட்டிலிருந்து அப்பாவின் பிணத்தைக் கொண்டு வந்தார்கள்.

அதற்கப்புறம் நான்தான் குருக்கள்.

அதற்கு முன்னாலேயும், அப்பா வீட்டிலோ ஊரிலோ இல்லாதபோதும் அவருக்கு உடம்பு சரியில்லாதபோதும் நான்தான் குருக்கள்.

எனக்கு லிங்கத்தைக் கண்டால் அவ்வளவு பிடிக்கவில்லை.

ஆட்டுக்கல்லில் குழவியை வைத்தாற்போல்.

தேவி அப்படியல்ல. அவள் உருவமும் ஆராதனையும் மனத்தில் பக்தியை உண்டாக்குகிறது.

ஆசை, அன்பு, பக்தி, பாசம், பட்சம்- இத்தனைக்கும் வித்தியாசங்களின் அத்தனை நுணுக்கங்களும் நான் அறிவேன்.

கல்யாணத்துக்குப் பிறகு என் கண்ணால் காணாத என் மனைவி, இன்னும் ஏன் என்னிடம் வரவில்லை என்று எனக்கு வயது ஆகஆக நாளுக்கு நாள்—நான் அதிசயித்த துண்டு.

எனக்கு வயதாக ஆக, அவள் உருவம் இப்பொழுது எப்படியிருக்கும் என்று நான் அதிசயித்ததுண்டு.

அம்பாளைப்போல் இருப்பாளா?

அம்பாளை நான் நன்கு அறிவேன்.

அம்பாளுக்கு நான் அபிஷேகம் செய்கிறேன்.

அர்ச்சிக்கிறேன்.

தீப ஆராதனை செய்கிறேன்.

அம்பாளை நான் பக்தி பண்ணுகிறேன்.

ஓர் இரவு நான் சாப்பிட உட்கார்ந்தேன். அம்மா என்னிடம் என்னவோ சொல்ல வந்தாள். அவள் முகம் வெளுத்துப் போயிருந்தது. அதில் நான் கண்டது பயமா, துக்கமா, வெறுப்பா, குரூரமா? என்று என்னால் நிச்சயமாய்க் கண்டு பிடிக்க முடியவில்லை. அத்தனையுமிருந்தது.

''அம்பி, உன் ஆம்படையாள் செத்துப்போயிட்டாள் என்று சமாச்சாரம் வந்தது. என்னமோ மூணுநாள் ஜுரமாம்......''

''ஹா?—'' என்று என்னிடமிருந்து ஒரு மூச்சு திணறிய ஞாபகமிருக்கிறது.

அம்மாவின் முகம் இன்னமும் கூரிட்டது.

''நாம் இனி அங்கே போயும் பிரயோசனமில்லை. எல்லாம் எடுத்திருப்பார்கள். ரொம்ப தூரம் பார்—''

ஆசை எல்லாவற்றிற்கும் எவ்வளவு மகத்தான ஆரம்பமோ, அதே மாதிரி சாவும் அவ்வளவு மகத்தான முடிவு.

என் கண்ணால் காணாத என் மனைவியைப்பற்றி என் கற்பனையில் நான் எழுப்பிக் கொண்டிருந்த உருவம் என் மனத்துள் நீறாவதை நான் உணர்ந்தேன்.

நாளடைவில் நான் வெளியில் நடமாடுகையில் என்னை ஒரு மாதிரியாக எல்லோரும் கவனிப்பதாக எனக்குத் தோன்றிற்று. ஏன் என்று எனக்குப் புரியவில்லை.

பிறகு கொஞ்சம் கொஞ்சமாகப் புறைசல்...

அம்மா சொன்னது பொய். என் மனைவி சாகவில்லை.

அவள் சாகவில்லை என்று கேள்விப்பட்டதும், அவள் உருவம் மறுபடியும் ஒன்றுகூடி புது சிருஷ்டிபோல், என் மனதை உதைத்துக்கொண்டு கிளம்புகையில், அந்தப் பரவசத்தில், என் உயிர் தொண்டைவரையில் எழுந்து அழுங்கியது. எனக்கே உள்ளூர அதைப்பற்றி சந்தேகமாயிருந்தது. ஏனெனில் மற்ற ஈமக்கிரியைகள் நடக்கவில்லை. நடத்த வேண்டுமென்று அம்மா சொல்லவுமில்லை. அந்த வீட்டாரும் இங்கு வரவில்லை. நாங்களும் அங்கு போகவில்லை. எல்லாம் கிணற்றில் கல் போட்ட மாதிரியிருந்தது.

என் மனைவி சாகவில்லை. ஆனால்—

அந்த இடத்தில்தான் எல்லோரும் மென்று விழுங்கி விடுகிறார்கள்.

விஷயத்தைக் குறைவாய்ச் சொல்லி உலகம் ஒளிமறைப்புக்கும் பொய்க்குமே இடமாய் இருக்கிறது.

ஒருநாள் மாலை தேவிக்கு அபிஷேகம் செய்வதற்கு, கர்ப்பக்ருஹத்திலிருக்கும் அண்டாவிற்கு ஜலம் கொட்டிக் கொண்டிருந்தேன்.

கோவில் வெளிப்பிரகாரத்தில், நந்தவனத்தின் நடுவில் கிணறு. சுற்றி, முழங்கால் உயரத்துக்குப் புதர். பாம்பு பூச்சி வெடுக்கென்று பிடுங்கினாலும் தெரியாது.

கிணற்றில் அப்பொழுதுதான் தவலையைப் போட்டிருந்தேன்.

ரோட்டில் வைத்திருக்கும் சோடாக் கடைக்காரன், மேல் துண்டை இடுப்பிலும், கைகளைத் தோளிலும் கட்டிக் கொண்டு வெகு பயபக்தியுடன் வந்து நின்றான்.

"அம்மனுக்கு என் பேரிலே ஒரு அர்ச்சனை பண்ணுங்க..." என்றான்.

எனக்கு ஏன் இவர்களையெல்லாம் கண்டால் அருவருப்புத் தோன்றுகிறதோ தெரியவில்லை. இவர்களுடைய பக்தியும், அர்ச்சனைகளும், கைகளை உயரத் தலைக்குமேல் தூக்கிக் கொண்டு, தொந்தி சரிந்துக்கொண்டு, தொண்டை கிழிய இவர்கள் பாடும் தோத்திரங்களும்! தேவி இவர்களுடைய பக்தியையும் தோத்திரங்களையுமா விரும்புகிறாள்?

"செய்தால் போகிறது—" என்றேன், தண்ணீரை இழுத்துக்கொண்டே.

"கொஞ்சம் அவசரங்க, பக்கத்தூரிலே இன்னிக்கு 'கோவலன்' நாடகம். சுருக்கப் போவணுங்க......"

எனக்குப் படபடவென்று கோபம் வந்துவிட்டது.

நான்—கோபி.

"உன் கூத்துக்கும் கொம்மாளத்துக்குமிடையில், சுவாமி கண்ணில் மண்ணைப்போட ஒரு அர்ச்சனையாக்கும்!"

நான் சொன்னதைக் காதில் வாங்கிக்கொள்ளாமலே,

"இன்னிக்கு மாதவி ஸ்திரீ பார்ட்டுங்க; புதிசுங்க..." என்றான்.

"அப்படியானால் இப்பவே போ—வழியைவிட்டு எட்டித்தில்......"

''குருக்களய்யாவுக்கு ரொம்பக் கோபம் வருதே!—''

''இல்லை கோபம் வராது. சுவாமி கைங்கர்யத்தில் உனக்கு இருக்கும் சிரத்தைக்கு, உன்னைக் கட்டியணைத்துக் கொஞ்சணுமாக்கும்—''

அவன் முகத்தில் தோன்றிய புன்னகை எனக்குக் கரிப் பெடுத்தது.

''என்னையேன் கொஞ்சணுங்க? மாதவியம்மாளைக் கொஞ்சுங்க......''

அவன் கன்னத்தில் சுழற்றி ஒரு அறை விட்டேன்.

''மரியாதை கெட்ட நாயே, என்ன குடித்துவிட்டு வந்திருக்கியா? உன்னைத் தொட்டதற்கு நான் மறுபடியும் ஸ்னானம் வேறு பண்ணவேண்டியிருக்கு—''

அவன் அப்படியே கீழே சாய்ந்தான். அவனுக்கு ஆத்திரம் மூண்டுவிட்டது. இருந்தாலும் கோவில் குருக்கள் மேல் கைவைக்க முடியுமா? ஆனால் அடியைப் பட்டுக் கொண்டும் வாய் சும்மா இல்லை.

''உங்களுக்கு அந்த மாதவியம்மாளைக் கொஞ்சறதுக்கு முறையிருக்குதுங்க...''

அவன் விலாவில் காலாலேயே உதைத்தேன்.

வயிற்றைக் கெட்டியாய்க் கையால் பிடித்துக்கொண்டு, ''நிசமாத்தான். உங்க பெண்சாதிங்க!—'' என்று தொண் டையைக் கிழித்துக்கொண்டு கத்தினான். என் வெறி சட் டென விட்டது.

இடி விழுவதென்றால் இப்படித்தானா? தலை சுற்றிற்று. மடேரென்று கீழே விழுந்துவிட்டேனென்றே நினைக்கிறேன், நான் கிணற்றுள் விழாதபடி, நான் உதைத்தவனே என்னைத் தாங்கினான்.

என் அகமுடையாள் செத்துப்போனாள் என்று அம்மா சொன்ன அர்த்தம் இப்பொழுதுதான் எனக்குப் புரிந்தது.

உண்மையை அப்பவே அம்மா சொல்லியிருந்தால்!... ஒரே தடவை நஞ்சைக் கொடுத்தால் ஒருவழியாய் காயம் மடிந்து போகும். கொஞ்சம் கொஞ்சமாகப் பிரயோகம் செய்வதால் நெஞ்சு, உடல் எல்லாம் நஞ்சாகி விடுகிறது. என் ஆசையின் அஸ்தியிலிருந்து உருவான பிண்டம் கோர ஸ்வரூபமாய்த் தாண்டவமாடியது. அது ஆடிய ஆட்டத்தில், என் வயிறும் குடலும் குமட்டிற்று தழல் புழுப்போல் என் மூளையில் நெளிவது எனக்குத் தெரிகிறது.

என் மண்டை யெரிச்சலைத் தணித்துக்கொள்ள, ஒரு குடம் தண்ணீரைத் தலையில் கொட்டிக்கொண்டு, சொட்டச் சொட்டப் போய் அம்மன் சன்னதியில் நின்றேன்.

என் முதல் அடைக்கலமும் கடைசி அடைக்கலமும் அவள்தான்.

''தேவி, உனக்கு இது அடுக்கிறதா?''

அவள் என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தாள்.

மாலை பூஜை நேரம். அம்மனின் ஆடையைக் களைந்தேன்.

கர்ப்ப க்ருகத்தில், மேல் கொக்கியிலிருந்து தொங்கும் அகண்டம் ஆடிற்று. சுடர் சற்று மங்கியது. தூண்டினேன், குதித்தது.

''ஹா!''

என்ன அற்புதமான அழகு! கல்லைப்போன்ற முலைளும், குறுகிய இடையினின்று சரிந்தாற்போலேயே அகன்ற வயிறும் உடனே அகன்ற இடுப்பும் அடிவயிற்றில் தொப்புளும்—

''அம்பா! இத்தனை நாளாய் உன்னை நான் இப்படிக் கண்டதுண்டோ?''

அவள் என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தாள்.

அவளுடைய அபயஹஸ்தம் என்னை வாவென்று அழைத்தது.

''தேவி!''

என் கைகளை அகல விரித்துக்கொண்டு நான் அவளிடம் ஓடினேன்......

மூர்ச்சையில் நான் மூழ்கிப் போனேன்.

*　　　　*　　　　*

அன்று வெள்ளிக்கிழமை.

அம்பாளை நான் நன்கு அலங்காரம் பண்ணினேன். பொற்கவசம் மகுடத்திற்கும் ஹஸ்தங்களுக்கும் பாதங்களுக்கும் பதித்தேன். பட்டுப்புடவை யுடுத்தினேன். ஒட்டியாணம் பூட்டினேன். பாத கமலங்களில் குங்குமத்தை இறைத்தேன். நானும் இட்டுக்கொண்டேன்.

சகலலோக நாயகி அவள்.

மாலையை அணிவித்தேன்.

சகலலோக நாயகி. என் நாயகி.

அவள் என்னை அறிவாள். நான் அவளை அறிவேன். என் பக்தி எனக்கும் என் தேவிக்கும் இடையில் ஒரு ரகஸ்யம்.

சன்னிதானத்தில் மற்றவரெல்லாம் புடைசூழ்ந்திருக்கையில் நான் அவளுக்குத் தீபாராதனை செய்கையில், தேவி என்னை மாத்திரம் ஓரக்கண்ணால் பார்க்கிறாள். அவளுடைய வைரமூக்குத்தி எனக்காகத்தான் மின்னிடுகிறது. இத்தனை அலங்காரங்களுடன் எல்லோரும் அவளைத் தரிசிக்கையில், ஒருவிதமான அணியுமில்லாமல் அவளை நான் அறிவேன். எனக்கும் என் அம்பாளுக்குமிடையில் ஒருவிதமான மறைப்பும் கிடையாது. மறைக்க என்ன இருக்கிறது?

மூன்று கால பூஜையை நானே ஆறு காலமாக்கினேன். நான் பணிவிடை செய்யும் அம்பாள் என்றும் என்னேரமும்

பளிச்சென்றிருப்பாள். என் உள்ளத்தில் படர்வாள். அவளை நான் நினையாத நேரமில்லை.

* * *

இருந்தும் என் மனைவிமேல் இருந்து புழுத்துப்போன ஆசை என் மூளையைக் குடைகையில் நான் தவிக்கிறேன்.

துரோகி.

நான் அம்பாளைத் துரோகம் செய்யேன். நானே அவள். அவளே நான். நான் முக்தன்.

நான் தெளிந்த பிறகும் எனக்கு ஏன் உடலும் உள்ளமும் குளிரவில்லை?

இன்னேரம் நாடகம் நடந்துகொண்டிருக்கும்.

**''கழுத்தில் விழுந்த மாலை கழற்ற முடியவில்லை**
**நற்காரிகையே வகையறியேனே...''**

'அம்பா! என் நெஞ்செல்லாம் நெருப்பாய் எரிகிறது. நீ இதற்கு ஒரு வழி சொல்லு!''

அவள் என்னை மௌனமாய் நோக்குகிறாள்.

என்னெஞ்சில் எரிவது நஞ்சு.

நான் நஞ்சுண்டவன்.

சிவன்.

* * *

மறுபடியும் மாலை நேரம்.

தீபாராதனைக்கு இன்னமும் கொஞ்சநேரமிருக்கின்றது.

நெஞ்சக் கனலைத் தணிக்கவேண்டி நந்தவனத்தில் போய் நின்றேன்.

புதர்கள் முழங்கால் உயரம் நின்றன.

செடிகள் ஆள் உயரம். அவைமேல் பூக்கள் அடர்ந்து ஆடின.

'கிளுக்' யாரோ சிரிக்கிறார்கள்.

இப்பூக்களா சிரிக்கின்றன? உற்று நோக்கினேன். யாரோ ஓடும் சப்தம். ஒரு கூந்தல் தலைதெரிந்தது. எடுத்துக்கட்டிய பின்னலில் சிவப்பு ரிப்பன் துருத்திக் கொண்டு நின்றது.

பின்னாலேயே ஒரு கிராப்புத் தலை.

நான் இன்னமும் முகத்தைப் பார்க்க முடியவில்லை. செடிகள் மறைத்தன.

ஒருகண நேரம் ஒரு பூவின் அடித்தண்டில், ஒரு கரம் தயங்கி நின்றது. ஆண் கரம். மறுகணம் கரமும் பூவும் மறைந்தன

கூந்தலைக் கிராப்பு துரத்தியது. இருவர் சிரிப்பும் என் நெஞ்சைச் சுறீலெனச் சுட்டது.

எடுத்துக் கட்டிய பின்னலில், துருத்திக்கொண்டிருக்கும் சிவப்பு ரிப்பனை ஒட்டினாற்போல், கொய்த பூ ஏறுவதைக் கண்டேன். அம்பாளின் பூ...

தீபாராதனைக்குக் கோவில் மணி அடிக்க ஆரம்பித்து விட்டது.

*　　　*　　　*

நான் ஒன்று மூன்றானேன்.

என் கைகள், என் கண்கள், நான்.

என் கைகள் தீபங்களை எடுத்துத் தேவிக்குக் காட்டு கின்றன.

என் கண்கள் குழுமியிருக்கும் கூட்டத்தில் அவ்விருவரை யும் தேடுகின்றன.

நான் என்னிடம் இருக்கிறேன்.

அவர்கள் சற்று நேரம் பொறுத்து வந்தார்கள். இன்ன மும் இருவர் முகத்திலும் சிரிப்பு. ஒரு சிறு கள்ளத்தனம். பெண்கள் நிற்கும் பக்கமாய் அவள் போய்ச் சேர்ந்தாள்.

கூட்டத்தைத் தள்ளிக்கொண்டு முன்னால் வந்து அவன் நின்றான், கைகளை வெகு பக்தியுடன் கட்டிக்கொண்டு.

அவனை என் கண்கள் நன்றாய்க் கவனிக்கின்றன. அவன் முக லக்ஷணங்களைத் தனித் தனியாய்ச் சோதிப்பதில் ஒருவிதமான ஆவலும் நேரிடுகின்றது. அச்சோதனை என் உள்ளத்தில் ஒரு புதுப் பொறியையும் வைக்கின்றது

அவனைப் பார்த்துவிட்டு அம்பாளை நோக்குகிறேன். அம்பாள் என் உடலில் ஒரு சக்தியைப் பாய்ச்சுகிற மாதிரி நான் உணர்கிறேன். என் மனப் பிராந்தியோ என்னவோ என் உடல் பரபரக்கிறது. என் உடல் தழல்போல சிவக்கிறது. அவளிடமிருந்து நான் ருத்ராம்சத்தைப் பெறுகையில், நான் தேஜோமயமாகி விடுகிறேன்.

நான் இப்பொழுது பீமன்.

வேறு உணர்ச்சிகளின் கலப்பற்ற சுத்தமான கோபாவேசத்திற்குள் நான் புகுகையில், அதுவே ஓர் ஆனந்தமாய்த் தான் இருக்கிறது; ஒரே பரவசம்...

தாம்பாளத்தையெடுத்துக்கொண்டு கர்ப்ப க்ருஹத்துள் நுழைகிறேன். மளமளவென்று தேவியின் நாம மந்திரங்கள் என் வாயினின்று கொட்டுகின்றன. கற்பூரத்தை ஏற்றிக் காண்பித்துவிட்டு, குங்குமத்தை இட்டுக் கொள்கிறேன். அப்படியே கூட்டத்தின் பக்கம் திரும்புகிறேன். என் உடலில் புதிதாய்க் கண்டிருக்கும் வெறி சஹிக்க முடியாத ஆனந்தமாயிருக்கிறது. அவனை என் கண்கள் தேடுகின்றன. அங்குதான் நிற்கிறான், கையைக் கூப்பிக் கொண்டு கழுத்தை நீட்டிக்கொண்டு, பலி மாதிரி.

தாம்பாளத்தை வீசுகிறேன்...

நான் இப்பொழுது கிருஷ்ணன்.

சக்கரம்போல் சுழன்று கொண்டே போய் அது அவன் கழுத்தில் போய் இறங்குகிறது.

ரத்தம்...

ஒரே கலவரம். அவன் பக்கமாய்ப் பத்துபேர் ஓடுகின்றனர். பலபேர் கத்திக்கொண்டு வெளியே ஓடுகின்றனர். என்னை நோக்கிப் பத்தாயிரம்பேர் ஓடிவந்து என் மேல் விழுகின்றனர்.

நான் இறந்து போனேன்...

* * *

நான் எங்கு போகிறேன் என்று எனக்குத் தெரியவில்லை. ஏதோ சுழல் என்னை வெகு வேகமாய் இழுத்துச் செல்கிறது. ஒரு சமயம் ஒரே பாதாளம், ஒரு சமயம் ஒரே ஆகாயம், கடல்கள், மலைகள், மேகங்கள்...

திடீரென்று என்னைச் சுற்றிலும் ஒரே வெண்மை. ஆட்டு ரோமம்போல், தூய, மிருதுவான வெண்மை.

நான் கைலைக்கு வந்திருக்கிறேன். மலைமேல் சுவாமி. வெகு வேகமாய் நான் மேலே மிதந்து செல்கிறேன். லிங்கத்துக்கெதிரில் என்னை ஏதோ நிறுத்துகிறது. என்னால் அசைய முடியவில்லை, அசைக்க முடியவில்லை.

மலைபோன்ற லிங்கத்தைத் தேவி ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு இருக்கிறாள். என் அம்பாள்.

''அம்பா...!''

அவளிடம் என் கைகளை நீட்ட முயல்கிறேன். முடியவில்லை.

ஆனால் அவள் முகத்தில் கனிவில்லை. அதில் நான் காணும் கோபமும் கொடூரமும் என்னைத் திடுக்கிடச் செய்கிறது.

'இதோ இவன்தான்!' என்று அவள் என்னைப் பார்த்துச் சீறுகிறாள். அந்த லிங்கம் வேரோடு பெயர்ந்து என்மேல் சாய்கிறது. அந்தப் பயங்கரம் தாங்க முடிய

வில்லை. என் வாயிலிருந்து கத்தல் வரமாட்டேனென்கிறது. மூச்சுத் திணறுகிறது. கையையும் காலையும் உதைத்துக்கொள்கிறேன். என் கண்கள் மூடிக்கொள்கின்றன. ஒரே இருட்டு. நான் எங்கோ படு ஆழத்துக்குப் போகிறேன்...

என்னினைவு என்னிடம் வந்தபோது, என்னை ஒரு கட்டிலில், தோல்வார் போட்டுக் கட்டியிருக்கிறது. என்னைச் சுற்றி நாலைந்துபேர் நிற்கின்றனர். அவர்கள் பார்வையும் கைகளும் பயமாயிருக்கின்றன. கண்ணை மூடிக்கொள்கிறேன்.

என் செவியில் மாத்திரம் சில வார்த்தைகள் விழுகின்றன.

''ஆபத்தான கேஸ்... இப்போதைக்கு, கம்பிபோட்ட அறையில், சங்கிலி போட்டுக் கட்டிவையுங்கள்...''



# கிரஹணம்

அவளுக்கு வரவே பிடிக்கவில்லை. ''நான் இங்கேயே குழாயில் இரண்டு சொம்பு ஊற்றிக்கொண்டு விடுகிறேன். நீங்கள் போய் வாருங்கள்'' என்றாள். ஆனால் அவர்தான் கேட்கவில்லை.

''சூரிய கிரஹணம் சும்மா வருவதில்லை. தம்பதி ஸ்னாநம் ரொம்பப் புண்ணியமாக்கும். உனக்கு என்ன தெரியும்?''

ஆம்; அவளுக்குத் தெரியாது. ஆனால் அவருக்குத் தெரிய நியாயமுண்டு. இதுவரை இரண்டு மனைவியரை சமுத்திர ஸ்னாநத்திற்கு அழைத்துப் போயிருக்கிறார். இவள் மூன்றாமவள்.

சமுத்திரம் சீறினால் எவ்வளவு பயங்கரமாக இருக்கும் என்றும் அவளுக்குத் தெரியாது. அந்த சுழிப்பும், வெறியும் அவள் கற்பனையையும் மீறியது. அவள் பட்டிக்காட்டுப் பெண். அவள் ஊரில் ஒருகுளம் உண்டு. பட்டணத்திற்கு வந்த புதிதில், கடல், அக்குளத்தைப்போல் ஒரு ஆயிரம் குள அகலமிருக்கும் என்று நினைத்திருந்தாள்.

ஆயினும் இம்மாதிரி ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிவரை வியாபித்த இப்பெருவெகுளிக்கு அவள் ஒரு நாளும் தயாராயில்லை.

கடவுள் வகுத்த வரையை மீற இயலாது. ஆங்காரம் பிடித்த குழந்தை தன் ஆத்திரத்தைத் தன்மேலேயே

தீர்த்துக் கொள்வதுபோல், சமுத்திரம் பொங்கிப் புழுங்கிப் பெருகியது. அலைகளுக்கப்பால் கடல் ஜலம் பெருமூச் செறிந்து கொண்டு விம்மி வடிந்தது. அதன் மனத்தின் கரிப்பு அதன் உப்பில் துப்பிற்று.

அலைகள்—

அத்துமீறிய மகன், அப்பனின் முகத்துக்கெதிரில் முஷ்டியையாட்டிப் பழிக்கும் லக்ஷணமாய், மங்கிச் சலித்த சூரியனைச் சண்டைக்கிழுப்பதுபோல், எட்டி எட்டி ஆர்ப்பரித்தன. அடிக்க ஓங்கிய கைபோல், ஒவ்வொரு அலையும் அதன் முழு வீச்சுக்கு உயர்ந்தபின், நடுவில் பிளந்து அதினின்று வெண்ணுரை சொரிந்தது. அவை கரையண்டை வரும்போதே வாரி வாயில் போட்டுக்கொள்வதுபோல்தான் வந்தன. அவை எழும்பிவரும் பயங்கரத்தைக் காணச்சகிக்காமல் அவள் பின்னடைந்தாள். ஆயினும் அவள் கணவன் அவள் கையைப் பிடித்து அலைப்புறமாய் இழுத்தார். அன்றுதான் புதிதாய்ப் பார்ப்பதுபோல், பயத்தால் வெறித்த அவள் கண்கள், அவள் கையைப் பிடித்த அவள் கணவன் கைமேல் பதிந்தன. ரொம்பவும் வயதாகாவிடினும் அவர் கையில் சதைசுண்ட ஆரம்பித்துவிட்டது. எலும்பும் நரம்பு முடிச்சுமாய் அவர் பிடி, சாவின் பிடிபோலவேயிருந்தது.

"அடி அசடே —என்ன பயம்? இத்தனை பேர் குளிக்கல்லே?"

ஆம்; எத்தனை பேர்! எத்தனை தலை, எத்தனை கை, எத்தனை உறுப்புக்கள்! பலநாளின் விரகத்தை ஒரே நாளில் தணித்துக் கொள்வது போல் அலைகள்-கடலின் அத்தனை கைகள்போல், குளிப்பவரைத் தூக்கித் தரையில் விசிறியெறிந்து, ஆடைகளை அலங்கோலமாக்கி அணைத்தன. ஆடை நனைந்ததுமே அவரவர் உடலின் உருவகம் வெளிப்பட்டது. ஆனால் அவளைத் தவிர மற்றவர் அத்தனை பேரும் கிரஹண ஸ்நானத்தை அனுபவித்த வண்ணமாய்த் தானிருந்தனர். "குக் குக்குக்கூ— கெக்கெக்

கெக்கே'' எனும் அவர்களின் சிரிப்புதான் அவர்களின் குலைந்த மானத்தை மறைக்க முயன்றது.

''என்னை விட்டுடுங்கோ—நான் கரையிலேயே வெறு மென தீர்த்தத்தைத் தெளித்துக் கொண்டு விடுகிறேன்—''

''பைத்தியம்...நாட்டுப்புறம்! இங்கே வந்து ரகளை பண்ணி மானத்தை வாங்கறது—''

''நான் மாட்''

வார்த்தை முடியவில்லை. அதற்குள் ஒரு அலை அவள் மேல் இடிந்து விழுந்து விட்டது. 'வீல்' என்று தொண்டை யினின்று எழுந்த வீறல் அப்படியே அமுங்கிப் போயிற்று. அலை வந்து விழுந்த வேகத்தில் அவள் கணவனின் பிடி யினின்று அவளைப் பிடுங்கி, தன் வழியே அவளை இழுத்துக் கொண்டு போயிற்று.

அவளுக்கு எப்பவும் அச்சங்கலந்த ஒரு சந்தேகம் உண்டு. சாகுந்தறுவாயில் எப்படியிருக்கும்? அச்சமயம் மனம் எதை வேண்டும்? அவளுக்கு இப்பொழுது ஒன்றுதான் வேண்டும். மூச்சு.

அலை ஜலம் அவளை மேலும் கீழும் நாற்புறமும் சூழ்ந்து, வாய் கண் மூக்கிலேறி அமிழ்த்துகையில் அவள் வேண்டுவது மூச்சு—மூச்சு—மூச்சு—ஒரு நூலளவாயினும் மூச்சு!—அவள் தான் இறந்து போய் விட்டதாகவே நினைத்துக் கொண்டு விட்டாள். அலைகடைந்து கலங்கிய அடி வண்டல் வெள்ளத்தில் அவள் கண்ணெதிரில் பல்லாயிரம் மணல்கள் பல்லாயிரம் உயிர் பெற்று நீந்தின.

செத்த பிறகும், ஒரு நூலளவு மூச்சுக்கு உயிர் ஊச லாடுமோ? கறுப்புக் கடிதாசுக் கூட்டுக்குள் எரியும் கைவிளக்குப் போல், சாவின் அந்தகாரத்துள் உள் நினைவி ருந்து கொண்டு, ஒரு இழை—ஒரே இழை மூச்சுக்குத் தவிக்குமோ?

அவள் கைகள், அந்நூலிழை மூச்சையே தேடி, மூடி மூடித் திறந்தன. கண்ணிலும் வாயிலும் மூக்கிலும் அடைத்துக் கொண்டு உயிரையே குடிக்க முயன்ற ஜலத்தை உதற முயன்றாள், ஆனால் சமுத்திரம் அவள் அவஸ்தைக்கு இரக்கம் பார்க்கவில்லை. அதன் பெரும் கோஷம் ஒரு பெரும் சிரிப்பாயிருந்தது. அவளடியில் மணலைப் பறித்து அவளைத் தன் வழியே இழுத்தது. அப்படி அதன் வழியே உழன்று செல்கையில், சாவின் வழியே தான், ஆயிரம் மைல் போய் விட்டாற் போலிருந்தது. ஆனால் இம்மூச்சு?

மூச்சு! ஐயையோ ஒரு மூச்சே......

ஒரு யுகத்தின் முடிவில், தவிக்கும் கையில் ஒரு பிடி தட்டியது. தலையை முழுக்கிய அலை கழுத்தளவு வடிந்து சில்லென்று காற்று முகத்தில் மோதிற்று. இதென்ன பிரயாணம் முடிந்து, செத்தவர்களின் உலகத்திற்கு வந்து விட்டோமா? கண்ணைத் திறக்க முடிந்த பிறகு தான், தான் செத்துப் போய் விடவில்லை என்று அவளுக்குத் தெரிந்தது. எந்த உலகத்தில் அவள் முழுகினாளோ அதே உலகத்தில்தான் முழுகியெழுந்திருக்கிறாள். சுற்று முற்றும் அதே ஜனங்கள் தாம் ஸ்நானம் பண்ணிக் கொண்டிருந்தனர். அதே துணிகலைந்த மார்புகளும், ஆடை நெகிழ்ந்த இடைகளும், நாண மற்ற கொக்கரிப்பும் கூக்குரல்களும்.

ஆனால் அவள் கையை அவள் கணவன் பிடித்துக் கொண்டிருக்கவில்லை. அவள் உடலும் உள்ளமும் பதறிற்று. முன்பின் அறியாத எவனோ பிடித்துக் கொண்டிருந்தான்.

அவன் தலையில் குட்டையாய் வெட்டிய மயிர் சிலிர்த்து நின்றது. புஜங்களும் மார்பும், அலையும் கடலில் குளிக்கும் பயிற்சியில் புடைத்துப் பூரித்திருந்தன. முகம் ரத்த ஓட்டத்தின் வேகத்தில் சிவப்பேறியிருந்தது. ஜலம் உடல் மேல் முத்து முத்தாய்த் துளித்து நின்றது. சிவந்த கண்களில் குறும்பொளி வீசிற்று. பென்சிலால் கீறியது

போல் ஒழுங்காய் ஒதுக்கிய மீசையினடியில் சிரிப்பில் அகன்ற வாயில் பற்கள் வரிசையாய் ஒளி வீசின. அவன் சிரிக்கையில், உரமேறி அகன்ற வாய் நரம்புகள் இறுகி கன்னத்தில் குழி விழுந்தது.

அவன் பிடி உடும்புப் பிடியாயிருந்தது.

''என்னை விடுடா பாபி—'' என்று கூவ வாயெடுத்தாள். அதற்குள் மறுபடியும் ஒரு அலை ஒரு வண்டி செங்கல் போல் அவள்மேல் சரிந்தது. அலை அவளை அழுத்தும் வேகத்தில், சமுத்திரத்தின் ஆழத்தையே அவள் அறிந்து விடுவாள் போலிருந்தது. கிணற்றுள் எறிந்த கல் போல் அவள் பாட்டுக்கு அழுந்திக்கொண்டே போனாள். ஆனால் அவளைப்பிடித்த கைமாத்திரம் பாதாளக் கொலுசு மாதிரி அவளை விடாது பிடித்துக் கொண்டிருந்தது. இதென்ன மாயமா மந்திரமா? அந்தக் கை, கடல் எவ்வளவு ஆழமாயினும் அவ்வளவு தூரம் நீளுமா?

தொண்டையில் முள்மாட்டிக் கொண்டபின், மீன் ஓட ஓட நீளும் தூண்டிற் கயிறுபோல், அத்தனை ஆழத்திற்கும் அந்தக் கை இடம் கொடுத்துக் கொண்டே போயிற்று. அவளால் தப்பவே முடியவில்லை. ஆனால் தப்பவேணும் எனும் எண்ணம் உண்டோ எனும் சங்கை அவளுள் அவளுக்கே எழுந்தது.

கிறு கிறுவென்று மனம் மாத்திரம் அவள் படும் அத்தனை அவஸ்தையிலும் அதிவேகமாய் வேலை செய்து கொண்டேயிருந்தது. மேன்மேலும் பழைய ஞாபகங்களும் புதிய நினைவுகளும், ஒன்றுக்கொன்று ஒவ்வாத எண்ணங்களும் விசித்திரமாய், அடுக்கடுக்காய்ப் படர்ந்து கொண்டே போயின. பலவர்ண நூல்கள் ஒன்றேறிய சிக்குப் போல் இருந்தது அவள் மனம்.

சாவு அவ்வளவு சுலப சாத்தியமாயில்லை. சாகத் துணிவெல்லாம் சமுத்திரக் கரை மட்டும் தான். சமுத்திரத்திலில்லை.

சாவு அவள் விரும்பவில்லை.

அவளுக்கு எதிலும் விருப்பமில்லை.

என்ன காரணமோ தெரியவில்லை. கலியாணமான பிறகு அவள் தன்னூருக்குப் போக நேர்ந்து, ஒரு நாள் குளத்துக்குக் குளிக்கப் போன இடத்தில், ஒரு கூழாங்கல்லைப் பொறுக்கியெடுத்த சம்பவம் நினைவு வந்தது. உருண்டையாய் ஒரு பெரிய எலுமிச்சம் பழ அளவிற்கு வழு வழுத்து, கெட்டியாய்ச் சில்லென்று வெளுப்பாய்......

அவளுக்கு அப்பொழுது திடீரென்று ஒரு எண்ணம் தோன்றிற்று. அவள் இதயம், அதே மாதிரி ஒரு விதமான உணர்வுமில்லாது உறைந்து போய்விட வேண்டுமென்று. அவளுக்குக் கலியாணமானதிலிருந்து எதைக் கண்டாலும் அவ்வளவு வெறுப்பேற்பட்டது.

இத்தனைக்கும் அவள் கணவன் வெகு நல்லவர் என்று அவளுக்குத் தெரியும். அவள் வார்த்தைக் கெதிர்வார்த்தை சொன்னதில்லை. இருந்தும் அவரைவிட யாரையேனும் அதிகம் வெறுத்தாளெனில், ஊர்வாய்க்குப் பயந்து தன்னை இளையாளாய்க் கட்டிக் கொடுத்துவிட்ட தன் தந்தை தாயைத்தான். எல்லாவற்றையும்விடத் தன்னையே வெறுத்தாள். என்ன-எப்படியென்று சரியாய்த் தெரியாவிட்டாலும், தன்னை ஏதோ கட்டிக் கொடுத்து விட்டாற்போல் அவளுக்கு எல்லோர் மேலேயும் துவேஷம் விழுந்துவிட்டது.

உலகில் பெண்ணாய்ப் பிறந்த ஒரு காரணத்தாலேயே, இத்தனைக்கும் அடிப்படையாயிருக்கும் தன்னையே அவள் வெறுக்கும் பயங்கரம்- இப்பொழுது ஜலத்தடியில் மூச்சுத் திணறுகையில் பளிச்சென்று தெரிந்தது.

வாத்தியத்தின் தந்திகளுள் புதைந்த சங்கீதம் போல், தனக்குள் தான் பத்திரமாயிருக்கத்தான் அவளுக்கு இஷ்டம். தன்னைத்தானே கண்டு பிடிக்காதபடி, தன் உள் தாபத்தைத் தன்னுள் புதைத்துவிட வேண்டும். அப்பொழுதுதான்,

உலகத்தாருடன் ஒத்திருக்கலாம். தெய்வ பயமற்றிருக்கலாம். கணவன் கைபிடித்து ஸ்நானம் செய்து புண்ணியம் தேட வந்த இடத்தில், வேண்டியோ, வேண்டாமலோ பரன் கைபிடித்து ஸ்னாநம் பண்ணி நரகத்தைத் தேடிக் கொண்டிருந்தாலும், மனம் சிணுங்காதிருக்கலாம்.

என்னவிருந்தாலும் கிராமாந்தரத்திலிருந்து வந்தவளாதலால் தெய்வ பயம் மாத்திரம் அவளுக்கு உண்டு. அவள் கணவனை வெறுப்பதே அவளுக்கு பயமாயிருந்தது. நினைத்து நினைத்து மனம் புழுங்கினாள். மொத்தத்தில் நினைப்பு எனும் வினையே அலுப்பாயிருந்தது. கிராமத்தில் நினைக்க வேண்டிய காரியமே ஒன்றும் கிடையாது. எல்லாம் உணர்வுதான். காலையில் சாணி தெளிக்க எழுந்தது முதல், இரவில் மாட்டுக்கு வைக்கோலைப் போட்டுவிட்டு படுக்கும் வரை, இடுப்பொடிய வேலை இருப்பினும் ஏதோ ஒரு மஹாபோதை வசப்பட்டவர்போல், அவரவர் ஒருவருக்கொருவர்கூட அதிகமாய் வார்த்தையாடாமல் அவரவர் ஜோலியில், அழுந்தியிருப்பர். அங்கு நினைப்பிற்கு நேரம் கிடையாது. ஆனால் இங்கு வந்த பிறகு தன்னினைவே தன்னைச் சுற்ற, அதில் உழன்று அவள் தவித்தாள்.

அவள் மேல் விழுந்த அலை வடிந்து பின்வாங்க ஆரம்பித்து விட்டது. அதுவும்தான் அவளைக் காட்டிக் கொடுக்கப் போகிறது என்று அவளுக்குத் தெரியும். தலைமயிர் பிரிபிரியாய்த் தொங்க, ஆடை உடலோடு ஒட்டிக்கொண்டு, இறக்கையும் சிறகும் பிய்த்தெறிந்த கோழிக் குஞ்சுபோல் அவலக்ஷணமாய், வெடவெடவென்று குளிரில் உதறிக்கொண்டு, தன்னைக் காணத் தனக்கே ஏற்படும் வெட்கத்திலும் வெறுப்பிலும் குன்றிப்போய் நின்றாள்.

அவன் கண்களில் இரக்கக்குறி ஏதும் காணோம். குறும்பு கலந்த வியப்பும், ஒரு அடிப்படையான ஆண் குரூரமும், பொறுமையற்றுச் சுளித்த ஒரு சிறு கோபமும்தான் தெரிந்தன.

அவள் கணவர், சுட்டகத்திரிக்காய் போன்று வதங்கிய சிறு தொந்தி தெறிக்க பதறியோடி வந்தார்.

''என்னடீ எங்கே போயிட்டே! உன்னை அலை வாரி யடித்துக்கொண்டு போய்விட்டதோ என்று பயந்து விட்டேன்— அப்பாடி!—''

''இது யார் உங்க பெண்ணா? இந்த அம்மா சாக விருந்தாங்க. நல்ல வேளையாய் நான் பார்த்தேன். என்ன இந்தமாதிரி அஜாக்கிரதையாய் இருக்க—?''

திடீரென்று அவளுக்குச் சிரிப்பு பீறிட்டுக்கொண்டு வந்தது. அடிவயிற்றைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு இடி இடியென்று சிரித்தாள்; இருவரும் அவளை ஆச்சரியத் துடன் நோக்கினர்; அச் சிரிப்பைத் தொடர்ந்தாற் போலேயே அழுகையும் வந்தது. இதயமே வெடித்துக் கொட்டுவது போன்ற அழுகை. காற்றின் வயப்பட்ட சருகு போல் உடலை உச்சந் தலையினின்று உள்ளங்கால்வரை உலுக்கும் அழுகை.

''நா—ஆ—ஆன்—சமுத்—திரஸ்நா—ஆ—ஆநம் செய் தது—போ—ஓ—ஓ—தும்—என்னை— ஐ—ஐ—சீக்கிரம்—வீ-ஈ—ஈட்டுக்கு—அழை—ஐ—ஐச்சு—ண்டு போய்—ய்—ய்—ய்ச் சேருங்கோ—ஓ—ஓ–''

□□□

# பகல் கனவு

நாலு பேர் மாதிரி எனக்கு வாக்கு சாமர்த்தியம் போத வில்லை; ஒன்றுமில்லாததைச் சில பேர் எவ்வளவு ரசமாய், காது, கண், மூக்கு வைத்து 'ஜோடனை' பண்ணி, நேரில் நடப்பது போலவே சொல்லிக் காண்பித்து விடுகிறார்கள்! கேட்பவருக்கு மெய்சிலிர்த்து விடுகிறது.

எனக்கோ அதுதான் சூன்யமாயிருக்கிறது. மண்டை யிலும் மனதிலுமிருக்கும் வேகத்தில், கால்பங்கு கூட வாய் வார்த்தையில் வரமாட்டேனென்கிறது. ஆனால், எனக் கென்னவோ அப்படித் தோன்றவில்லை. என் மனவேதனை இன்னமும் தணியவில்லை.

ஒன்றுமில்லை. பஸ்ஸில் போய்க் கொண்டிருந்தேன்.

ஆபீஸுக்குப் போய்க் கொண்டிருந்தேன்.

எங்கே போனாலென்ன, வந்தாலென்ன, அதில் ஏதாவது அர்த்தமிருக்கிறதா?

நான் என்னவோ சாதாரண மனிதன்தான். காலையி லெழுந்தால் காப்பி-அப்புறம் மார்க்கெட்-ரேஷன் அரிசி அதற்குமேல் அவசர அவசரமாய் ஆபீஸ்; திரும்பி வந்தா கடற்கரைக்குப் போய்க் காற்று வாங்குதல், வீட்டுக்கு வந் தால் நேரமாய் வந்தேனென்று வசவு வாங்குதல்—சாப்பிடு தல், தூங்குதல்-திருப்பித் திருப்பித் இதேதான். இதிலிருந்து தப்ப வழியில்லை. இந்த தினச்சூழலில் ஏதேனும் மாறுதல் ஏற்பட்டால், எனக்குத் திருப்திதான். ஆனால், எப்படி

ஏற்படும் மனைவிக்கு மடியை விட்டு இப்போதுதான் ஒரு குழந்தை இரங்கிற்று, வாசலில் போய் மண்ணைத் தின்று கொண்டு விளையாட. இராத் தூக்கத்தை அழுது கெடுக்க, இடுப்பில் ஒரு குழந்தை. மனக்கவலை ஓயாதிருக்க, வயிற்றில் ஒரு வித்தோ என்று மூன்று மாதங்களாய்ச் சந்தேகம். இத்தனை பாரங்களைக் கழுத்திலே கட்டிக்கொண்டு, மேலே இறக்கையும் கட்டிக்கொண்டு பறப்பதென்றால், எப்படி முடியும்?

ஆகையால், இப்போது என்ன சொல்ல வந்தேன்? பஸ்ஸில் போய்க் கொண்டிருந்தேன்.

இந்தக் காலத்தில் பஸ்ஸில் போவதென்றால்தான், என்ன என்று தெரியுமே! ஒவ்வொரு வண்டியும் ஒரு மகாமக உற்சவம்—சினிமாக் கொட்டகையின் புதுப் படத்தின் முதல் நாள் கூட்டம். உள்ளே புகுவதே பிரயாசை—புகுந்து தோல் வாரைப் பிடித்துத் தொங்க இடம் கிடைப்பதே துர்லபம். உட்காரவே இடம் கிடைத்துவிட்டால்... அடேயப்பா!

நான் உட்கார்ந்து கொண்டிருந்தேன்.

"லொடக்—லொடக்—லொடக்"

பஸ் ஓர் இடத்தில் நின்றது. வெளியிலிருந்து ஒரு கும்பல் அலைபோல் உள்ளே மோதியது. என் பக்கத்தில் ஒருத்தி வந்து உட்கார்ந்து நெறித்தாள்-நெளிந்தாள்.

நிறம் கறுப்பென்றே சொல்லலாம்? சிறிசு, பதினெட்டு, இருபது தானிருக்கும். காதில் 'பளீர், பளீர்' என்று சுடர் விடும் இரு வெள்ளைக்கல் 'டோலக்'குகள், கழுத்தில் ஸன்னமாய் ஒரு தங்கச் சங்கிலி. நெருக்கமாய் நெய்யாத நீலப் புடவையில் சிவப்புக்கரை. குறுகுறு என்று முகத்தில் களை.

முறைத்துப் பார்க்கும் எண்ணத்துடனேயே, ஓர் ஆளை உன்னிப்பாய்ப் பார்க்கவேண்டிய அவசியமில்லை. கழுதை கூடத்தான் கோவில் சுவரை முறைத்துப் பார்த்துக்கொண்டு நிற்கிறது. அதனால் அது சிற்பங்களைப் பற்றிச் சிந்திக்கிறது

என்று அர்த்தமா? மனத்தில் எத்தனையோ குருட்டு யோசனைகள், கோட்டைகள், ஆகாசப் பந்தல்கள். அவள் எவளாயிருந்தால் எனக்கென்ன? வணிகச்சியோ, கிருஸ்து வச்சியோ, பிராமணத்தியோ?

ஆனால், அவள் என் மடியில் செத்தாள்.

எனக்கே தூக்கிவாரிப் போடுகிறது. திடீரென்று அவள் முகம் வெளிறிட்டது. கண்கள் பெரிதும் விரிந்து மலர்ந்து, விழிகள் சுழன்றன. தலையாடியது. துவண்டு அப்படியே குப்புற என் மடியில் சாய்ந்தாள்.

நான் 'ஓ' என்று கத்திவிட்டேன். அவளை என் மடியில் நிமிர்த்திப் புரட்டினேன். கைநாடியைப் பிடித்துப் பார்த் தேன்.

ஊஹூம், பேசவில்லை...! விழிகள் செருகின.

மாரடைப்பு. இதற்கு வேளையுண்டா, காரணமுண்டா? வண்டியில் நேரிட்ட குழப்பத்தைக் கேட்கவும் வேண்டுமா; வண்டி நின்றுவிட்டது.

வண்டியில் எங்கேயோ ஒரு மூலையிலிருந்து அவள் புருஷன் கூட்டத்தைத் தள்ளிக்கொண்டு பாய்ந்து வந்தான். வண்டியில்தான் மகத்தான கூட்டமாயிருக்கிறதே! யாராரோ எங்கெங்கோ அகப்பட்ட இடத்தில் உட்காரவோ, நிற்கவோ, வாரைப்பிடித்துக் கொண்டு தொங்கவோ, தொற்றிக் கொள்ளவோ வேண்டியதுதானே!

அவனும் சின்னப் பையன்தான். இருபத்தைந்து வயது இருக்குமா?—சிவப்பாய், மூக்கும் முழியும், அரும்பு மீசை யுமா யிருந்தான். சரியான ஜோடிதான்.

மார்பில் கைவைத்துப் பார்த்தான்.

என்ன பிரயோஜனம்? பட்சி எப்போதோ பறந்து விட்டது. என் மடியில் சடலம்.

''ஜட்கா!—ஜட்கா!!''

''டாக்ஸி!—டாக்ஸி!!—டாக்ஸி!!!—''

அவசரத்துக்கு ரிக்ஷாதான் அகப்பட்டது. ஆபீஸுக்கு அரைமணி 'லேட்'. முதலாளியுடன் சற்று மனஸ்தாபம்.

வேலை இடுப்பை ஒடித்தது. மனம் வேலையில் ஓட வில்லை; ஒரு நிலையில் நிற்கவில்லை. எல்லாவற்றையும் மூட்டை கட்டி வைத்துவிட்டு, ஏதோ ஒரு சாக்குச் சொல்லி விட்டு, மூன்று மணிக்கே படியைவிட்டு இறங்கிவிட்டேன்.

சட்டைப் பைகளில் கையைத் திணித்துக்கொண்டு அப்படியே கடற்கரைப் பக்கமாகப் போனேன்.

மணலும் நீலக்கடலும் தகதகத்தன. வெயில் முதுகுத் தோலை உரித்தது.

குளு குளு என்று பசுமை ததும்பும் சரீரம். இன்னமும் குடும்பத்தில் அடிபட்டு வாடி வதங்கவில்லை. புதுக்குடித் தனத்தின் சுகவேதனையில் துடிக்கும் சரீரம்—என் மடியில் அவள் மடிந்தாள்.

இந்த மனத்தின் நிலையை ஒவ்வொரு தடவை என் னென்று சொல்வது? காரணமற்ற கிலேசம்; அதில் ஓர் இன்பம். கடுகடுக்கும் தனித்தொழுகும் ஒரு தித்திப்பு.

கரையோரமாய் நடந்துகொண்டே போனேன். அலை கள் வந்து காலைக் கழுவின.

அம்மாதிரி என் மனத்தின் கனத்தைக் கழுவுமா அவை? கரையோரமாய் நடந்துகொண்டு, நடந்ததையெல்லாம் மறுபடியும் மன அரங்கில் ஒருமுறை நடித்துக் கொண்டேன்.

அவள் கன்னத்தைத் தொட்டேனா? ஆம், தொட் டேன், சூடு இருக்கிறதோ என்று பார்க்க. சூடு அதற்குள் தணிந்துவிடுமா என்ன, மாரடைப்பில் செத்தவளுக்கு? சந்தனம் போல் வழுவழுத்த கன்னங்கள்கூட மாறவில் லையே! முன் மயிர் மாத்திரம் கொஞ்சம், இரண்டு பிரிகள், கலைந்திருந்தன. கோணல் வகிடோ, நேர் வகிடோ? இல்லை, அதுதான் சரியாக ஞாபகமில்லை. இருந்தால்......

இருந்தால்??... இருந்தால் என்ன? தெரிந்து என்ன ஆக வேண்டும்?. எவளா யிருந்தாலென்ன? எங்கே யிருந்தோ வந்து, வேளை நெருங்கியதும் என்னிடம் சாகவேண்டு மென்றே வண்டியில் ஏறி, நேரே என் மடியில் விழுந்து செத்தாள். ஏதோ முன்ஜன்மத்தின் பிணைப்பு. கொண்டவன் மடியில் சாகிறதுதானே...?

விதி! ஆம், இதுதான் விதி!

அவ்வளவுதான். என் மனதில் அவளையும் என்னையும் வைத்து நான் புனைந்த கதை வாய்வார்த்தைக்கும் வராது. ஏட்டிலும் ஏறாது. அது ஓர் எழுதாத காவியமாய் மாறியது. சகுந்தலை—துஷ்யந்தன், நளன்—தமயந்தி, சாவித்திரி—சத்யவான், பிருத்விராஜ்—சம்யுக்தை இவர்களைப் போன்ற மற்றவருடன் நாங்களும் சேர்ந்துவிட்டோம்.

இந்தக் காவியத்தில், நான் மணம் செய்துகொண்டு குடித்தனம் நடத்தும் மனைவிக்கு இடமில்லை, மாடியை விட்டிறங்கி வாசலுக்குப் போய் மண்ணைத் தின்றுகொண்டு வயிற்றில் கட்டியைப் பெருக்கிக்கொண்டிருக்கும் குழந்தைக்கு இடமில்லை.

இடுப்பில் சவாரி செய்துகொண்டு இரவென்றும் பக லென்று மில்லாமல் எப்போதும் அழுத கண்ணும் ஒழுகிய மூக்குமாயிருக்கும் கைக்குழந்தைக்கு இடமில்லை. வயிற்றிலி ருந்துகொண்டே, மருந்தென்றும், மாயமென்றும், வலியென் றும், வியாதியென்றும், செலவும் கவலையுமாய் மனிதனின் உயிரையே குடித்துக்கொண்டிருக்கும் வித்துக்கும் இட மில்லை. நாங்கள் இருவர்தான், நானும் என் மடியில் செத்த வளும். நாங்கள் இருவரும்கூடிய அந்தக் கற்பனை வாழ்க் கையில், பசும்புல் தரைகளும், நீரோடைகளும் நிலவும் நிம்மதியும், நித்திய சுகமும்தான் இருந்தன. நாங்கள் இருவரும் கந்தர்வர் ஆகிக் ககனத்தில், நீந்திக் கொண்டிருந் தோம்...... ஆனால், ஆனால் இந்தச் சாவு! என் உடல்

நடுங்கியது. என்ன கனவு! என்ன வேதனை! விஷத்திலே தோய்ந்த அமிழ்தம்போல் இருந்தது என் மன நிலை.

மணி ஆகிவிட்டது.

வீட்டுக்குத் திரும்பினேன்.

மண்ணைத் தின்னும் குழந்தையின் முகத்தழுக்கை என் மனைவி துடைத்துக் கொண்டிருந்தாள்.

என்னைக் கண்டதும் இடுப்பிலிருக்கும் குழந்தையை என் கையில் கொடுத்துவிட்டு, இலை போடப் போனாள். அசதியில் 'ஊம்...ஊம்...' என்று முனகினாள்.

வயிற்றிலிருக்கும் வித்து படுத்தும் வேதனை.

இரண்டு கவளங்களை, வில் உருண்டையாய் விழுங்கினேன்.

''உடம்பு சுகமில்லையா? சாப்பிடவே யில்லையே!''

''ஆமாம்—இன்று என் மடியில் ஒருத்தி செத்தாள்...'' என்று வெடுக்கென்று பதில் சொல்லிவிட்டு, கையையலம்பிக் கொண்டு, மாடி வெளிப்புறத்தில் சாய்வு நாற்காலியில் போய்ச் சாய்ந்தேன்.

தெருவில், டிராம் வண்டிகள் கணகண என்று மணியடித்துக் கொண்டு சக்கரங்கள் தண்டவாளத்தைக் 'கிறீ...ஈ...ச்' என்று காதைத் துளைக்கத் தேய்த்துக் கொண்டு சென்றன. பஸ்ஸும் மோட்டாரும் ஊதிக்கொண்டு பறந்தன. ஜனப் புழக்கத்தில் தீராத இரைச்சல் கீழே. இடுப்புக் குழந்தையைத் தொட்டிலில் போட்டு என் மனைவி தூங்கப் பண்ணிக் கொண்டிருந்தாள். இடையிடையே மூக்கைச் சிந்திப் போட்டாள். என்னதான் சாதுவானாலும், என் மடியில் இன்னொருத்தி செத்தது அவளுக்குப் பொறுக்காது.

''ஆரிரா ரோ...ஆராரோ...!''

ஆம். அவள் யாரோ நான் யாரோ—ஆனால், இவள் மாத்திரம்... இவள் யார்?

இந்தக் குடும்ப உழற்சியில் நான் அவளை மறந்துவிடு வேன். இதில் எதுதான் நிற்கும்? எந்த மகா சக்தியும் சகதிக்கு வர வேண்டியதுதான். இப்போது, பச்சை மரத்தில் பாய்ந்த கோடாரிபோல் அவள் என் மார்பைப் பிளந்து கொண்டிருந்தாலும், நாளடைவில் பாசி மேலே மூட மூட, அவள் உள்ளாறி விடுவாள்.

வேதனையே அதுதான்...!

திடீரென்று அவளைக் கடைசியாய் நான் கண்ட காட்சி என் கண் முன் வந்து நின்றது. ரிக்ஷாவில் அவள் கூட்டை அவன் ஏற்றிக்கொண்டு செல்கையில், அந்த உடல் துவண்டு உயிரற்ற கைகளும் தலையும் லொடலொட என்று தொங்க லாடின.

தலை மயிரில் ஒரு கொத்து மருக்கொழுந்து.

எனக்குப் 'பகீர்' என்றது. ''அம்மாடி......!''

''என்ன! என்ன!'' என்று அலறிப் புடைத்துக்கொண்டு என் மனைவி ஓடிவந்தாள்.

''என்னடி பண்ணுவோம்! இன்னும் எத்தனை நாள் இப்படி!'' என்று விக்கினேன்.

மண்டையைத் தொட்டாள்.

''ஐயையோ நெருப்பாய்க் காயுதே''—சொல்லவே இல்லையே! நேரமும் ஆயிடுத்து; வீட்டிலும் ஒருத்தருமில் லையே! படுத்துக்கொள்ளுங்கள். விடியற்காலையில்தான் வைத்தியனைக் கூப்பிடணும். படுத்துக்கொள்ளுங்கள். இதோ வந்து விட்டேன்...''

அவள் என்னைப் படுக்க வைத்துவிட்டு, பாலாடை யையும் ஒரு துணிக் கிழிசலையும் எடுத்துக்கொண்டு, இருளைத் தேடிச் சென்றாள்.

□□□

# குண்டலி

''ஒரே ஒரு ஊரில்—''

என் மனைவி கைப்பிள்ளைக்குக் கதை சொல்ல ஆரம்பிக்கிறாள். அவனைப் பால் மறக்கடிக்க என்னென்ன வித்தைகளோ பத்து நாட்களாக நடக்கின்றன.

''ஏன் மன்னி?'' என் தம்பி குறுக்கு வெட்டினான்; விடுமுறைக்கு வந்திருக்கிறான். ''ஒரே ஒரு ஊர்தான் உண்டோ? உலகத்தில் எத்தனை ஊர்கள் தெரியுமா?''

''எத்தனை இருந்தால் என்ன? எல்லாம் ஒரே உலகத்தைச் சேர்ந்தவைதானே! உலகங்கள் எத்தனை தெரியுமா?''

''எத்தனை?'' என் தம்பி சற்று மிரண்டு போனான். அவன் பாடங்கள் இன்னும் அவ்வளவு தூரத்துக்கு வரவில்லை.

''எத்தனை எத்தனையோ?'' அவள் குரல் மூச்சாய் ஒடுங்கிற்று. ''ஆனால் கதை என்னவோ ஒன்றுதான்.''

''இல்லை; எத்தனை எத்தனையோ கதைகள்—''

''இல்லவே இல்லை—'' அச்சீறல் கேட்டுத் தலை நிமிர்ந்தேன். ''அத்தனையும் ஒரே கதையின் அத்தனை துவக்கங்கள் தாம்.''

''துவக்கங்களும் எத்தனையோ. முடிவுகளும் எத்தனை எத்தனையோ—''

''ஸேது, கதையைக் கெடுக்காதே.''

அவள் குரலில் அழுகை துளும்பிற்று.

''என்ன மன்னி?''

தலையைத் திருப்பிக்கொண்டாள்.

நான் சமாதானம் பண்ண முயன்றேன்.

''ஒருத்தரும் ஒன்றைக் கெடுக்க முடியாது. அது உள்ள படியேதான் இருக்கிறது. ஒண்ணு ஒன்பது ஆவது ஒன்பது ஓராயிரம் ஆவது எண்ணங்கள்தான். ஆகையால் ஒன்று என்கிற எண்ணம்தான் கெடுபடுகிறது.''

''எண்ணம் முக்கியம் இல்லையா? உண்டு—இல்லை பண்ணுவதே அதுதானே!''

''எண்ணுவதற்கு எண்ணேயில்லை. எண்ணுவதைவிட உள்ளதே முக்கியம்; அப்பப்போ உள்ளது. அதைச் சுற்றிச் சுற்றித்தான் எண்ணம்.''

''எண்ணம் இல்லாததையும்தான் சுற்றுகிறது,'' அவள் குரலில் படர்ந்த பகை லேசாய்க் கசந்தது.

''என்னண்ணா மன்னியும் நீயும் பேசறேள்?''

வண்டியின் அறைகூவல் தூரத்திலிருந்து நெருங்கிக் கொண்டே வந்து, நெஞ்சைக் கிழித்தது. சோம்பல் முறித்த வண்ணம் எழுந்தேன்.

''குண்டலி!''

''குண்டலியா? அது யார்? பேரே புதுவிதமாய்—''

நான் ஒன்றும் பேசவில்லை, அவள் முகம் கறுத்தது. குழந்தையைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு விடு விடென உள்ளே சென்றாள்.

வண்டி நெருங்கிவிட்டது.

நான் ஸ்டேஷனுக்குக் கிளம்பினேன்.

* * *

நிமிஷத்தின் நீட்டமே வருடங்கள் என்பதற்குச் சான்றென இங்கு நேரம் நின்ற இடத்திலேயே நிற்கின்றது.

ஸ்டேஷனுக்குப் பின்னால் ஒரே வரிசையில், இட வசதியில்லாத அதே மூன்று வீடுகள். ஒன்று அநேகமாய்ப் பூட்டியே கிடக்கும். மூன்றுக்கும் பொதுவாய் ஒரு கிணறு. இதைவிட உப்பான இடங்களிலிருந்து வந்த ஸ்டேஷன் மாஸ்டர் குடும்பங்களுக்கு இதன் ஜலம் கரும்பு!

கண்ணுக்கெட்டியவரை வயல் பரப்புகள். ஏரிக்கரை மீதினில் காவல் நிற்கும் பனை மரங்கள். அவைக்குமப்பால் எட்ட எட்ட நகர்ந்துகொண்டே சமயப்படி சிரிக்கும், சினக்கும், குமுறும் வான் விளிம்பு.

ஓரிரவு—

என்மேல் கைபட்டு விழித்துக்கொண்டேன். ஒருருவம் என்மேல் குனிந்தது. முகம்கூட நன்கு தெரியவில்லை. கும்மிருட்டு.

தவளைகளின் மூச்சுவிடாத பாட்டினிடையே அத்துடன் இழைந்தாற் போலேயே இன்னொரு சப்தமும் எழுந்தது.

"கூ—கூ—கூ—!"

என்னென்று புரியவில்லை. ஆனால் என் தலைமயிர் விறைத்தது.

"அம்பி, பயமாயிருக்கா? பயப்படாதே!" என் மார் மேல் அம்மாவின் கை விரல்கள் வெட வெடத்தன.

"என்னம்மா அது?"

"யாரையோ இருட்டில் மடக்கிண்டு அடிக்கிறா."

அம்மா எழுந்து சென்று சுவாமி விளக்கை ஏற்றி நமஸ்கரித்தாள். அவளுக்கு அப்பாவைப்பற்றிக் கவலை. அப்பா ஸ்டேஷனில் இருந்தார். நைட் டியூடி.

"கூ—கூ—!"

அம்மா செவியைப் பொத்திக்கொண்டாள். என்னிடம் வந்து கையை நீட்டினாள். விழிகள் வழிந்தன.

''அம்பி அடித்துக்கொடு. நீ பெரியவனாகி வேறு எந்த உத்தியோகத்துக்குப் போனாலும் இதுக்கில்லேன்னு எனக்குக் கை தட்டிக்கொடு''

நான் தைரியமூட்ட முயன்றேன். ''இது இல்லாவிட்டால் எப்படியம்மா, காசு இல்லாமல் காசிக்கும் கன்னியாகுமரிக்கும் போக முடியும்?''

''என்ன வேண்டிக் கிடக்கு?'' அம்மா வயிற்றைப் பிசைந்துகொண்டு குறுக்கும் நெடுக்குமாயலைந்தாள். (அதற்குக் கூட இடம் பற்றாத விடுதி!) ''ஒரு நிமிஷ நிம்மதியுண்டா? மனுஷாளுக்குத் தூக்கம் கெட்டால் ஆயுசுலே அப்புறம் என்னடா இருக்கு? இதென்ன குருவிக்காரன் குடுகுடுப்பைக்காரன் பிழைப்பு—அடிக்கடி டேரா தூக்கிண்டு? குழந்தைகளின் படிப்பு பாழ்! அண்டை அசலார் முகமாற்றம். பொழுதுபோக்கு உண்டா? சுடலைக்கழுகு மாதிரி தனியா இடத்தைக் காத்திண்டு என்ன பிழைப்பு இது? சம்பளமும் கட்டை; ஆனால் மண்டைமேல் கர்ணம் தப்பினால் மரணப் பொறுப்பு—''

அம்மா சொன்னது முழுதும் மனம் வாங்கிக்கொண்டதோ இல்லையோ? அந்த ஓலம் மறுபடியும் எழக் காத்திருந்தேன். ஆனால் கேட்கவில்லை.

கேட்டால்தான் நாங்கள் என்ன செய்யமுடியும்? ஒருவர் உதவிக்குப் போக முடியுமா?

அவரவர் விதி அவரவரின் புனைதல் என்பது மற்றெங்கினும் இங்குதான் கண்கூடு.

காலடியில் மணியாங்கற்கள் நொறுங்கின. 'சரக்சரக்' கெனும் மிதி சப்தம்கூடப் பழமையை ஞாபகமூட்டிற்று. அதோ மூன்று காலில் பாழ் மண்டபம்—அப்படியேதான் இன்னும் நொண்டுகிறது. இப்போது என் தம்பிபோல், நான்

விடுமுறைக்கு வந்திருந்த அந்த நாளைக்கும் இன்றைக்கும் வித்யாசம் ஏதும் தெரியவில்லை. அன்றே இன்றையுமிருப் பின் இங்கு அது ஆச்சரியமில்லை. காலடியில் நீலமலர் சிரித்தது.

குனிந்து இதழ்களைத் தொட்டேன். பத்து வருடங் களுக்கு முன்னைய நெஞ்ச நெகிழ்ச்சியில், இதோ இதே இடத்தில் இதுமாதிரியே குனிந்து தொட்ட அதே மலர் தான்.

கம்பி வேலியுள் நுழைந்து தாண்டுகையில் காலை யிடறும் அதே கல், மண்ணின் புதைவினின்று முண்டிற்று. ஒவ்வொரு தடவையும் அப்பா தலையிலடித்துக் கொள்வார்.

அப்பா போய் அவருக்குப்பின் வேண்டிய பேர் வந்து போய், உலகத்தின் உருண்டைக்கு இன்னொரு அத்தாட்சி யாய் நானும் என் அப்பாவின் இடத்திற்கு இங்கு மீண்டா யிற்று. ஆனால் இதுவரை ஒருவருக்கேனும் அந்தக் கல்லைப் பெயர்த்தெடுக்கத் தோன்றியதில்லை.

வண்டி ஸ்டேஷனில் வந்து நின்று புகைந்துகொண் டிருந்தது.

'கார்டு' பச்சைக் கொடியால் தொடை தட்டியபடி பொறுமையிழந்து நின்றார்.

"என்ன ஸார், ஒரு நாளைப் பார்த்தால்போல் வண்டி சமயத்துக்கு எங்கேயோ போயிட றீங்க! எழுதிப் போட்டுட வேண்டியதுதான்னு தோணுது! நீங்கள் எல்லாம் அனாவஸ்யமாயிருங்க. என் மண்டை உருண்டால் உங்களுக் கென்ன வந்தது?"

வண்டி வளைவில் மறையும்வரை அதையே நின்று பார்த்துக் கொண்டிருந்தேன்.

நாள் முழுவதும் இங்கு இறங்குவோரையும் ஏறுவோரை யும் ஒரு கையில் அஞ்சு விரலில் எண்ணிவிடலாம்.

ஸ்டேஷனின் பேர்ப்பலகை நட்டு நிற்குமிடத்திலிட்ட பெஞ்சின்மேல் ஒரு உருவம் தெரிந்தது. யாராவது இறங்கினார்களா? டிக்கட் இல்லாமல் 'டிமிக்கி' கொடுக்கக் காத்திருக்கிறானா?

இரண்டடி எடுத்து வைத்ததும் என் மனைவியென்று கண்டேன். அவளை விளிக்க உயர்ந்த கையை ஒடுக்கிக் கொண்டேன்.

'கார்டு' டன் சச்சரவில் நான் மானமிழந்து நிற்பதைக் கண்டுகொள்ளாது அங்கேயே நாசூக்காக நின்றுவிட்டாளோ? வந்த சிரிப்பையடக்கிக் கொண்டேன். ஏனெனில் எங்களிடையில் ஒருவருக்கொருவர் மனம் நளினம் கண்ட நாட்கள் கடந்தாகிவிட்டன. அவரவர் மனத்தில் அவரவர் புழுங்கும் நிலையில் இப்போதிருந்தோம். தன் யோசனைகளில் ஈடுபடத் தனிமைக்கு வந்திருக்கிறாள். பாவம்; அவளை ஏன் கலைக்கவேண்டும்?

இந்தண்டை வேப்பமரத்தடிப் பெஞ்சில் உட்கார்ந்தேன்.

நான் இங்கே—அவள் அங்கே. கணவன் மனைவியே ஆயினும் நாங்கள் வாழ்வின் வழிப்போக்கர்கள். அவரவர் விதியின் புனைதல் அவரவரதே எனும் முறையில் நாங்கள் இருவரும் முற்றிலும் அந்நியரே என்பதற்கு இதைவிட ருஜு எது? என் விதியுடன் அவள் விதி பிணைக்கப்பட்டிருப்பது அவள் விதிவந்த வழி. ஒற்றுமையாமோ?

பயல் தூங்கியிருப்பான். அதான் கொஞ்சம் ஒய்வாயிருக்கிறாள்.

மூன்று, எவர் ஐதீகத்திலேயும் ஒரு ஆரம்பத்தையோ முடிவையோ நிறுவும் முக்யமான எண் எனக் கருதுகிறேன்.

"One—Two—Three—Off"

"ஒருதரம் ரெண்டுதரம் மூணுதரம்—விட்டுட்டேன்!"

"ஜலமும் மூணு பார்க்கும்!"

மூன்று பெற்றிடினும் அவ்வாறுதான். கணவன் மனைவியுறவில் ஒரு கட்டத்தின் முடிவு; இன்னொன்றின் ஆரம்பம். அம்சங்களே மாறுகின்றன. ஒருவர் மற்றவரைப் பற்றித் தெரியப் பாக்கி ஏதுமில்லை. புதுமையின் வியப்பு மலர்ந்து, கசங்கி, இறக்கை விரித்து, ரகசியமிழந்து, இதழ்கள் உதிர்த்தாயிற்று. நாரின் மணத்தை நம்பிய நாட்கள் எவ்வரை நிஜத்தை நம்பியவை, பொய்யில் ஏமாந்தவை?

எனக்குத் தோன்றும் இதே எண்ணங்கள்தாம் அதோ அங்கே அவளுக்கும் தோன்றுகின்றன. இல்லேல் நான் இங்கேயும், அவள் அங்கேயுமாய், அவரவர் வழியில் ஏன் தனித்திருக்கிறோம்?

கூண்டெட்டிய வரையும் அப்பாலும் தண்டவாளம் எங்களைச் சிறையிட்டது. வான் கிண்ணமும் மூடி உள்ளே மாட்டிக் கொண்டோம். கிண்ணங்கள் ஒட்டிய இடம்விட்டுப் போகாமல் பட்டமிட்டாற்போல், தண்டவாளம் சுற்றி ஓடிற்று. வேளாவேளைக்கு வண்டிகள் பாரா வந்து போயின.

இதோ இன்னொன்று வருகிறது. இது பழைய நண்பன்.

ஆனால் இது இங்கு நிற்காது. பத்து வருடங்களுக்கு முன் நின்று கொண்டிருந்தது. ஆயினும் அதிகாரிகள் கதிகளையும் நேரங்களையும் அப்போதைக்கப்போது மாற்றும் அட்டவணையில் இதற்கும் அவசரம் வந்துவிட்டது. தன் வயது முடியுமுன் தண்டவாளத்தின் முடிவு காணும் வேகத்தில் விரைகின்றது, இலுப்பந்தோப்பு வளைவில் அது வெளிப்பட்டதும் என்னையுமறியாமல் எழுந்து நிற்கிறேன். ஏன் இருப்புக் குதிரை என்கிறார்கள்? சிங்கம் என்றிடில் இன்னும் தகுமோ? சிங்கத்திலும் சிங்கம் கிழட்டுச் சிங்கம்! என்னதான் சுமையை இழுக்க முடியாதபடி இழுத்து வந்தாலும், வயதின் புழுதி என்னதான் ஆழமாய்ப் படிந்தும், அதன் கம்பீரத்தை எது அடக்க முடியும்? அந்தச் சுமையும் புழுதியுமே கம்பீரத்தைப் பெருக்குகின்றன.

சம்சாரியை விடாது அவனைப் பிடித்துக்கொண்டு தொங்கும் அவன் உழலல்கள்போலும் வண்டிகள் அதைப் பின் கவ்வித் துரத்துகின்றன. வெல்லக் கட்டிமேல் மொய்த்து ஊறும் ஈ எறும்புகள்போல் நஞ்சானும் குஞ்சானுமாய் முகங்கள் பெட்டியிலிருந்து எட்டிப் பார்க்கின்றன.

வண்டி சீறிச் செல்கையில் முகங்கள் சலனப்படத்தின் ஓட்டம்போல் கண்முன் வேகமாய்ப் பாய்ந்து செல்கின்றன. 'பெண்களுக்கு மாத்திரம்' பெட்டி வாசலில் ஒரு வெள்ளைப் புடவையின் மேலாக்கு காற்றில் கதவுக்கு வெளியே அலைமிதந்தது.

குண்டலங்கள்!

''குண்டலி!''

என் அலறலை எஞ்சினின் வீறல் தன்னோடு அடித்துக் கொண்டு போயிற்று. பித்துப் பிடித்தவனாய், கடைசி வண்டி கண் மறையும்வரை பார்த்தபடி நின்றவிடத்தில் நின்றேன்.

இழுத்துப் பிடித்த மூச்சுப்போல் தண்டவாளம் ஒற்றைத் தன்மையடைந்தது. தன்னைத்தானே துரத்திச் சென்றது.

நொடியில் வருஷங்கள், நொடியில் ஒடுங்கிய சிமிழின் இருள் என்மேல் படர்ந்தது. காலம் கதிகலங்கிய சுழலில் பழையன புதியன பிரிவு அழிந்து, பத்து வருடங்களின் முன் சமயம் இப்போதென என்னைத் தொட்டுச் சென்றதும், உடல், 'ஜிவ்'விட்ட ஜன்னியில் செயலில் என்னை மீறியது. மீறின பின்னே தெரிந்தது.

அலைகள் மெதுவாய் அடங்கலுற்றன. நினைவு, தான் மீண்ட தெளிவில் இழைகளைச் சாவதானமாய்ச் சிக்குப் பிரித்து நெய்ய ஆரம்பித்தது.

அவ்விடத்தில் அவளும் நின்றுகொண்டிருந்தாள்.

காற்று எழும்பி வேப்பங்கிளைகளை ஊடுருவிற்று. பூக்கள் என்மேல் உதிர்ந்தன. தலையிலும், சட்டை மேலும் ஒட்டிக் கொண்டன.

* * *

என் நண்பனே! பத்து வருடங்களுக்குமுன் இல்லாத அவசரம் உனக்கு இப்போது ஏன் எங்கிருந்து வந்தது? அப்போது இப்படியா இருந்தாய்? ஸ்டேஷனை நெருங்க, நடை தளர்ந்து மூச்சுத் திணறி மூக்கு திக்காடி அசைந்து நின்று அடிவயிற்றிலிருந்து 'உஸ்'ஸென்று பெருமூச்செறிவாய். இப்போதைவிடப் பத்து வருடங்களுக்குமுன் அப்போது எனக்கு அதிக ஆச்சரியமில்லையா? அமைதியான அழகான இவ்விடம் விட்டு நகர உனக்கு மனம் இல்லை; எனக்குத் தெரியும். அப்பாவும் கார்டும் நெருங்கிய நண்பர்கள். பின் குடுமியின் முண்டலில் அப்பா தலைமேல், ஸ்டேஷன் மாஸ்டரின் தலைப்பாகை, பட்சிபோல் தலைக்குச் சம்பந்தமில்லாமல் உட்கார்ந்திருக்கும்.

டிரைவர் பொறுமையிழந்து ஊதலைக் கிளப்பினான். ஆனால் அதைப்பற்றி இருவருக்கும் அக்கறையில்லை. பேசிக்கொண்டேயிருந்தனர். கார்டு வண்டியில் ஏறிக்கொண்ட பின்னரும் அப்பா உரக்கக் கத்தினார்.

''மறந்துவிடாதே. நாளைக் காலைவரைக்கும்தான் பொடியிருக்கிறது. எங்களோடிருந்தால் பரவாயில்லை. பையன் லீவுக்குப் பட்டணத்திலிருந்து வந்திருக்கிறான்—''

''ஏன் ஸார், உங்கள் பிள்ளைக்குக் காப்பிக்கொட்டை வாங்கி வரவா ரயிலோடுகிறது? விடுமய்யா ரயிலை!''

அப்பா துளிக்கூட முகம் மாறாமல், குரல் வந்த ஜன்னலண்டை போனார்.

''என் பையன் பி.ஏ-க்குப் படிக்கிறான் ஸார், மைக்கல் மஸ்ஸுக்கு வந்திருக்கிறான். எங்கள் குடும்பத்திலேயே இவன் தான் ஸார் முதல் பி.ஏ. நானே பீற்றிக்கொள்கிறேன்

என்று நினைக்கப்படாது. Bright Boy! பர்ஸ்ட் பாரத்தி லிருந்து மெரிட் ஸ்காலர்ஷிப்''—

எரிச்சலும் வெட்கமும் என்னைப் பிடுங்கித் தின்றன. வேப்பமரத்தின் பின்னால் ஒளிந்துகொள்ள முயன்றேன்.

எனக்கெதிரே 'பெண்களுக்கு மாத்திரம்' பெட்டி—நெருப்புப் பெட்டிபோல் சின்னப் பெட்டி—உள்ளே நாலு பேருக்குமேல் இல்லை. கதவைத் திறந்துகொண்டு மேலாக்கின் கொடுக்கு காற்றில் அலைமிதக்க வாசலில் வந்து அவள் நின்றாள். குண்டலங்கள்—

காலத்தின் உறைக்கல்லில் எல்லாம் தேய்ந்த பின்னர் அக்குண்டலங்கள் மாத்திரம் ஜ்வலிக்கின்றன. ஊன்றிய உள் நோக்கில் எல்லா அங்கங்களும் தன் பின்னணியில் மறைந்த இருளில், அவை மாத்திரம் குதித்துச் சுடர்விடுகின்றன. நடுவகிடினின்று வங்கி வங்கியாய்ச் சரிந்து இரு பக்கமும் தளதளத்த கூந்தல் பொத்திய செவிகளின் அடியிதழ்களில், புயலில் அலையும் ராந்தல்கள்போல், ஆடிச் சிரிக்கின்றன.

அவளைவிட அவைகளே அடையாளப் பதவியை அடைந்துவிட்டன.

எங்கள் கண்கள் சந்தித்தன.

ரயில் ஊதி நகர்ந்து, வேகமெடுக்க ஆரம்பித்தது.

என் பார்வையில் மறையும்வரை அங்கேயே நின்றிருந்தேன்.

அக்குண்டலங்கள் நினைவில் எங்கோ தைத்துக் கொண்டாலும் அவளைப்பற்றி நினைத்துக் கொண்டேயிருக்கப் போதுமான ஆதாரம் அப்போது நெஞ்சில் அழுந்தவில்லை. ரயிலில் எத்தனையோ பேர் வருகிறார்கள், போகிறார்கள்.

மறுநாள் அந்த வேளைக்கு அப்பா ஸ்னானம் பண்ணிக் கொண்டிருந்தமையால், கொடி காட்டவும் சாமான்களை வாங்கி வரவும் என்னை அனுப்பினார்.

கார்டுடன் பேசிக் கொண்டிருக்கையில் பிடரியில் குறு குறுவெனும் உணர்ச்சி மீறித் திரும்பினேன்.

வண்டி வாசற்படியில், கல்லாலடித்தாற்போல் நேற் றைக்கும் இன்றைக்கும் வேறு இல்லாமல் அவள் நின்றிருந் தாள். தீர்க்கமான பார்வை என் கண்களைத் துருவின. எஃகுச் சுருள்கள் போன்ற மயிர் வளையங்களின் அடியில் குண்டலங்கள் ஆடிக் கன்னங்களை முத்தமிட்டன. அவை களின் அடிச் சதங்கைகள் புலி நகங்களாய் நெஞ்சில் புதைந்தன.

வண்டி நகர்ந்தது.

மறையும்வரை அங்கேயே என்னைப் பார்த்தபடி நின் றிருந்தாள்.

ஸ்டேஷனின் வெறிச்சில், பொட்டலங்களை அணைத்த படிப் பொறி கலங்கி நான் நின்றேன். ஒன்றிரண்டு நழுவிக் காலடியில் வீழ்ந்தன.

வயல்களில் கதிர்களில் பச்சை பளிச்சிட்டது. கதிர்ப் பச்சையின் வாஸனை எங்கிருந்தோ கம்மென்று கிளம்பி இலுப்பத் தோப்பிலிருந்து வரும் பூமணத்துடன் கலந்தது.

''ஒஹோய்!''

களத்துமேட்டிலிருந்து யாரோ யாரையோ கூவியழைக் கிறான். குரல், சுண்டின வெள்ளிபோல் எழும்பி ஆகாயத் தில் அந்தரத்தில் தனித்த நாதச் சொட்டாய்த் துளித்து வெற்றியோடு தொங்குகிறது. வேப்ப மரத்தடியில் பூக்கள் உதிர்ந்து ஜமக்காளம் நெய்திருக்கின்றன. வானில் ஒரு பட்சிக் கூட்டம் வியூகம் கட்டிப் பறந்து செல்கின்றது. அம்மா உலையில் அரிசி களைந்து இடுகையில் குறிப்பாய்ப் பாடும் துதி காற்றில் மிதந்து வந்து வாயில் கற்கண்டாய் தித்திக் கின்றது. கிணற்றடியின் சிமிட்டித் தரை, ஜலத்தில் நனைந்து சலவையாய்ப் பளபளக்கிறது. அப்பா அரைத் துண்டுடன், வாளிவாளியாய் இழுத்து மொண்டு மொண்டு

விட்டுக் கொள்கிறார். உடலும் முகமும் தக்காளிபோல் சிவப்பேறித் தகதகக்கின்றன.

''என்னடா அம்பி உடம்பு சுகமில்லையா? உனக்குப் பிரியமாச்சேன்னு மைசூர் ரஸம் வெச்சேன். சாதத்தைக் கோழி மாதிரி குதறிண்டிருக்கையே? ஏன், ஓட்டலில் சாப் பிடுகிற மாதிரியில்லையா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லை அம்மா!''

''என்னமோ அப்பா, நாளைக்கு வண்டி ஏறும் சமயம் எதையாவது வரவழைச்சுண்டு நிக்காதே! உங்கப்பா என் உசிரைப் பிடுங்கியெடுத்துடுவார். 'பிள்ளைப் பாசம் உனக்குத்தான்னு பண்ணிப் பண்ணி வயத்தில் தனியா வெச்சி அடைச்சயா'ன்னு.''

''ஒண்ணுமில்லேம்மா.''

என் தொண்டையுள் குண்டலங்கள் மாட்டிக் கொண் டிருக்கின்றன.

நேற்றுப் போனவள் இன்றும் போனதால், போனவள் வருவாள் என்று அவள் வருகையை எதிர்பார்த்து மாலை வண்டிக்குக் காத்திருக்கிறேன்.

வானத்தில் மேகப் பாளறகள் அடைத்துக் கொண்டிருக் கின்றன. மரங்களில் இலை அசையவில்லை. வேர்வையில் மயிர் நனைந்து நெற்றிப் பொட்டில் பிசுக்கென்று ஒட்டிக் கொள்கிறது. மூச்சு திணறுகிறது.

ராந்தல் கம்பத்தின் உச்சியை எட்ட ஒரு வண்டு எகிறி எகிறித் தோற்று, சொத்துச் சொத்தெனத் தரைமேல் விழு கின்றது. விழும் சப்தம் அருவருப்பாயிருக்கிறது. ஒரோரு சமயமும் வீழ்ந்த அதிர்ச்சியின் மூர்ச்சை தெளிய நேரம் ஆயிற்று. ஆயினும் அதன் துள்ளல் ஓயவில்லை.

நீ வாத்தியாரா? நர்ஸா? வேறு எந்த உத்தியோகம்?

உன் குண்டலங்களும் உருவும் உனக்கு நானிட்ட பேரு மன்றி உன்னைப் பற்றி வேறெதும் கண்டிலேன். உன் குர லின் விதம்கூட எப்படி என்று அறியேன். ஆயினும் நெஞ்சில் தந்திகள்தாமே அலைந்து செவிதாண்டி, தசை தாண்டி எலும்பின், உள்சத்தில் அவை எழுப்பும் கீதத்தை உணர் கிறேன்.

நெஞ்சில் உன் உருவக் கோடுகளை விளம்பி விளம்பி நான் உன்னில் கண்டதை உள்ளபடி, என்னை ஏமாற்றிக் கொள்ளாது நினைப்பதிலேயே அமைதியும் அடைகிறேன்.

இவ்வமைதியே உனக்கும் எனக்குமிடையில் நான் கண்ட உண்மைக்கு ஒரு சாட்சியோ?

நான் கண்டதை உனக்குச் சொல்லும் பாவனையில் திரும்பத் திரும்ப எனக்குச் சொலிக்கொள்கிறேன்,

உடல் வாளிப்பின் பேரழகன்றி வேறில்லை. மூக்கு எடுப் பாய் ஆரம்பித்ததும், நுனிசற்று விண்டிருக்கிறது. உதடு களின் வார்ப்பு செதுக்காயிருப்பினும் வாய் சற்றுப் பெரிது; கண்கள் பெரியன— ஆயினும் குழிவு.

நெற்றி ஆணினுடையதுபோல் அகன்று உயர்ந்திருக் கிறது. ஆயினும் இச் சிறுசிறு குறைகளிலிருந்தேதான் முகத் தில் உயிர் கூடச்சிந்துகிறது அவைகளின் நிறைவை மனதின் ஊகத்திற்கு விட்டுவிட்டு முகம் களைகட்டுகிறது. கூடக் குண்டலங்களும் சேர்ந்த மொத்த விளைவு நெஞ்சு விளை வுடன் கலந்து நேர்ந்த ஊமை வலி, என்னை உள் தின்று கொண்டு, நான் என் உள் உள்பட வெறும் வெளிப் பொறுக்காய் நிற்கிறேன், உட்காருகிறேன், அலைகிறேன், துண்டால் மண்டையிலடித்த வண்டெனை என்னைக் சுற்றித் தட்டாமாலை வருகிறேன்.

தூரத்தில் ஒளி உதயமாகி, அதன் வட்டம் நெருங்க நெருங்கப் பெரிதாகிக்கொண்டே வருகிறது.

இதுதான் நீ வரவேண்டிய வண்டி.

ஆனால் வண்டி இருப்புக் கிராதியின் எல்லையுள் கடக்கும் போதுதான் அறிகிறேன், இத்தொடருள் இரவில் உன்னைத் தேடுவது எவ்வளவு கடினம்! பகலுக்கும் இரவுக்கும் வித்தியாசமில்லையா? இரவில், ரயிலின் அவசரத்தில் இரவு காட்டும் நிழலில், அத்தனை முகங்களும் தனி முகமில்லா ஒரே முகம்தான்.

தோல்வியோ ஆவலோ, என் கைகள் பேரணைப்பில் விரிகின்றன.

இந்த வண்டித்தொடருள், எந்தப் பெட்டியுள் எந்த மூலையில் நீ புதைந்திருந்தாலும் சரி. நீ வந்திருந்தால் என் தழுவலுள் அடங்கவேணுமென்று இந்த ரயிலையே அணைக்கின்றேன்.

உன்னை அணைக்கநினைந்ததற்கு உன்னை மன்னிப்புக் கோரவில்லை. கோரினும், இன்றினும், நினைத்தது, நினைத்தவரை நினைத்ததுதான். ஒவ்வொரு எண்ணமும் ஒரு உயிர்த்தாது. நீ வெகுண்டினும் நான் அதற்கு மருண்டினும் அதை நசித்துவிடல் இயலாது.

ஆனால் உன்னை அணைக்க முடியவில்லை. நீ வந்திருந்தால் இந்த ரயிலில் வந்திருப்பாய் என்ற எண்ணத்திற்காக, உன்னைக் காணமுடியாததால் என் பார்வையை விசுவதிருஷ்டியாய்ப் பெருக்கிக் கொண்டாலும், என் அணைப்பு எவ்வளவு அகல விரிந்திடினும் என் கண்ணும் கையும் சூம்பித்தான் போகின்றன. விழியோரங்கள் உறுத்துகின்றன.

ஆயினும் கண்ணின்று வழியும் ஒரு ஒரு துளியும் ஒவ்வொரு சொட்டும் ஒவ்வொரு ப்ரளயத்தைத் தன்னுள் அடக்கிய வித்து.

கடைசிப் பெட்டியின் சிவப்பு விளக்கு என்னைப் பேரிருளில் ஆழ்த்திவிட்டு எட்டி மறைகின்றது.

வானத்தில் பாறைகள் உடைந்துவிட்டன. காற்று எழும்பி, மரங்களில் சீறுகின்றது. மின்மினிகள் புதருக்குப் புதர் மினுக்கின்றன.

அறுந்த நகைபோல் வானில் மணிகள் சிதறி, வாரி யிறைந்து, குற்றுயிரில் ஒளிமூச்சு விட்டபடி கிடக்கின்றன.

பாச்சையினத்தின் பூச்சியொன்றின் ரீங்காரம், நள்ளிர வில் மோஹினியின் கால் சலங்கைபோல் கிண்கிணிக்கிறது.

தலையை இரு கைகளிலும் தாங்கிக்கொண்டு வேப்ப மரத்தடிப் பெஞ்சின்மேல் குன்றுகிறேன். நீ வந்ததையும் வராததையும் அறியேன். ஆனால் நேற்றுப் போனாய், நாளை போவையோ? அல்லது விடுமுறை கொள்வாயோ? என் விடுமுறை முடிந்து நாளை நான் திரும்புகிறேன்.

தண்ணீரும் மூன்று முறை பார்க்குமென்பார்கள். நான் உன்னில் மூழ்கிவிடுவேனோ? அல்லது மூழ்கியேவிட்டேனோ?

சொல்வோருக்குக் கேட்போரைப் பற்றிக் கவலை யில்லை. சொல்வோருக்குச் சொல்லச் சொல்ல அலுப்பு மில்லை.

இரவெல்லாம் அம்மா வயிற்றுக்குப் புத்தி சொல்லி மாளவில்லை. ''நீ ஓட்டலில் சாப்பிடறே. இதைத் தின்னு, அதைத் தின்காதே; எண்ணெய் முறை மறக்காதே. கஷாயம் போட்டுக்கொடுக்க ஆளில்லாவிட்டாலும் ஒரு முட்டை விளக்கெண்ணெயைப் படுக்கப் போகுமுன் விட்டுக்கோ—''

இன்னும் இதுமாதிரி எத்தனையோ புத்திமதிகள்.

இப்போ அப்பா முறை, வண்டி கிளம்பும்வரை ஓயாது. ''உன்னைத் தனியாக விட்டிருக்கிறது. உன்னைப் பக்கத்தி லிருந்து பாதுகாக்கவேண்டிய பருவம். ஆனால் குடும்ப நிலைமை ஒண்ணு ஒண்ணு எப்படி எப்படியோ இருக்கிறது. உன் வயதில் எனக்குச் சொல்வோர் யாருமில்லை. எல்லாத் தையும் நானே தடுக்கிவிழுந்து பட்டுப்பட்டுத் தெரிந்து

கொள்ளும்படி ஆயிற்று. ஆனால் எவ்வளவு தூரம் புத்தி சொல்லியே காக்க முடியும்? அப்பனும் பிள்ளையுமாயிருக்கிறோம்; சில விஷயங்களைத்தான் விவரித்துச் சொல்ல முடியும்; சிலதை ஜாடையாய் விட்டுவிடும்படியிருக்கிறது. ஆனால் அந்த சொல்லாத விஷயங்களில்தான் நீ ரொம்பவும் உஷாராயிருக்கணும். நான் என்ன சொல்கிறேன் புரிகிறதோ? புரிகிறதோ?— என்னடா சொல்லிண்டேயிருக்கேன், எங்கோ நினைவாயிருக்கே? ரயில் இதோ வந்துவிடும். உன்னைத் தூக்கிண்டு போயிடும். ஆனால் அடுத்த தடவை நீ வரும்போது நான் இருக்கணுமேடா!''

அப்பா நாக்கில் சனி.

அப்பா சொன்னபடிதான் ஆயிற்று.

அத்துடன் என் படிப்பும் போயிற்று.

படிப்புடன் கனவுகள், கோட்டைகள், திட்டங்கள்...

வண்டி வருகிறது.

இதிலேதான் நான் ஏறணும்.

இன்று வண்டி 'லேட்'; இரண்டு நிமிஷங்களுக்குமேல் நிற்காது.

ஏனோ தெரியவில்லை, இன்று ஏகக் கூட்டம்.

இன்றென்று என்னோடு எல்லோருக்குமே விடுமுறை முடிந்துவிட்டதா?

'இந்தப் பக்கம் வாடா! வண்டி ஊதியாச்சு; அங்கெங்கேடா வட்டமிடறே?''

அவள் வந்திருந்தாலும் இந்த அவசரத்தில் எங்கு தென்படப் போகிறாள்?

துக்கம் தொண்டையை அடைத்தது.

என் பெட்டி படுக்கையுடன் அப்பா என்னை உள்ளே திணிப்பதற்கும் வண்டி கிளம்பவும் சரியாயிருக்கிறது. அப்பா ஆசியில் கையை உயர்த்துகிறார்.

வண்டி நகரும் ஒவ்வொரு அடியும், தாண்டும் ஒவ்வொரு கம்பமும், இந்த மூன்று நாட்களின் கனவிலிருந்து எட்ட எட்ட என்னை எடுத்துச் செல்வனபோல் உள் தோய்கையில் விசனம் வண்டலாய் இதயத்தில் இறங்கி வழிகின்றது.

ஒரு தென்னங்கன்றின் மட்டைமேல் ஒரு பச்சைக் கிளி உற்சாகமாய் ஊஞ்சலாடுகிறது. யாரைப்பற்றி அதற்குக் கவலை? தன்னைப் பற்றிக் கூடயில்லை. அதன் வாழ்வு அதன் பிரித்த சிறகில் இருக்கிறது; பாக்கி வேளை ஒடுங்கிய சிறகுள் அடங்கிக் கிடக்கிறது.

என் பாடு அப்படியா?

நான் காணாத இரும்புச் சங்கிலிகளின் கனம் கழுத்திலும் கைகளிலும் கால்களிலும் அழுத்துகின்றபோதும் நகரும் போதும் நெஞ்சில் ''க்ளாங் க்ளாங்'' கிடுகிறது.

பக்கத்து ஸ்டேஷனில் வண்டி நின்றதும், உள்ளே ஒரு அலை மோதுகிறது.

மஞ்சள் புடவை. அதில் ஆங்காங்கே சுடர்விடும் ஜிகினாப் பொட்டுக்கள். மார்போடு அடுக்காய் அணைத்த தோல் பை புத்தகம், டிபன் டப்பா.

குண்டலங்கள்?

அவள் கண்கள் வண்டியுள் தேடியலைந்து என்மேல் தங்கின. மூச்சு லேசாய்த் திணறிற்று.

என் தொண்டை தவிக்கிறது. எழுந்து நின்றேன். எனக்கு வாயடைத்துவிட்டது.

என் இடத்தை இரு கைகளாலும் காண்பிக்கிறேன். ஆனால் அவள் உட்காரவில்லை. என் கைகளை அவள் பார்க்கவில்லை. என் முகத்தில் நிலைத்த பார்வை பெயரவில்லை.

அப்படியே கடைசிவரை நின்றுகொண்டிருக்கிறோம்.

வண்டியின் தாளம் போட்ட அசைவில் குண்டலங்கள் கன்னங்களில் இடித்து நர்த்தனமாடுகின்றன. அவள் நெஞ்சுக் குழியில் அடிக்கும் நரம்பில் பதிந்துவிட்ட என் கண்களை எடுக்க முடியவில்லை. அங்கு துடிப்பது என் உயிரா? அல்ல எவ்வுயிரும் ஒருயிராய்ப் பொதுவான ஒன்றன் உயிரா?

அடுத்த ஸ்டேஷனில் அவள் இறங்கினாள். அப்புறம் என்னைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. பிளாட்பாரத்தில் நெறிந்த கூட்டத்தில் கலந்து போனாள்.

குண்டலி!

* * *

அறையுள் டெலிபோன் மணி அடித்தது. உள்ளே சென்றேன். டெலிபோனை எடுத்தேன். பக்கத்து ஸ்டேஷனிலிருந்து குரல் வந்தது.

"என்ன, வண்டியை விடலாமா? என்ன பேச்சுமூச்சு காணோம்? காது கேட்கிறதாயில்லையா? இல்லை, வாயில் கொழுக்கட்டையா?"

எங்கோ நினைவாய், "அதான் தலையை ஆட்டினேனே!" என்றேன்.

"அதுதான் சரி, ரொம்ப சரி! அப்பாவுக்கேற்ற பிள்ளை நீதாண்டா!" வெடுக்கென டெலிபோனைக் கொக்கியில் மாட்டிய சப்தம் காதை குடைந்தது.

அவருக்கு அப்பாவைத் தெரியும். அவர் ஜாம்பவான்

நான் உள்ளங்கை அடிமேட்டில் கண்களைக் கசக்கிக் கொண்டேன். இமையுள் குண்டலங்களின் அடிச் சதங்கை மணிகள் அறுந்து தாறுமாறாய் மின்னி அறுத்தன.

கண் திறந்ததும் எதிரே என் மனைவி நின்றிருந்தாள். அவள் கைகள் முஷ்டித்திருந்தன. உள்வலியில் புருவங்கள் நெறிந்தன.

எனக்குப் போதை பூரா தெளியவில்லை. வாய் ஏதோ முணுமுணுத்தது. அவள் கண்களில் கனல் நீராக துளித்தது.

''குண்டலி செத்துப்போயிட்டாள்.'' அவள் குரல் கடுத்தது.

''ஹா!'' அப்புறம்தான் நினைவு வந்தது. குடிகாரன் கபடு என்னுள் புகுந்துகொண்டது. வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டேன்.

''குண்டலி செத்துப்போக மாட்டாள்!'' என் வார்த்தைகள் கொழகொழத்தன.

''இல்லை; அவள் ஒழிஞ்சு, அவள்மேல் புல் முளைச்சாச்சு!''

''உனக்கெப்படித் தெரியும்?''

''எனக்குத் தெரியும். நான் பொம்மனாட்டியில்லையா?''

''உனக்குத் தெரிந்தது அவ்வளவுதான். குண்டலியால் இறக்க முடியாது; வெட்டில் விட்டுப்போன கோடரிபோல் இங்கு தங்கியிருக்கிறாள்—'' என் மாரைத் தட்டிக்கொண்டேன், மார் விண் விண் எனத் தெறித்தது. ''மேலே மரமும் வேர்களும் மூடி வளர்ந்துவிட்டாலும் உள்ளே பிளவில் புதைந்தபடி கோடரி அப்படியேதானிருக்கிறது.''

''இந்த நிலையிலிருந்து விமோசனம் இல்லையா?''

''எந்த நிலை? வாழ்க்கை முழுவதுமே ஒரு நிலைக் கூடு. தேன்கூடு போல். வாழ்க்கை நிலையற்றதாயினும் ஒரு ஒரு நிலையும் ஒரு ஒரு தனித்தனி வாழ்க்கை. ஆகையால் நிலைகளிலிருந்து விடுதலையுமில்லை; அழிவுமில்லை.''

''நிஜமாவா? அப்போ நமக்கு விமோசனமில்லையா?''

''எதிலிருந்து? என்ன வேணும் உனக்கு?'' பொறுமை இழந்தேன். என் போதை கலைந்துகொண்டிருந்தது.

''எனக்குந்தான் தெரியவில்லை. நீங்கள்தான் சொல்லுங்கோளேன்!'' கைகளைப் பிசைந்து கொண்டு நின்றாள். பார்க்கப் பரிதாபமாயிருந்தது. ஏன் இப்படி மாட்டிக் கொள்கிறோம்?

''சொல்லவோ செய்யவோ என்ன இருக்கிறது? வயிற்றுப்பாடில் மாட்டிக்கொண்ட பிறகு வருவதை வந்தபடி ஏற்பது தவிர!''

''இதுதான் உங்கள் பதிலா?''

நான் வேறு பேசவில்லை. இவளோடு எவன் பேசுவான்? இந்த நிமிஷத்துக்கு இவளையே எங்கேயோ எப்பவோ பார்த்த மாதிரிதான் இருந்தது.

அவள் உதடுகள் நடுங்கின. மரணத் தீர்ப்பு கேட்ட கைதிபோல் அவள் முகத்தில் அவயவங்கள் விண்டன. அப்படியே மேஜைமேல் சாய்ந்தாள். முழங்கை வளைவுள் முகம் கவிழ்ந்தது.

நான் தேற்ற முன்வரவில்லை. இப்போது அவள்மேல் எனக்கு இரக்கம்கூட வரவில்லை. 'அழு, அழு, நன்றாய் அழு. அலுப்பு உனக்கு மாத்திரம்தானோ? எனக்கில்லையா?'

வண்டி கிளம்பியாகிவிட்டது. மேட்டிலிருந்து பள்ளத்தில் இறங்குகையில் சரியும் சப்தம் தூரத்திலிருந்து எட்டுகிறது.

புத்தகங்களில் செய்யவேண்டிய பதிவுகளைச் செய்தேன்.

அகமுடையான் அடித்தாற்போல் பிழியப் பிழிய அழறாளே, யாராவது வந்தால்?

அந்தக் கவலையே வேண்டாம். அநேகமாய் அடுத்த வருஷத்துக்குள் இந்த ஸ்டேஷனை எடுத்துவிடுவார்கள் என்றே நினைக்கிறேன். எடுத்துவிடட்டும். எல்லாம்

தொலையட்டும். என்னுள் எல்லாவற்றின் மேலும் ஒரு சீற்றம் எழுந்தது.

லெவல் க்ராஸிங் கதவை மூட, வேலன் எப்பவோ போயாச்சு. இப்போது வருவது "குட்ஸ்."

வெளியே வந்து தூண் அருகே தொங்கும் தண்டவாளத் துண்டை ஆணியால் தட்டினேன்.

யாருக்காகத் தட்டினேன்? யார் இருக்கிறார்கள் என் தட்டலைக் கேட்க? அர்த்தமற்ற இந்தக் காலி சத்தத்தை எதற்காக எழுப்புகிறேன், குண்டலி போலவே எல்லாம் கேலிக்கூத்தாய்ப் போச்சு. ஏனோ இப்படி வாழ்க்கையில் அவமானச் சின்னமாய் நிற்கிறோம்?

என் மனைவி அறையினின்று வெளிப்பட்டாள். அவள் கண்களில் வெறி கூத்தாடிற்று. கைகளை வீசிக்கொண்டு இருப்புப் பாதையை நோக்கி ஓடினாள். ஏதோ அவளிட மிருந்து தெறித்தது.

'குண்டலி செத்துப்போனாள்! குண்டலி செத்துப் போனாள்!! செத்தேபோயிட்டாள்!!' அவள் குரல் கீறீச் சிட்டு உடைந்து சுக்கல்களாய் உதிர்ந்தன. ஓடிப்போய்த் தாங்கிக் கொண்டேன். இல்லாவிட்டால் விழுந்திருப்பாள்.

ரயில் இரும்புக் கிராதியின் எல்லையுள் கடந்து கொண் டிருந்தது. தண்டவாளத்தின்மேல் குண்டலங்கள் இரண்டு வெய்யிலில் தகதகத்தன.

□□□

# ஆஹுதி

யாவதையும் உற்பவிப்பவனும், எல்லாவற்றையும் ஆள்பவனும் இயற்கையை அதன் அநந்த கோடி சாயை களுடன் தன் இடது சுண்டுவிரலில் சுற்றியவனும், எல்லா வற்றிலும் எல்லாமாயும், எல்லாவற்றிலிருந்து ஒதுங்கிய வனும், க்ருபா சமுத்ரமாயும், சம்ஹார மூர்த்தியாயும், நிற்குணனாயும், இல்லாமலே இருப்பவனாயும், சகல ஜீவா தாரனும், சர்வ லீலாகாரனுமாய ஆண்டவன், ஓய்வு ஒழிவற்றவன். பிரபஞ்ச ஆராய்ச்சி கதியில் அழகானதோர் இதயத்தை சிருஷ்டித்தான். லக்ஷிய குணங்களை அதன் உள்ளும் மேலும் சாறு பிழிந்தான்.

ஆண்டவன் அவ்விதய உருண்டையை ஏந்தி அதைத் திருப்பித் திருப்பி அதன் வேலைப்பாடுகளை வியக்கையில் அது கை போலும் ஒளி மருட்சி காட்டிற்று.

ஆனால் ஒன்றையே எத்தனை நேரம் அழகு பார்த்துக் கொண்டிருக்க முடியும்? அவனுக்கு க்ஷணப்போது ஓய்வு ஏது? பொடி நேரத்தின் தடுபடலுள் எத்தனை ஜீவன்கள் பிறக்கவும், சாகவும், உய்யவும் விசுவகர்ப்பத்தில் யுகவேத னையைப் பட்டுத் துடித்துக்கொண்டிருக்கின்றன! அந்த நினைவுதானோ, அகஸ்மாத்தோ அவ்விதயம் அவன் விரல் களிலிருந்து நழுவியது. அண்ட கோசங்களின் அகண்ட வேகக் கடையலில் அகப்பட்டு, சுழன்றுகொண்டே அது ககன வழி இறங்குகையில் அதை எட்டிப் பிடிக்கவும் அவனுக்கு நேரமில்லை. க்ஷணத்திடையில் யுகப் பிரளய

மாய வீங்கிப்போன தன் கர்மாவைப் பின்தொடர்ந்து பிடித்துக் கணக்குத் தீர்ப்பதில் கவனந் திருப்பிக்கொண் டான். அவன் பெருமூச்சின் பெரும் புயலில் அது அடித்துக் கொண்டு போயிற்று.

லக்ஷிய லக்ஷணங்களாலாகியும் நிர்க்கதியாய்ப்போன அவ்விதயம் தன்னுருவைத் தானே தேடிக்கொள்ளும் நிலைமை அடைந்து அண்ட கோசங்களின் அகண்ட வேக மான கடையலில் முடங்கி அழுந்தி ஜனனப் பிரவாகத்தில் தானும் ஒரு முளையாய் மூளைக்கத் துடிக்கும் வித்தாகி, விசும்பின் வழி திகிறி, பூமியில், ஆங்கு ஓர் அடவியில், ஓர் அருவியருகில், மர நிழலில், புற்றறையில், நாலு காலையும் நீட்டிப் படுத்து, புதுப் பிறப்பில் தவித்துக் கொண்டிருந்த தோர் காராம்பசுவின் கருவை அடைந்தது.

தன் கருவில் திடீரென நேர்ந்த புரட்சியை அத்தாய் உணர்ந்தது. புரியாத புது கனம் வயிற்றை அழுத்தியது. பசு வீறிட்டது. அந்நாபீ வீறல் காற்றில் மோதியது. ஆகாய வெளியில் கற்பகற்பங்களாய் மௌனாகாரத்தில் மிதந்து கொண்டிருக்கும் நாத பிந்துக்கள் உடைந்து எதிர் அலறின. மரங்களில் இலைகள் அசைவு தடுமாறி அடையாக நின்றன. பூமியும் அசை நின்று துவங்கியது. ஓரிரு மலைகள் எங்கோ நிலைகுலைந்து தலை கவிழ்ந்தன. பூகம்பம் உண்டாகியது.

இத்தனை கோலாகலத்துடன் அவ்வித்து உருவாகி, உயிராகி வெளிப்பட்டு, தாயை உதறிக்கொண்டு பூமியில் தானும் ஒரு தனியாகி விழுந்ததும், விழுந்த கன்றை, நக்கிக் கொடுக்கத் தாய்க்குச் சக்தியில்லை. ஆனால் ஈச்வரனுக்கு ப்ரீதியான அதன் பால், தாய்மையின் மஹிமையில், ஈச்வர னுக்கும் கிட்டாத இனிப்பைப் பெற்று மடிபுரண்டு, அருள் பெருகிப் புற்றறைமேல் பாய்ந்து, பச்சைப் புல் நுனிகளில் பால் துளிகள் முத்து மகுடங்கள் கட்டின. அருவிப் பாலாய் ஓடிற்று.

கன்று மண்டியிட்டே நகர்ந்து நகர்ந்து கிட்டிக் கிட்டி மடியில் வாய் முட்டி முட்டி, காம்புகளைப் பற்றியதும் இன்பத் தவிப்பில் தாய் மூர்ச்சை போயிற்று.

கன்று போட்டு நெடுநாள் தாய்க்கு உயிரோடிருக்க முடியவில்லை. அது ஈன்ற வித்து அதன் கருப்பையினும் மிக மிகப் பெரிதான காரணம், தாயின் வயிறு உள்ளே நார் நாராய்க் கிழிந்திருந்தது. கன்று தானே ஒரு புல்லைத் தன் வாயில் அதக்கிக் கடிக்க அதற்குச் சக்தி வரும்வரை, பசு தன் உயிரைத் தன்னோடு கெட்டியாய் இருத்திக் கொண்டிருந்தது.

பிறகு ஒரு நாள். உயர்ந்த கரைகளின் நடுவே புரண்ட கானாறில், தாய்ப்பசு மெதுவாய் இறங்கித் தண்ணீர் குடிக்க விளிம்புமேல் தலை குனிகையில் குளம்பு வழுக்கிவிட்டது.

''அ—ம்—மா......!''

கரைமேல் மேய்ந்திருந்த கன்று, காற்றின் அலைகள் தாங்கி வரும் அவ்வபயக் குரலைக் கனவில் கேட்டதுபோல் கேட்டுத் தலைநிமிர்ந்ததும் நினைவு மறக்கடிக்க வேடிக்கைக் காட்டி மரங்கள் மெதுவாய் 'ஆனை ஆனை' சாய்ந்தாடின. திரை ஆடினாற்போல் காற்று படபடத்து மிதந்தது. கண்விழித்து அழிந்த கனவுபோன்று தாயின் நினைவு மறந்தது.

கன்று குனிந்து மறுபடியும் சாவதானமாய் மேய ஆரம்பித்தது.

அதன் எந்த அங்க அசைவிலும் அதனால் அழகாயும் கம்பீரமாயும் இல்லாமல் இருக்க இயலவில்லை.

குனிகையில், நிமிர்கையில், தலையை ஆட்டுகையில் கழுத்தைத் திருப்பி, நீண்ட சுருள் நாக்கால் தன்னுடலை நக்கிக் கொள்கையில், தன்னைச் சூழ்ந்த காட்சியைச் சிந்தித்து அசைவற்று வெறுமென நிற்கையில்.. ......

சீக்கிரமே அது தன் முழு வளர்ச்சியை அடைந்தது. அவ்விடத்தின் செழுமையோ, அதன் தாய்ப் பாலின் மகத்துவமோ அதன் சொந்த மகிமைதானோ, அதனின்று வெளிப்பட்டு அதனைச் சூழ்ந்த காம்பீர்யத்தின் நடுநாயகமாய் அது திகழ்ந்தது. அதன் தோற்றம் கம்பீரம் என்று மாத்திரம் முடிப்பதில் முழுமையில்லை. அதனை ஒரு தனி சமூகம், பிரசன்னம், விலாசம் விசாலித்தது. வெள்ளமோ தீயோ பரவி வருகையில் இடத்தை வெறுமென அழித்துக் கொண்டு மாத்திரம் வருவதில்லை. தமதாகவே ஆக்கிக்கொண்டு விடுகின்றன. அவ்விதம் தான் புழங்கிய இடத்தை, தான் என்ற—தனி நினைவற்ற தன் ஒருமையின் தனிமையில் அத்துடன் இழைந்து தனதாக்கிக்கொண்டு விட்டது.

வயிறு புடைக்க மேய்ந்துவிட்டு, அந்தி வேளையில் செஞ்ஜோதியில், தானே வேள்விக் குண்டத்திலிருந்து சரிந்த பெரியதோர் கொள்ளிபோல் ஒளிமயமாகித் தொலைவில் மலைக் குன்றிற்கப்பால் அடிவானத்தைப் பொக்கை வாயில் மென்று குதப்பிக்கொண்டே மெதுவாய்ப் புதையும் சூரியனை, வியப்புடன் நிமிர்ந்து நோக்கியபடி—அத்தனை தாவரங்களின் நடுவே தான் மாத்திரம் தனி நடை உயிராய் லயித்து நிற்கையில், அடவியின் மரங்களும் குன்றும் எல்லாமே அதற்கெனவே அது காணும் முறையில் அதன் ஆட்சியுள் அடங்கின.

அங்கு எப்பவுமே சூழ்ந்த மோனாகாரம் ஓரோரு சமயம், தாய் விலங்கு தன் குட்டியைக் கவ்வுவதுபோல், அதன் அகண்டவாயில் அதைக் கவ்வுகையில், காளையின் இதயத்தில் புரியாத சாயா ரூபங்கள் தோன்றின. தலையை உதறிக்கொண்டு, உடலை நெறித்து, ஒன்றும் புரியாத களிவெறியில் வெகுவேகமாய் நாலுகால் பாய்ச்சலில் ஓடுகையில் அதன் குளம்புகள் தவறற்ற தாளத்தில் பூமியில் பட்டுப் பட்டெழுகையில், யௌவ்வனத்தின் ஜய பேரிகை முழங்கிற்று. நிமிர்ந்து வளைந்து நிமிர்ந்த வால் நுனியில்

குஞ்சம் கொடி பறந்தது. அந்த உன்மத்தத்தோடேயே ஓடி வந்தது. ஒரு மரத்தை முட்டிற்று. கிழமரம் உடல் முழுவதும் புல்லரித்துக் கிளைகள் குலுங்கின. ஆனந்த பாஷ்யத்தில் புஷ்பங்களும் இலைகளும் உதிர்ந்தன.

அவ்வெறியிலேயே காளை அப்படியே திரும்பி, திடுதிடு வென பூமியதிரச் சறுக்கிக்கொண்டே வெகு வேகமாய்க் கானாறில் இறங்கிற்று. நுரை கக்கி சுழித்தோடும் ஜலத்தைக் கிழித்துக் கொண்டு, எதிர்நீச்சலில் வெள்ளத்தில் நுழைந்து ஜலத்தைக் கலக்கி நன்கு துளைந்த பின், தலை உதறி உடம்பைச் சிலிர்த்தவண்ணம், எதிர்க்கரைக்கு ஏறுகையில் இரு பக்கங்களிலும் ஜல ஸ்படிகங்கள் விசிறி உடைந்து பூமி யில் சிதறின. மேனி மின்னிற்று. கல்லுருண்டை போன்ற திமில்மேல், அழகுகள் புடைத்து வழிந்து விளையாடின. சிந்தாத தன் ஆண்மையின் தூய்மையில் அது ரிஷிகுமாரன் போல் ஜ்வலித்தது. நீண்ட கொம்புகள், அஞ்சலியில் எழுந்த கைகள் போலும் ஒன்றையொன்று நோக்கி வளைந்தன.

கரைமேல் ஓங்கிய அரசின் கீழ் அது படுத்துத் தன் அசையை மெல்லத் துவங்கிற்று. எதிர் விரிந்த புல்வெளி களின் மேல் படர்ந்து சாயும் இரவில் இருளில் திமில் ஓங்கித் திமிர்த்து நின்றது. அதன் உச்சியில் நட்சத்திரங்கள் தங்கி இளைப்பாறின. காளை கண்ணயர்ந்தது.

அடிவானம் செவ்வானமாகி வரும் பின்னணியில் ரிஷபம் தன் கண் திறப்பின் முதல்விழிப்பாய் அக்குன்றை விடிவில் கண்டதும் அதன் விழி புது விழிப்புக் கண்டது. புரியாத ஆவல் உந்த, காளை எழுந்து குன்று நோக்கி நடந்தது. புல் வெளிகளைக் கடந்து நெருங்க, நெருங்க, மலைக் குன்றை அவைகளின் முழுமையில் காண்கையில் அண்டப் பட்சிகள் குதறியெறிந்த பிரும்மாண்டமான பழம் போல் சிறு குன்றுகள் சிதறிக் கிடந்தன. அவை மேல் செடிகளும் சில மரங்களும் தலைகளை ஆட்டி ஆட்டி விருந்தாளியை

வரவேற்றன. அந்தப் பிரும்மாண்டமான பழத்தின் கொட்டையின் முகடுபோல், அவை நடுவே மலை நின்றது. அதன் அடிவாரத்திலும் உடலிலும் பாறைகள் முண்டு முடிச்சுமாய், அசிங்கமாய், ஆத்திரத்துடன் எழுந்தன. ஆனால், மலை உயர உயர, அது இட்டுக்கொண்ட சிகரம், கீழ்கிடப்பனவற்றின் பௌருஷத்தைத் தூண்டிப் பழித்தது. அந்த இடத்தில் மாத்திரம் வானம் பொத்துக்கொண்டு மலையுச்சியில் நீலம் பெய்தது.

காளை முகந்தூக்கி மலைமேல் நீலத்தைத் தரிசித்ததும், அதன் கழுத்து மடிகளுக்கிடையில் நெஞ்சு நெகிழ்ந்து கவித்தது. மலையை வணங்குவதுபோல் தலை குனிந்து மூச்சுப் பிடித்து, காளை மலைமேல் ஏற ஆரம்பித்தது. தன் பலத்திற்கு ஈடான சோதனையில் அது ஒரு தனிப் பரவசத்தில் ஆழ்ந்தது. இதுவரை பழக்கமிலாத இடங்களையும் உயிர்களையும் சப்தங்களையும் காண்கையில், கேட்கையில் அதன் வியப்பு எடுத்து வைத்த அடிக்கு அடி மிகையாயிற்று.

ஒரு இடத்தில் ஒரு பாறையின் சந்தில் ஒரு கொடி சுருண்டு கிடந்தது. அதைக் கடிக்கக் காளை கழுத்தை நீட்டியதும், அக்கொடி திடீரென சுருள் சுழன்று சரசரவென வளைந்து வளைந்து ஓடிப் பாறையின் மறுபுறத்தில் ஒளிந்து கொண்டது. அந்தண்டையிலிருந்து "புஸ்புஸ்" என சீறல். காளை திகைத்தது. அது தலை நிமிர்ந்து குன்றிடுக்கில் முளைத்திருந்த ஒரு இலைக் கொத்தை வாயில் பற்றி இழுத்தது. அந்தச் செய்கையில் அதன் கண்களுக்கே மலையின் மறுபக்கத்துப் பிரதேசம் திடீரெனக் குதித்தெழுந்தது. காளை, பறித்த இலையைக் கடிக்க மறந்தது. ஒன்றும் பாதியுமாய் இலைக் கொத்து அதன் வாயிலிருந்து தொங்கிற்று.

மலைச் சிகரத்துக்கும் அதற்கும் இன்னும் கொஞ்ச உயரமே தான் பாக்கி. படிபோல் உயர்ந்து இடங்கொடுத்த ஒரு கல் முடிச்சின் மேல் காளை காலை வைத்தபடி, ஒரு குறுகிய பாறை மீது பின்னங்கால்களை ஊன்றிக்கொண்டு

நடுமுதுகு சற்று உள்நெளிந்து இன்னமும் மலையேற நிற்கை யில் அப்புது உலகம் அதன் மேலுறை கழன்று விழுந்தாற் போல் எதிர் தோன்றிற்று. அந்த ப்ரமிப்பில் அப்படி நின்ற நிலையிலேயே காளை கல்லோடு கல்லாய்ச் சமைந்தது. வானத்தின் பசுமையே கீழிறங்கி கொழித்தது. கண்ணுக்கு ஏதோ பார்க்கையிலேயே காளைக்கு நாக்கு சுவைத்தது. திடுதிடுவென பூமியதிர எதிரே இரு குன்றுகளிடையே ஒரு ஆறு சரிந்தது. மார் உயரம் புற்களிடையே புரியாத நிழல் கள் ஒளிந்து விளையாடின. மண்ணே கண்ணுக்குத் தெரிய வில்லை. எங்கும் பச்சை, பச்சை, பச்சை.

காளைக்குத் திடீரென பிடரி குறுகுறுத்தது. அதன் உணர்வுகள் உஷாராயின. எதுவோ தன்னை ஊர்ந்து நோக்கும் ஈர்ப்புக்கு அச்சமடைந்து சட்டென காளை தலை மட்டும் திரும்பிற்று. அது போன்றே ஒரு பிராணி. மலைச் சரிவில் தன்னிலும் சற்று தாழ்வில் நின்று அதைக் கவனித்துக் கொண்டிருந்தது. நீராடுகையிலும் தாகம் தணிகையிலும் காளைத் தன் நிழலைக் கண்டிருக்கிறது. ஆயினும் இவ்வளவு தெளிவாய்த் தன் உரு, தனித்து ஜலம்தாண்டி பிதுங்கிக் கண்டதில்லை. தன்போலேதான், தானேதான், ஆனால் தான் இல்லை. இதற்குக் கொம்புகள் சிறுத்து நுனி மிகக் கூரிட்டிருந்தன. தொடையில் பெரும் கருந்திட்டு, கால்கள் அவ்வளவு நீளமில்லையோ? கட்டையாய்த் திடமாய்க் குளம்புகள் பாறை மீது ஊன்றிப் பிடிப்பாய் நின்றன. வால் சுழன்று ஆடிற்று.

புது மாடு மெதுவாய் ஒரு அடி முன்னெடுத்து வைத்தது. காளை அசைந்துகூடக் கொடுக்கவில்லை. கல்லாலடித்தாற் போல் நின்றது. கண்கள் மாத்திரம் பளபளவென்றன. கொஞ்சங் கொஞ்சமாய் ஊறும் நம்பிக்கையுடன் மாடு அடி மேல் அடி வைத்து கிட்டக்கிட்டக் கிட்டவே—காளை முகம் முகர்ந்தது. சத்துருவில்லை என்று அறிந்ததும் பெருமூச் செறிந்து, தன் கழுத்தைக் காளையின் கழுததோடு உராய்ந் ததும் ஈருடலின் ஓரோயிரின் ஊடுருவில் அவையவைகளில்

ஜன்மேதிஜன்மமாய்த் துடிக்கும் மூலநாடி புடைத்தெழுந்த அதிர்ச்சி, தாங்கத்தக்கதாயில்லை. இப்படி இரண்டும் முகத்தோடு முகம் வைத்து கழுத்தோடு கழுத்து உராய்ந்து கொள்ளும் இந்தச் சைகையே ஒரு முத்திரையாய்த் தான் அமைந்தது. ஒன்றையொன்று அறியாமலே பிறந்து, வளர்ந்து இத்தனை நாட்களுக்குப் பின், ஒன்றுக்கொன்று தெரியாமலே ஒன்றையொன்று தேடிவந்து, இப்போது ஒன்றையொன்று சந்தித்துக்கொண்ட இயற்கையின் சத்திய ஏற்பாடின் முத்திரை. அந்த ஆதார சத்தியத்தின் உக்கிரம் காளையின் நாபியில் உறங்கிக் கிடந்தது, சுருள் கழன்று விழித்தெழுந்ததும், அதன் விழித்திறப்பில், அதன் நெற்றி நடுவில் மின்னல் கொடிகள் பின்னிப் பளிச்சிட்டன. ஒரு கணத்தின் யுகநேரம் மலையும் பாறைகளும் காற்றில் காற்றாடி மிதந்தன. காளை அதிர்ச்சியில் கண்கூசி கண் மூடிக் கொண்டது.

கண் திறந்ததும் காளைதான் அதைக் கண்டது. அது இன்னும் காளையைக் காணவில்லை. மலையடிவாரத்தில் ஒரு பாறையின் பின்னிலிருந்து அது வெளிப்பட்டது. அதைக் கண்டதும் காளைக்குத் திமில் சிலிர்த்தது.

விளம்பலற்ற ஒரே கோடில் எழும்பி வளைந்து முடிந்து, உயிராகி ஒரே லகுவிலும் லயத்திலுமே இழைத்த உடலில் கட்டுக் கட்டாய் வரிவரிக்கோடுகள் ஓடின. ஆறாத பசியில் நீண்டு குறுகிய வயிறு. தீராத கோபம் கொதித்துக் கொதித்து நீறு பூத்த தணல் விழிகள், எப்பவும் எதையோ தேடி அலைந்தன. அந்த ஓயாத தேடலில் அதன் மீசையும் வாலும் அசைந்தாடியபடியேயிருந்தன. இந்தப் புதுதரிசனம் தன்னிலும் உரம் மிகுந்தது. அதன் வழியில் தன்னிலும் உயர்ந்தது என்று காளை தெளிவாய் அறியாவிடினும் திடமாய் உணர்ந்தது. அவ்வுருவம், எந்தப் பாறையின் மறைவிலிருந்து வெளிப்பட்டதோ, அந்தப் பாறையை ஒரு முறை தேடலில் சுற்றி வந்தது. அந்த

நடையின் லகுவும் பிகுவும் விறுவிறுப்பும் உள்ளம் கொள்ளை கொண்டது.

காளையின் கவனம் மாறியது புரியாது காளை நோக்கின் வழி, பசுவும் நோக்கிற்று. அப்போதுதான் அதுவும் அதைக் கண்டது. கண்டதும் கதிகலங்கி மிரண்டது. அதன் அங்கங்களை ஆயிரம் பேய்கள் திடீரெனக் கவ்வின. மலையின் மறு சரிவில் கடக்க முயன்றது ஆனால் குறுக்கே காளை கல்லாலடித்தாற் போல் நின்றது. பசுவின் கண்ணோரங்களில் சிவப்பு சீறி எழுந்தது. தலைகுனிந்து வாங்கி, பசு தன் முழுகனத்தின் முழு வேகத்துடன் காளையின் வயிற்றில் முட்டிற்று. எதிர்பாராது அப்படி தாக்கியதும், காளைக்குக் கால்கள் சறுகி நிலை பிசகின, சமாளிக்க இட வசதியில்லை. சந்தர்ப்பமுமில்லை. அதற்குள் இன்னொரு முட்டு. கொம்பு தன் சப்பையைக் கிழித்துக் கொணடு உள்ளிறங்குவதை காளையுணர்ந்தது. உணர்ந்து கொண்டிருக்கையிலேயே அது மலைச் சரிவில் அப்படியே அடியோடு உருண்டது. பசுவின் முழு கனத்தின் உந்தலோடு அது கீழ்நோக்கி விழும் தன் கனத்தின் வேகமும் சேரவே, பற்கள் போல் ஆங்காங்கே நீட்டிக் கொண்டு நிற்கும் கற்கூர்களில் ஒன்று—இரண்டு—மூன்று முறைத்தெறித்து எகிறித் தெறித்து எகிறித் தடாலென மலைச்சரிவிலேயே இருபாறைகளுக்கு நடுவில் விழுந்து ஆப்பு அறைந்தாற் போல் மாட்டிக் கொண்டது.

ஆனால் அதற்கு அப்போது நினைவில்லை.

பசு எங்கோ விழுந்தடித்து ஓடிவிட்டது.

உச்சி வேளைக்குப் பாறைகளில் ஏறிய வெய்யிலின் கொதிப்புத்தான் அதை ஸ்மரணைக்கு மீட்டது. வெப்பம் கண்களைத் துருவிற்று. காளை பிரள முயன்றது. ஆனால் உடல் இம்மிகூடக் கிணுங்கவில்லை. இசைகேடாய்ச் சிக்கிக் கொண்டிருந்தது. அந்த முயற்சியில் தொடைத் துவாரத்திலிருந்து இரத்தம் குபுகுபுத்தது. அந்த வலியின் நினைவு திரும்பிய பயங்கரத்தில் காளை வாய்விட்டு அலறிற்று.

ஆனால் அது அதன் குரலாகவேயில்லை. பூமியையே மட்டை உரித்தாற் போன்ற ஒரு கோர சப்தம். மலைச்சரிவிலிருந்து பாறைக் கற்கள் ஒன்றிரண்டு எதிரொலியில் உதிர்ந்தன.

காளையின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாய் வழிந்து கொண்டிருந்தது. செழித்து ஓங்கிய பேய்ப் புற்களின் ஊடே, காற்றின் சீறல் செவியில் மோதிற்று. காளையின் வயிறு முதுகோடு ஒட்டிக்கொண்டிருந்தது.

திடுதிடும் திடுதிடும் திடுதிடும்.

பூமியின் தாகத்தையே தணிக்க விரைவது போலும் மலையிலிருந்து அருவி இறங்கும் சப்தம். காளைக்கு நாக்கு வீங்கித் தடித்து, பாம்பு போல் சுருண்டு தொண்டையை அடைத்துக் கொண்டது.

இந்தப் பரிகாசம் காளைக்குப் புரியவில்லை. வெகுண்டு மற்றுமொரு முறை தன்னை விடுவித்துக் கொள்ளத் தன் முழு வன்மையோடு தவித்தது. அதன் ரத்தத்தில் மறைந்து பாயும் கோடி கோடி காளை ஜன்ம வித்துக்களும் அப்பவே அத்தனையும் முளைக்கத் துடிப்பது போலும் குதித்துக் கொதித்து எழுந்தன. ஆனால், பாறைகளின் எமப்பிடி தளரவில்லை. அதை அழுத்திப் பிடித்துக் கொண்டு, அதன் வேளைக்கு அவை அசைவற்று காத்துக் கொண்டிருக்கும் தன்மையிலேயே ஒரு விரக்தியான சிரத்தையும் இரக்கமின்மையும் தெளிவாயிற்று. இப்படித்தான் பூமியில் பொருள் எனத் தோன்றியவை எல்லாம்—அசைவனவோ அசையாவனவோ, தாம் உணர்ந்தோ உணராமலோ, இஷ்டப்பட்டோ படாமலோ—தம்தம் பொருட்டை நிறைவேற்றி வரும் நியதி காளைக்கு உரைக்கையில் அதன் கண்களுக்கெதிரே பட்டப் பகலில் இருள் தூலங்கள் மாறி மாறிப் படர்ந்து அதன் மேல் இடிந்து விழ்ந்தன. மறுபடியும் காளைக்கு நினைவு தப்பிப் போயிற்று.

மறுபடியும் கண் திறந்தபோது இரவு இடத்தைப் போர்த்திவிட்டது. பூமியில் பூக்கள் சிதறிக் கிடப்பதை

எத்தனையோ முறை அது கண்டிருக்கிறது. தின்றுமிருக்கிறது. அதே மாதிரி வானில் இப்பொழுது பூக்கள் வாரி இறைந்திருந்தன. ஒன்றன் ஒன்று ஒரே அளவில் இரு பறவைகள், கண்ணெதிர் உயரத்தில் பறந்து கொண்டு தம் கூட்டிற்கு விரைந்து கொண்டிருந்தன.

நேரம் ஏறஏற பகலின் சப்தங்கள் ஒவ்வொன்றாய் அடங்கிப் போயின. உட்புலனுக்கு மாத்திரம் புலனாகும் அர்த்தக் கருக்களுடன், இரவின் நாதவடிகள் ஒவ்வொன்றாய் முளைக்க ஆரம்பித்தன. புதர்களில் ஒரு சலசலப்பு. இலைகளின் பெருமூச்சு, திடீரென்று இரவையே இரண்டு துண்டங்களாய் வெட்டி, இரவே கூக்குரலிட்டாற்போல் ஓர் அலறல், ''கெக் கெக் கேக் கேகே''—''கக்கட கக்கட கட கடகட—'' மரங்களிலிருந்து ஒரு பறவையின் சமயமற்ற சிரிப்பு. திடுதிடும் திடுதிடும் திடுதிடும்—நீர் வீழ்ச்சியின் ஓங்காரம். பகலில் உள்ளுக்கு வாங்கிக்கொண்ட கொதிப்பைப் பாறைகள் வெளியே கக்க ஆரம்பித்தன. தன்மேல் முலுமுலுமுலுமுலுமுலு என்று ஏதோ ஊர்வது காளைக்கு உணர்ந்தது. அரிப்புத்தாங்க முடியவில்லை. ஊரல் கழுத்தில் ஏறி சாரை சாரையாய் வயிறு வழியிறங்கி, தொடைப் புண்ணுள் நுழைந்து வெடுக்கென பிடுங்கிக் குடைந்தது. அந்த வலியால் துடிக்கக்கூட அதற்கு உரிமையில்லை! பாறைகள் தம் இடுக்கில் இடுக்கி பிடித்துக் கொண்டிருந்தன. காளை ஒருமுறை தன் விழியை உருட்டிப் பார்த்தது. அதன் விழியளவு பெரிய உயிர்கள் ஒழுங்கான அணியில் தன்மேல் மொய்ப்பது வானொளியில் தெரிந்தது.

'ரண ஜன்னியில் உயிர் ஊசலாடுகையில்—பசி, தாகம், வலி முதலிய உணர்ச்சிகள்கூட மரத்தன. அதற்கே, தன் கால்கள் கீழே பாவாது விடுபட்டு, லேசாய், உயர உயரக் காற்றில் மிதந்து செல்வது போல் தோன்றிற்று. தன் மல ஜலத்தில் ஊறியபடி மலையிடுக்கில். பல விதங்களிலும் துன்புற்று இன்னும் உயிரோடு தவிக்கும் தன்னுடலையே அதனின்று ஒதுங்கிதான் பார்ப்பது போலும் தோன்றிற்று.

இதுவரை தெரியாத, தோன்றாத, புரிந்தும் புரியாத அதற்குச் சம்பந்தங்கூட இல்லாத பாஷையில் விஷயமும் கேள்வியுமாய்த்தானே அமைவது போலும் அதற்குத் தோன்றிற்று.

''நான்.''

''நான் யாரா யிருப்பினும் சரி, நான் என்னுருவில் நல்லுருவாய்த்தான் நானானேன். ஜன்மத் தொடர்பின் அழுக்கில் புழுத்து நான் எழவில்லை. என் பிறவி என்னா லல்ல. நேரே உன் கைகளிலிருந்தே உன் ஆசையில் சமைந் தேன். உண்மைக்கும் உள்ளுண்மையில், என் பிறவியும் நானும் உன்னாலேயே உன்னுடையதே. உன் லக்ஷியங்களின் லக்ஷணங்களோடு நான் உருவானதால், உன் விதிப்படியே நான் எடுத்த பிறவிக்கு அழகு செய்ய வேண்டியவனே. ஆனால் ஏன் என்னை இப்படி, என் முதல் பிறவியிலேயே, என் பிறவியின் அவமானச் சின்னமாய் ஆக்கினாய்?''

வானத்தின் நட்சத்திரங்கள் வெட்கிக் குனிந்து ஒன்றன் பின் ஒன்றாய் அவிந்தன. மேகப்படலங்கள் சூழ்ந்தன.

''நான் பிறவியை மறுக்கவில்லை. இறப்பையும் மறுக்க வில்லை. எனக்கு இயக்கம் தந்து என்னை ஒரு தனிக்கூடாய் ஆக்கியபின், நான் வாழ்வை மறுக்கவில்லை. மறுக்க முடியாது. ஆனால் என்னை வாழ விடாது என் வாழ்க் கையை வியர்த்தமாக்கியது ஏன்? மெய்யெனவே என் வித் தைப் பாறைமேல் சிதற விட்டாய். நீ என்னைப் பிறப்பித் தாய். நான் உன் குழந்தை. ஆனால் நீ என் தாய் அல்ல. நீ உன் குழந்தையைக் கைவிட்டு ஓடிவிட்டாய். என்னைப் பெற்றவள், என் பிறப்பில் தன் உயிரைக் கொடுத்து வெள்ளத்தில் மறைந்து போனாள். அவள் செத்தாள், நான் இருக்கிறேன், நான் இப்பொழுது செத்துப் போய்க் கொண்டிருக்கிறேன். நீ ஓடிப் போய்விட்டாய். நீ ஓடிப் போனதால், சத்திபத்தின் நித்தியத்தையே பொய்யாக்கின உனக்கு விமோசனமே கிடையாது. எனக்கு உண்டு.

எனக்கு ஜன்மத்தைக் கொடுத்து, அதை வீணாயும் அடித்து, அதுவே காரணமாய் அதற்கு ஒரு தொடர்பை நீ ஏற்படுத்தி விட்டாலும், அந்த ஜன்ம ரீதியிலேயே நான் வளர்ந்து வளர்ந்து ஒரு சமயத்தில் உன் தேவையே இலாது உன்னி லும் பெரிதாகிவிடுவேன். ஆனால் நீயோ, நீ பிடித்துப் பிடித்துப் போட்ட மண்ணை அழித்து அழித்துப் பிசைந்து அதையே தின்று கொண்டிருப்பாய். இது விந்து விருக்ஷத் திற்கு இடும் சாபம். வீண்போகாது வீண்போகாது—''

இடி குமுறி உடைந்தது. எங்கோ மரத்தில் ஒருகிளை மொளமொளவென முறிந்தது.

''நான்.''

''நான் யாரை இப்படி எதற்காகத் தூற்றுகிறேன்?''

வானம் வெட்கத்தில் உகுத்த கண்ணீர்போல், மழைத் துளிகள் காளை முகத்தில் ஒன்றும் இரண்டுமாய் உதிர்ந்தன. காளைக்கு நெஞ்சு இறைத்தது. கண்கள் நிலைக்குத்தி விட்டன. ஆனால் அது உருவான இதய பலத்தில் குற்றுயி ரும் நினைவும் இன்னும் விடாது உடலோடு ஒட்டிக் கொண்டிருந்தன.

பொலபொலவென பொழுது புலரும் வேளையில் காளையின் கண்ணெதிர் உயரத்தில் திறந்தவாய் போன்ற இருபாறைகளின் இடைவளைவில், வானத்தின் செந்திட் டின் பின்னணியிலிருந்து சூரியனுக்கு முன்னால் அவ்வுருவம் உதயமாயிற்று. தன் திமிலின் சிலிர்ப்பிலேயே காளை அதை அடையாளம் கண்டு கொண்டது. அப்போதே அதுவும் அதைக் கண்டது. அதன் மீசை துடித்தது. அதன் உடல் ஒருகணம் பதுங்கலில் ஒடுங்கிக் குறுகிற்று. அவ்வளவுதான்.

காளையின் இதயம் நெஞ்சுவரை எழுந்தது.

மலையை உதைத்துக் கொண்டு எழும்பிய பாய்ச்சலில் வேகத்தில் திகிரிபோல் அந்தரத்தில் நீந்திக் கொண்டே அவ் வுருவம் நேரே மாட்டின்மேல் இறங்கிற்று. ஆனால் அதன் உடல் படுமுன் ரிஷபத்திற்கு இதயம் வெடித்துவிட்டது.

□□□

# முள்

ஒரு திருப்புத்தான் திருப்பியிருப்பேன்; அது இரண்டு தடவை திருகினால்தான் திறக்கும் பூட்டு. மேலிருந்து அவர் குரலின் அவசரம்—இல்லை, அதன் மெலினமான ஈர்ப்பு என்னை எட்டிற்று. சாவியைப் பூட்டிலேயே விட்டுவிட்டு, விடுவிடெனப் படிகள்மேல் தத்தி ஓடுகையில், சிறுவயதில் ஆடிய கயிறு விளையாட்டு ஞாபகம் வந்தது. ''ஸ்கிப் ஸ்கிப்...ஸ்கிப்'' படிக்கட்டு S வடிவத்தில் இருமுறை வளைந்துதான் பிறகு நேராய் மாடிக்கு ஓடிற்று.

ராத்திரி எப்போது மழை பெய்தது? மழையென்று பொழியல் இல்லை; பூமி நனைந்த லேசான தூறல், முகம் துடைத்த குழந்தைகள்போல் மரங்களின் இலைப்பச்சை பளிச்சென்று ஆனால், தனிப்பூச்சாய்த் தெரியாமல் பின்னணியில் வேளையின் மந்தாரத்துடன் ஒவ்வி இழைந்தது.

அவர் படுக்கையில் எழுந்து உட்கார்ந்திருந்தார். தலையணைமேல் நான் போட்ட இடத்தில் புஷ்பம் அப்படியே கிடந்தது.

என் வருகையை அறிந்தாரேனும் அவர் நிமிர்ந்து பார்க்கவில்லை. கவனம் தன் வலது கைமேல் ஆழ்ந்திருந்தது.

''என்ன?'' என்று கேட்டுக் கொண்டே, அருகில் அமர்ந்தேன். கையை நீட்டினார். சுட்டுவிரலில் சொட்டுச் சிவப்பு

துளித்து நின்றது. சட்டென விரலை வாயுள் வைத்துச் சப்பினேன்; பிறகு அந்த இடத்தில் நகத்தால் சுரண்டிப் பார்த்தேன்.

"ஏதாவது இடறுகிறதா?"

என்மேல் வைத்த கண்கள் மாறாமல் என்னையே சிந்தித்துக் கொண்டிருந்தன. முகத்தில் புன்னகை மாற வில்லை.

"முள் எல்லாம் ஒரு சமயம்போல இருக்காது; முள் ளுக்கு விஷமுண்டு..." என்று சொல்லிக் கொண்டே சுற்று முற்றும் பார்த்தேன்.

"அவசரத்துக்கு அருக்கஞ்சட்டி கைக்கொள்ளாது. என்னை என்ன பண்ணச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டுக் கொண்டே அவர் சட்டைப் பையில் நீட்டிக் கொண்டிருந்த கைக்குட்டையை இழுத்து, ஒரு ஓரத்தை நாடாவாய்க் கிழித்து விரலில் சுற்றினேன்.

அவர் புருவங்கள் வினாவில் எழுந்தன. என்ன அடர்த்தி, என்ன முரடு, அணில் முதுகில் ராமர்கோடு போல்!

"நான் ஏதோ நல்ல எண்ணத்தில்தான் பறித்துப் பக்கத் தில் வைத்தேன்; நான் எழுந்த இடத்தில் இருக்கட்டும், நீங்கள் கண் திறந்ததும் உங்களுக்கு நல் முழிப்பு ஏற்படணும் என்று. ஆனால் பொழுதுவிடிந்ததும் விடியா ததுமாய் முள்ளைத் தைத்துக் கொண்டு நிற்கிறீர்கள்!"

சொல்லும்போதே எனக்கு அழுகை வந்துவிட்டது.

என் கன்னத்தில் சரளமாய்ப் புரளும் கண்ணீரைப் பார்த்துக் கொண்டேயிருந்தார். இன்னும் சிந்தித்துக் கொண்டு தானிருந்தார். முகத்தில் புன்னகை மாறவில்லை. அவர் அம்மாதிரியிருந்தது என்க்கு எரிச்சலாய் வந்தது. கோபத்தோடு கன்னத்துக் கண்ணீரை விரலால் வழித்து உதறினேன். மூக்கை உறிஞ்சிக் கொண்டேன்.

''உங்களுக்கெல்லாம் கேலியாய்த் தானிருக்கும்; அப்படி நான் கேலியாய் இருந்தாலும் இருந்துவிட்டுப் போகிறேன், அவ்வளவுதானே! ஆனால் எதையும் தாங்கிக்கற மனசு எனக்கில்லை. உங்களோடு என்னைக் கூட்டி வழியனுப்புகை யில் கூட அப்பா என்ன சொன்னார்?''

புருவங்கள் மறுபடியும் சிலிர்த்துக் கொண்டன.

''ஒண்ணுமே தெரியாத மாதிரி வேஷம் போட வேண் டாம். என் வாயாலேயே வரணும் என்று உங்களுக்கு எண்ணம் இருக்கிறாற் போலிருக்கிறது. இருக்கட்டுமே! அதனாலும்தான் என்ன, உள்ளத்தைத் தானே சொல்றேன்! ஆனால் அப்பா என்னமோ கிண்டலாய்த்தான் சொன்னார். 'மாப்பிள்ளைவாள், என் பெண்ணிடம் சோகமான கதைப் புத்தகம் ஏதேனும் தப்பித் தவறிக்கூட கொடுத்துவிடாதே யுங்கள். படித்துக் கொண்டு அழுது கொண்டேயிருப்பாள்; உங்களுக்கு வேளைக்குச் சாப்பாடு கிடைக்காது. நேரமாகி விட்டதேயென்று நீங்கள் சாப்பிடாமல் போய்விட்டால், அதையும் சேர்த்து அழுது கொண்டிருப்பாள். வெயிலிலோ மழையிலோ, தப்பித் தவறிக்கூட அவளோடு வெளியே கிளம்பி விடாதீர்கள். கூடவேதான் வருகிறாள் என்று நினைத்துக் கொண்டிருப்பீர்கள்; ஆனால் திரும்பிப் பார்த் தால் வெய்யிலில் வெண்ணெயாய் உருகிப் போயிருப்பாள்; மழையில் மண்ணாய்க் கரைந்து போயிருப்பாள் அவள் உடல் நிலையை நான் சொல்லவில்லை; என் பெண்ணுக்கு மனசு எவ்வளவு உறுதி என்று சொல்ல வருகிறேன். நான் என்னவோ ஸார், அவளைச் செல்லமாய் வளர்க்கவில்லை. ஐந்து பெண்களைப் பெற்றுவிட்டு யாருக்குச் செல்லம் கொடுக்க எனக்குக் கட்டுப்படி யாகும்? ஏதோ மண்ணையும் புல்லையும் போட்டு வளர்த்தேன். அதையும் போட்டு ஏன் வளர்த்தாய் என்று தான் எல்லாரையும் வளர்த்திருக்கிறேன் என்றாலும் இவள் மாத்திரம் அப்படியிருக்கிறாள்; நான் என்ன பண்ணுவேன்! நான் என் பெண்ணுக்குச் சிபாரி

சுக்கு வருகிறேன் என்று நினைக்க வேண்டாம்; உங்களை உஷார்ப்படுத்துகிறேன்; அவ்வளவுதான்!''

''அப்போ எனக்கு அப்பாமேல் எவ்வளவு கோவம், கோவமா வந்தது தெரியுமா? என்னதான் தாலி கட்டி என்னை உங்கள் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போகிறீர்கள் என்றாலும். நீங்களும் நாங்களும் இனிமேல்தானே பழகிப் புரிந்துகொள்ளணும்! என்னைப்பற்றி இப்படி மனசில் புகுத்தினால் நீங்கள் என்ன நினைப்பீர்கள்? என்னவோ கரைஞ்சு கரைஞ்சு போயிடுவேனாம், இவாதான் வழிச்சு வழிச்சு குண்டானில் ஏந்தின மாதிரி!

''ஆனால் அப்பாவே அப்படித்தான். யாரிடம் எந்த மட்டும் என்ற எல்லையே கிடையாது. தான் ஏதாவது வேடிக்கையாய்ப் பேசி, எதிராளி சிரிச்சுட்டால் போதும், தலை காலே தெரியாது.

''ஆனால் அப்பாவுக்கு நிஜமாகவே இப்போ அப்பாடான்னு இருந்திருக்கும். வெய்யிலோ மழையோ அஞ்சில் ஒண்ணு குறைஞ்சால், அந்த மட்டுக்கும் சுமை சுளுவுதானே? அதுவும் தன் நிலையில், பிள்ளையார் பிடிக்க மஞ்சளுக்குக் கூடச் செலவு வைக்காமல் மாப்பிள்ளை கிடைத்தது கொள்ளை அதிர்ஷ்டமில்லையா?

''என் வாயை நீங்கள் பொத்தினாலும் என் உதடுகள் பிடிவாதமாய் உங்கள் விரலடியில் அசையத்தான் அசையும். சொல்லத்தான் சொல்வேன். ஆனால் நான் அசடுதான். என் பொன் அதிருஷ்டம் என்னெதிரில் இமயமாய் நிற்கையில், அப்பாவின் ராசியைப்பற்றி நான் ஏன் பேசிக்கொண்டிருக்கிறேன்? என்னைப் பெற்றவர் என்று தவிர, இனி அப்பாவைப் பற்றி எனக்கென்ன? திடீர் திடீரென நன்றி அலைமோதி நெஞ்சுவரை எழுகையில் எப்படித் தெரிவிப்பதென்றே தெரியவில்லை.''

சொல்லிக்கொண்டிருக்கையிலேயே நெஞ்சையடைத்தது. கண்கள் கலங்கின. அவர் கைகளையிழுத்து அவை

களின் கிண்ணத்தில் என் முகத்தைப் புதைத்துக்கொண்டேன்.

அவர் கைகள் விடுவித்துக்கொள்ள முயன்றன. அவர் முகத்தில் புன்னகை மறைந்தது. என் உணர்ச்சிப்பெருக்கோ, நான் சொன்னதில் எதுவோ அவருக்குப் பிடிக்கவில்லை.

''என் மேல் கோபமா? தப்பு ஏதேனும் பண்ணிவிட்டேனா? அப்படியே என்மேல் தப்பு இருந்தாலும் முதலில் என்னை மன்னித்து விட்டதாய்ச் சொல்லுங்கள். பிறகு என் தப்பு என்னவென்று சொல்லுங்கள். எது? இந்தப் பூவா? இதன் முள்ளா?''

சிரிப்பு மறுபடியும் உதட்டோரங்களில் தோன்றி ஒளி வீசிற்று.

''அப்படியானால் தப்பு என்மேல் ஒண்ணுமில்லையா? உங்கள் சிரிப்பு கலங்கரைவிளக்குப்போல், சுழற்சியில் மறைந்த சமயம் கண்டு நான் மிரண்டதுதானா? நீங்கள் சிரித்தால் என்னுள் வெளிச்சம் எப்படி வீசறது, தெரியுமா? அதன் நிறம் முதல் கொண்டு எனக்குத் தெரியும்! ஒரு தினுசான ஊதா கலந்த நீலம்! என்ன, சிரிப்புப் பரவுகிறது! என்ன இந்தப் பெண் இப்படி அக்கேபிக்கேன்னு இருக்கு என்றா?

''அட, இருந்துட்டுப் போறேன். உங்களிடம்தானே! என்று வைத்துக்கொள்ளுங்கள்; உண்மையின் நிஜ உருவமே 'அக்கேபிக்கே' தான். உண்மையைத் திரட்டி உருட்டி உருண்டையாய் ஏந்தி, ''இந்தா! இதுதான் உண்மை என்று கையில் கொடுத்துவிட முடியாது. அப்படியே வழங்கினாலும், அந்த உண்மை உண்மையான உண்மையல்ல. உண்மை வெண்மையாய் இருக்கலாம்; ஆனால் உருட்டின அந்த உருவில் அது அசல் இல்லை. இந்த 'அக்கேபிக்கே' நிலையில்தான் அது உண்மை.

''உங்களுக்குக் கேலியாயிருக்கும்; இதெல்லாம் 'உனக்கு எப்படித் தெரியும்' என்று என்னைக் கேட்டால் எனக்குத்

தெரியாது. தெரிந்தால் நான் கெட்டிக்காரியாகி விடு வேன்! நான் கெட்டிக்காரியான பிறகு, உண்மையாயிருக்க முடியாது. தோன்றியதைத் தோன்றினபடி, தோன்றின உடனே எங்களிடம் மாற்றி, பொருளும் அதன் எடையுமாய், நீங்கள் நிறுத்திக்கொள்ள, என்னையும் உங்களிடம் ஒப்ப டைத்துக் கொள்வதில்தான் என் உண்மை இருக்கிறது. என்ன, மூக்கில் விரலை வைக்கிறேள்? இது லெக்சர் இல்லை. வெள்ளம் வருகிறது. மதகின் கதவுகள் திறந்து விட்டன. அவ்வளவுதான்.

''என் அக்கேபிக்கேயை முழுக்கத் தெரிந்துகொண்டு விடுங்கள். இந்தப் பூ எங்கிருந்து வந்தது தெரியுமா? நமக்குக் கலியாணம் ஆகி, ஊருக்குக் கிளம்பிய மூட்டை யோடு இதன் செடியையும் சேர்த்துக் கட்டினேன். எனக்கே பூமேல் கொஞ்சம் அசடு உண்டு. இதன்மேல் 'பித்துக்' கூட.

''இங்கு வந்ததும், நள்ளிரவில் எழுந்து— இருட்டுக்கு எனக்குப் பயம் கிடையாது— இதை நடுவது தெரியக் கூடாதாம். அது முளைப்பதில் அவ்வளவு மானியாம்— அப்படி ஒரு தோட்டக்காரக் கிழவன், எங்கள் ஊரிலே எனக்குச் சொன்னான்— தோட்டத்தில் மதிலோரத்தில்— உங்கள் தோட்டத்தில் உங்களுக்குத் தெரியாத இடம் உண்டா, இருக்கலாமா? இருந்தும் உங்களுக்கு மறை வான இடம் என்று நான் நினைத்துக் கொண்ட இடத்தில் நட்டேன்.

''காத்திருந்தேன்.

''குபீர்' என்ற இதன் மணத்தில்தான் தட்டி எழுப்பி னாற்போல் எனக்கு விழிப்பு வந்தது. கூடவே சேவலும் கூவிற்று. எழுந்துபோய்—இருட்டுக்கு எனக்குப் பயம் கிடை யாது—பறித்து வந்து உங்கள் அருகே தலையணைமேல் வைத்தேன். இம்முதல் பூவாலன்றி வேறெவ்விதம் என் நன்றியைத் தெரிவிப்பேன்? இன்று தீபாவளி பார்த்துப்

பூத்திருப்பதே எனக்குத் தனி அர்த்தமாய் விளங்குகிறது. ஆனால், உங்களுக்குச் சொல்லவில்லை.

"ஏன் முகம் மறுபடியும் மாறிவிட்டது? கண்கள் ஏன் விசனமாகிவிட்டன! உங்களுக்குக் கண்கள் நிஜமாகவே நல்ல அழகு. பெரிதாய், ஏரிகள்போல்! நாள் முழுவதும் உங்கள் கண்களையே பார்த்துக் கொண்டிருந்தால் எனக்கு அலுக்கவே அலுக்காது. உங்கள் கண்கள்தான் என் கண்ணாடி. மறுபடியும் உங்களுக்குப் பிடிக்காதது என்ன பேசிவிட்டேன்? சொல்லுங்கோளேன்! ஆனால், சொல்லு முன் என்னை மன்னித்துவிட்டேன் என்று முதலில் சொல்லி, என் தப்பு என்னவென்று பிறகு சொல்லுங்கள். உங்கள் கண்களின் வருத்தத்தை சகித்துக்கொள்ளும் மனஸு எனக்கில்லை. இந்தச் சமயத்தில் அப்பா சொன்னது வாஸ்தவமாய் இருந்தாலும் இருந்துவிடட்டும்.

"சொல்ல மாட்டேள்?"

"அப்பா!"

"நான்தானப்பா! நமஸ்காரம் பண்ணுகிறேன். இதானே கிழக்கு? பாரு, நான் எவ்வளவு அசடு! நாம்தான் மாறிட்டோம்னா திசைகூட மாறிடுமா? வீடு இதுதானே? வீடு மாறினால்தானே திசைமாறும்! ஆனால் நான் திசை திரும்பி விட்டேன் அப்பா!

"என்னப்பா பேந்தப் பேந்த முழிக்கறேள்? உன்னை மன்னிப்புக் கேட்கிறேன், அப்பா! இதுக்குமேல் பதவிசாய் எனக்கு வராது காலைப் பிடித்துக்கொண்டு கதற வில்லையே என்கிறாயா? நீ என்னை அப்படி வளர்க்க வில்லை. அதனால் அதற்கும் காரணம் நீதான்."

'என்ன விமலா, மூச்சேவிடாமல் நீயே பேசிக்கொண்டே போனால்... எனக்கும் நடுவில் ஒரு வார்த்தைக்காவது இடம் வேண்டாமா? என்ன சார். எப்படியிருக்கிறீர்கள். செளக்யமா? Hearty Congratulations—'

''மாமனாரும் மாப்பிள்ளையும் அப்புறம் வேணது பேசிக்கொள்ளுங்கள், சேர்ந்து கொல்லையில் நெட் கட்டி டென்னிஸ் ஆடற போதும், ஊஞ்சலில் உட்கார்ந்து ஒரே செல்லத்திலிருந்து வெற்றிலை போட்டுக் கொள்ளும் போதும். நான் பேச வேண்டியதைப் பேசித் தீர்த்துவிட்டால்தான் எனக்கும் பாரம் தீரும்.''

'விமலா—'

''இது விஷயம் அப்பாவுக்கும் பெண்ணுக்குமிடையில்; நீங்கள் ஏன் தலையிடறேள்? உங்களுக்குப் பிடிக்காட்டா, மாடிக்குப் போங்கள். நம் அறையில் ஒரு சாமான்கூட நிலைகலையாமல், அப்படியே இருக்கும். அப்பா சுபாவம் எனக்குத் தெரியும்.''

''விமலா— இலங்கைக்குக் கிளம்பும் முன்னால் என்ன ஒப்பந்தம் பண்ணிக்கொண்டோம்? தீபாவளிக்குச் சந்தோஷமாயிருக்க வருகிறோம். இங்கே வந்து சண்டை இண்டைபோட்டு உன் தொண்டையைக் காட்டக்கூடாது.''

''நான் ஒண்ணும் சண்டை போடவில்லை. இப்படிச் சொல்லித்தான் ஏதாவது சண்டை மூட்ட நீங்கள் அடிப்பாரம் போகிறீர்கள்—''

'Oh my God! Alright; have your own way—பிடிவாதக்காரி! வழக்கப் பிரகாரம் எப்போது ஓய்வையோ ஓய்!''

''ஆ! இப்போத்தான் நீங்கள் விமலாவைப் புரிந்து கொண்டேள்—''

''சரியாப்போச்சு! இப்போத்தான் புரிஞ்சுகொண்டேனா? இங்கு வந்துதான் புரிஞ்சுக்கணுமா?''

''சரி; நம் தர்க்கத்தை இப்போ ஆரம்பிச்சுக்கணுமா? அது வந்த விஷயத்தை விட்டுவிட்டு வேறெங்காவது கொண்டுவிட?''

'எங்கே கொண்டுவிடும்? திருச்செந்தூரிலா, திருவிடை மருதூரிலா? இல்லை, சமயவரம் காளி சந்நிதியிலா? அங்குதான் பேய் பிடித்தவர்கள் தலையை விரித்து ஆடுவது ஜாஸ்தி! ''போறேன், போறேன், என்று கத்துமாம்! ஆனால், பிடித்தபின் போவதாவது!''

''Please –''

''இல்லை; நீ சொன்னதற்குச் சொல்ல வந்தேன்— Alright, go ahead and for God's sake finish Soon!''

''என்னப்பா பேசிண்டிருந்தோம்? — இப்படித்தான் அப்பா, அங்கேயும் ஏதாவது நடுவில் பேசிக் கலைத்து—''

'அவர் ஒண்ணும் பேசவில்லை; யாரையுமே நீ பேசவிட வில்லை. நீதான் பேசிக்கொண்டே யிருக்கிறாய்—'

''never mind! இதான் எங்களுக்குப்பழக்கம். ஆ! நினைப்பு! வந்தது!...முதன் முதலாய் மஞ்சள் தடவின உன் கடிதம் வந்து விஷயம் தெரிந்தது. என்னமா கோபம் வந்தது தெரியுமா, என்ன என் இடத்தை இன்னொருத்தி பிடிச்சுக்க ஆச்சா என்று? அதனால்தான் கல்யாணத்துக்கு நான் வரவில்லை.''

''சார், என்னைத் தப்பாய் நினைக்காதேயுங்கள். உங்கள் பெண்ணே வராதபோது உங்கள் கல்யாணத்தில் எனக்கென்ன ஜோலி?''

''—அப்புறம் அடுத்தடுத்து நீ எழுதியும் நான் பதில் போடவில்லை. ஆனால், எப்பவுமே 'டூ'விலே இருக்க முடியுமா? நாள் ஆக ஆக, சபலம் அடித்துக்கொள்ள ஆரம் பித்துவிட்டது. மறுபடியும் ஒரு வரி வராதா, அது சாக்கில் தொத்திக்கொள்ளலாம்னு காத்திருந்தோம்—'

'விமலா, விமலா அக்கிரமக்காரி! நாக்கில் நரம்பில்லாத வளே!—'

''என்ன என்ன?''

'இருந்தோம் என்று பன்மையில் பேசி என்னை ஏன் இழுக்கிறாய்? அநியாயமாய் என்னை ஏன் உடந்தை ஆக்கு கிறாய்? இது விஷயம் அப்பாவுக்கும் பெண்ணுக்கும் இடையில் என்று விட்டு—'

''சரி போங்களேன்!......காத்துக் கொண்டிருந்தேன். ஆனால், நீ எழுதக் காணோம். வாஸ்தவந்தான்; உனக்கும் ரோசமாயிருந்திருக்கும். அப்புறம் இவர்தான் ஆசையைத் தாண்டிவிட்டார், 'என்ன விமலா, உன் அப்பாவைப் பார்க்கணும்னு உனக்கு ஆசையா யில்லையா? இந்தத் தீபாவளிக்குப் போவோமா' என்று; அவ்வளவுதான். நானே படிஞ்சு வந்துட்டேன். எங்கேப்பா காணோம்—அத்தான் சித்தி? புதுசா உறவு சொல்லி அழைக்கிறதுகூட என்னவோ மாதிரி வெட்கமாயிருக்கப்பா!'

'அட, வெட்கம் என்று ஒன்று இருக்கிறது கூட உனக்குத் தெரியுமா?'

''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?''

'எப்படிச் சொல்கிறது? ஏன், நானே எத்தனை தடவை, அடியே பெண்கள் தலை கவிழ்ந்து நிற்பதில் ஒரு அழகு உண்டு. குரலைத் தாழ்த்திப் பேசுவதில் ஒரு குளுமை உண்டு—' என்று கெஞ்சியிருக்கிறேன்!'

''மோவாய்க் கட்டையைப் பிடித்துக்கொண்டு!'' அதை ஏன் விட்டுட்டேள்?'

''நான் சொல்லித்தான் தெரியணுமா? உன் மோவா வில் குழி விழுந்திருப்பதே அதனால்தானே!'

''எறும்பூரக் கல் தேயும் என்கிற மாதிரி—''

''அதற்கு நீ கூட ஒரு சமயம், 'நீங்களே உங்கள் அம்மா பிள்ளையா, நீங்கள் சொல்றபடியே இருந்து

கொள்ளுங்கள், நான் என் அப்பா பெண்'என்று சவாலடித்து விட்டுக் கழுத்தைச் சுளுக்கிக்கொண்டு போனயே, ஞாபகம் இருக்கிறதா!'

''எல்லாம் இருக்கிறது! நம் பேச்சை ஒட்டுக் கேட்டுக் கொண்டு உங்கள் அம்மா ''அடே கோதண்டம், புளிய மரத்தில் தொங்கு, என்று தீர்ப்புச் சொன்னாரே, அதுவும் ஞாபகமிருக்கிறது! ஒரு அகமுடையான் பெண்டாட்டி அந்தரங்கம் என்று உங்கள் வீட்டில் உண்டா? மூச்சு விட்டதற்கெல்லாம் கோர்ட்டு, விசாரணை, சாட்சி சம்மன்!—வீட்டுக்கு நாட்டுப் பெண் என்று எனக்கு மரியாதை வேண்டாம்? இழிவேயிருக்கட்டும்; ஆனால் வீட்டுக்கு மூத்த பிள்ளையின் பெண்டாட்டி என்று உங்களைச் சாக்கிட்டு எனக்குச் சேர வேண்டிய மதிப்பு-அதுகூட எனக்குக் கிடையாது! ஏன், வந்த இடத்தில் சும்மாயிருக்க முடியவில்லையா? இங்கே வந்து கூட நாம் திரும்ப முருங்கை மரத்தில் ஏறிக்கொள்ளணுமா?''

''மறுபடியும் இந்த 'நாம்' என்கிற பிரயோகம் சரியாயில்லை.'

''நாம் இல்லை; நீங்களே தான் என்னைப் பேய் என்று விட்டதால், நீங்கள் சாதுவாகி விடுவீர்களா? சந்தோஷமாயிருக்க வந்த இடத்தில் என்னை அவமானப்படுத்தி, நாளும் கிழமையுமாய் என்னைக் கண்ணீரில் காணுவதில் உமக்கென்ன லாபம், என்ன லாபம்னு கேட்கிறேன்! ஊ...ஊ... கொண்டவனே தூற்றினால், கூரை தூற்றக் கேட்பானேன் ஏ...ஏ...ஏ...''

'சில பேருக்கு அழுவதில்தான் சந்தோஷம்; சண்டை போடுவதில்தான் சமாதானம். பிறத்தியாரை அடித்துவிடுவார்கள். அடிபட்டவன் வலிக்கிறதே என்று விசிக்கு முன்னர், அடித்த கை சுளுக்கிக்கொண்டதென்று தாம் உருண்டு உருண்டு அழுவார்கள். உலகமும் அவர்கள் பக்கம் தான் பேசும். சில பேர் பிறந்த வீட்டுக்கு வந்ததுமே

கொண்டவனையே, 'கருடா சுகமா' என்று கேட்பார்கள். சில பேர்— சில பேருக்குச் 'சில பேர், பல பேர், பொது' என்று சொல்லிக்கொண்டு ஒருத்தரையே குறிப்பதுதான் வழக்கம்.

''ரொம்ப Correct! உலகத்தில் பொது என்று இல்லா விட்டால்; அவரவர் காய்ச்சல் எரிச்சல்களைத் தீர்த்துக் கொள்வதோ, நாலு பேர் கண்படக் காற்றாடுவதோ எப்படி? ஆகையால் எல்லாமே ஒன்றைக் குறிப்பதுதான்.''

''சிலர்?''

'சிலர் என்றாலும் அதேதான்.'

''பலர்?''

'பலர் என்றாலும் அதேதான்.

''அப்போ ஒன்று?''

'ஒன்று என்றால் ஒன்றேதான். அன்று இன்று, என்றுமே ஒன்று.'

''எது?''

'அது இது எது எல்லாம்—'

''இதென்ன திடீர்னு பாஷையே மாறி, கழிச்சு, விஷயமே சூழ்ச்சியாப் போச்சு! மயிர் சிலிர்க்கிறது; என்னது இது எது அது?''

'திரும்பிப் பார்—'

''யார்? ஓ, இதான் சித்தியா? சித்தி, நில் அப்படியே, திசைமாறாமல், நமஸ்காரம் பண்ணுகிறேன். தடுக்காதே, நான் உனக்குப் பெண்; என்னைப் பெற்றவளை எனக்கு ஞாபகமில்லை. என் சித்தியையாவது பார்க்கிறேன். எங்கே, கொஞ்சம் வெளிச்சத்தில் திரும்பு—உன் பேர் என்ன? என் பேர் விமலா...நீ பலே கைக்காரப் பேர்வழி, அப்பா! ஓசைப் படாமல் ஊமை மாதிரியிருந்து கொண்டு, 'லக்கி பிரைஸ்'

தான் அடித்திருக்கிறாய்! சித்தி, ஏன் தலைகவிழறாய்? எனக்குச் சொல்லித்தா என்று என் ஆத்துக்காரர் சொல்லு வார். இவர்தான் என் கண—எங்கேப்பா மாப்பிள்ளை அந்தர்த்தியானம்? பல்தேய்க்கப் போய்விட்டாரா? இந்த வேளைக்கு வீட்டில் காப்பி மூணாவது 'டோஸ்' ஆகி யிருக்கும். அவர் என்ன பண்ணுவார்? சித்தி, உன்னைவிட நான் பெரியவளாயிருப்பேன் என்றுதான் தோண றது. ஆனால், உன்னை சித்தி என்றுதான் அழைக்கப் போறேன். இஷ்டமானால் ஏற்றுக்கொள். இல்லா விட்டாலும், ஏற்றுக்கொள். எனக்கே இப்பத்தான் கொஞ்சம் புரிகிறது, எல்லாமே கொண்டாடினால்தான் உண்டு என்று. கொண்டாடா விட்டால் விட்டுப் போய் விடுமோ என்கிற பயம்கூட வந்துவிட்டது. அப்பா, மாப் பிள்ளை சொல்வார், 'விமலா உனக்குப் பயம் தெரிந்தால் தான் உனக்கு விமோசனம், உனக்கு முன்னால் எனக்கு விமோசனம்' என்று. அந்த அர்த்தம் இப்பத்தான் மூடு சூளையாகப் புரிகிற மாதிரியிருக்கிறது. அப்பா, எனக்கு உள்ளூறக் கவலையாயிருந்தது, முன்கூட்டித் தெரிவிக் காமலே வருகிறோமே, நீ எங்கே தலை தீபாவளிக்கு உன் மாமனார் வீட்டுக்குப் போயிருப்பாயோ என்று. சாவியை எதிர்வீட்டில் வாங்கிக் கொள்ளலாம் என்றாலும், நீ இல்லாமல் எனக்கு இங்கே என்னப்பா? எனக்கு அம்மா, அப்பா இரண்டுமே நீதானே! தூர வரும்போதே, சிங்கத்தின் பிடரிபோல், உன்தலையை ஜன்னலில் ப்ரேம் (Frame) போட்டாற்போல் கண்டப்போதான் வயிற்றில் பயணத்தின் ஜில்வு விட்டது. அந்த நன்றியிலேயே அப்பா எனக்குக் கண்ணில் தண் தளும்பி விட்டது.

"அப்பா, இப்போத்தான் கிட்டப் பார்க்கிறேன். நீ தான் நிஜமா மாப்பிள்ளை மாதிரியிருக்கிறாய். முகத்தில் களை கட்டியிருக்கிறது. நான் முன் பார்த்ததுக்கிப்போ பத்து வருடம் உதிர்ந்திருக்கிறது. கண் ஜ்வலிக்கிறது. என்னிக்குமே உனக்கு நிமிர்ந்த முதுகானாலும் இப்போ

உடம்பில் புது முறுக்கேறி யிருக்கிறது. தலையில் ஒரு நரை கூட இல்லாமல், ஸாட்டின் மாதிரி, கறுகறுன்னு பளபளன்னு—இதென்ன, உன் 'சூ' மாயமா, சித்தி?

''அப்பா, மாப்பிள்ளையைப் பார்த்தயோன்னோ, எப்படி உடம்பு சரிஞ்சு போயிருக்கார்னு? நானும் உட்கார்ந்த பந்தலாய் ஆகி வறேன். எனக்கே தெரிகிறது.

''அப்பா. மாப்பிள்ளைக்கு மண்டை தெரிய ஆரம்பித்து விட்டது. எனக்கும் தலையில் சீப்பு வைக்கவே கிலியாயிருக்கிறது. கொத்துக் கொத்தாய்ப் பிடுங்கிக் கொள்கிறது. நாங்களிருவரும் ஒரொரு சமயம் கண்ணாடிக் கெதிரில் நின்று கொண்டு ஒருத்தரை யொருத்தர் தேற்றிக் கொள்கிற கண்ணறாவி எனக்கே சிரிப்பு வருகிறது; பிறத்தியாருக்குக் கேட்பானேன்!''

''போனால் போகிறது விமலா. இனிமேல் யாரைப் பண்ணிக்கொள்ளப் போறேன்?'' என்பார்.

''ஆண்களைப் பற்றி அவ்வளவு தீர்மானமாய்ச் சொல்லிவிட முடியாது. இருபது வருஷம் சும்மாயிருந்து விட்டு, என்னைக் கட்டிக்கொடுத்த பின், என் அப்பாவுக்கு இப்போ தோணல்லியா—நான்தான் விட்டுச் சொல்றேனே, வயிற்றிலே பல்லோடுதான் பேசினேன்—இருந்தாலும் ஆண் பிள்ளை சிங்கத்துக்கு அழகு எதுக்கு?'' என்பேன்.

''சிங்கமாவது, புலியாவது?'' என்று கேட்டுக் கொண்டே மாமியார், கதவு மூலையிலிருந்து அல்லது வாசற்படியில், அல்லது மாடி வளைவில், அல்லது பால் கனியில் தோன்றுவார். 'மயிர்போனதால் உயிர் பிரியும் கவரிமான்கள் ரெண்டு கண்டேளோ? கீ...கீ...கீ...' ஸ்லேட்டில் ஆணியால் கிறுக்கினால் போல் 'க்றீச்'சென்று சிரிப்பார்.

''இது மாதிரிதான் அப்பா எல்லாமே. பார்க்கப் போனால் சின்ன விஷயம் தானே என்று அங்கீகரிக்க முடிவ

தில்லை. அதுகள்தான் தொண்டையில் முள் மாட்டிக் கொண்டாற்போல், சிறுகச் சிறுக ஆளை அரிச்சுத் தின்னு— என்னப்பா கையிலே கட்டு? விரலை எங்கே வெட்டிண்டே, எப்படி நசுக்கிண்டே? என்ன ஊமைச் சிரிப்புச் சிரிக்கிறே? கையை மறைக்கப் பார்க்கிறே? நான் பார்க்கக் கூடாதா? அதென்ன, அவ்வளவு பரம ரகஸ்யமா? சரி; காட்டாட்டாப் போயேன் எப்படியும் நான் என்ன பண்ணப் போறேன்? உன்பாடு, சித்திபாடு!''

''என்ன சித்தி, உனக்குப் பிரமிப்பாயிருக்கிறதா, 'இதென்ன முடுக்கிவிட்டாற்போல் பேசிக்கொண்டேயிருக்காளே, சாவி ஓயாதா' என்று? நான் உனக்குத்தான் புதிசு. நானே இப்படித்தான். நான் விமலா. மாமியார்கூட எரிஞ்சு விழுவார்: 'இதென்ன சள சளா வளாவளான்னு, கடலைக் காய்ப் பானையுள் கையை விட்டாப் போல்' என்று. என்னைத் திருத்த எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தாச்சு இன்னும் முயற்சி நடந்துகொண்டுதானிருக்கிறது. நடக்கிறதெல்லாம் நடக்கட்டும்; நான் dont care master' நான் விமலா; ஆனால், இப்போ எனக்கே மூச்சு இரைக்க ஆரம்பித்துவிட்டது. சித்தி, ஒரு முழுங்கு காப்பி கொடுக்கிறாயா? அப்புறமாப் பல் தேய்க்கறேன்.''

'விமலா!'

''.........''

'ஏ விமல், தூங்கீட்டியா?

''இல்லை, யோசனை பண்ணிக் கொண்டிருக்கிறேன்''

'என்ன யோசனை?'

''எவ்வளவோ!''

'இஷ்டமில்லாவிடில் சொல்ல வேண்டாம்.'

''நான் சொல்லாமல் நீங்கள் தெரிந்து கொண்டு விட முடியுமா?''

'தர்க்கம் பண்ணாமலே நமக்குப் பேச வராதா?'

''இல்லை, அவள் முகத்தில் எப்படிப் பால் வடியறது பார்த்தேளா? பார்க்கப்போனால் எங்கள் இருவருக்கும் ஒரே வயதுதான்.''

'இதென்ன, அஸிகையா?'

''அஸிகை தானோ, அல்லது ஏக்கமோ? எப்படி வேணு மானாலும் சொல்லுங்கள். போன வயது இனிமேல வரப் போறதா?''

'நீ என்ன நூற்றுக் கிழவியாகிவிட்ட மாதிரியல்லவா பேசுகிறாய்? அல்லது என்னை ரேழியில் தூக்கிப் போட்டிருக் கிறதா?'

''அதற்கில்லை; இருந்து இருந்து அப்பா இவளை ஏன் பண்ணிக்கணும்? பண்ணிக்கொள்ள வேண்டும் என்று தீர் மானித்தபின் இதைவிட அவருக்கு நெருக்கமான வயதில் பெண் அகப்படாத நாளா இது?''

'விமலா, முகத்தில் பால் வடிவதால், குழந்தையென்று அர்த்தமில்லை. பெண்கள் ஆண்களைவிடச் சுருக்கவே விவகார முதிர்ச்சி அடைந்துவிடுகிறார்கள்.'

''இல்லை, அப்பாவுக்கு இத்தனை நாட்களுக்குப் பிறகு பால்யம் திரும்பினதைச் சொல்வதா?''

'விமலா, நியாயமாயிரு, தீர்ப்பளிக்க நீ யார், நான் யார்? முதலில் உன் தகப்பனார் கிழம் இல்லை. அடுத்ததாக ஒரு பெண்ணை வீட்டுக்குக் கூட்டி வந்தால் பால்யம் திரும் பினதால் மாத்திரமல்ல. குடித்தனக்காரர் பெண், 'மாமா, மணி என்ன ஆச்சு?' என்று கேட்டால், 'உங்களோடு அவ ளுக்கு என்ன பேச்சு, அந்த மணியை என்னைக் கேட்டுத் தெரிஞ்சுக்கக்கூடாதோ?' என்று என்னோடு சண்டைக்கு வருகிறாயே, எல்லாவற்றையுமே அந்தக் கண்ணுடன் பார்ப்பதில் அர்த்தமில்லை. நீயே எண்ணிப்பார். இருபது வருஷமாய் உனக்கு, தானே தாயும் தந்தையுமாய் தொட்டி

லிருந்து அடைகாத்து, பந்தலில் கையைப் பிடித்துக் கொடுத்து விட்டு, இவ்வளவு பெரிய வீட்டில் உன் இடம் வெறிச்சான அவர் நிலை எப்படியிருக்கும்! யாருக்கும் துணை வேண்டியிருக்கிறது. புருஷனும் மனைவியுமோ, அப்பனும் மகளுமோ, தாயும் மகனுமோ, ஆணும் பெண்ணுமோ—இது ஆண்டவன் நியதி.''

''எது?''

**'உன்னை விட்டால் எனக்கில்லை**
**என்னை விட்டால் உனக்கில்லை!'**

விமலா கையைக் கொடு; கண்ணீரையும் சிரிப்பையும் தாண்டி, கண்ணை உள்ளுக்குத் திறந்து பார். ஒரு சமயம் இல்லாவிட்டால் ஒரு சமயம் உனக்கே தெரியும்.

**'என்னை விட்டால் உனக்கில்லை**
**உன்னை விட்டால் எனக்கில்லை**

ஏன் மூச்சு தேம்புகிறது?'

''நீங்கள் இது மாதிரி பேசுகையில் இன்று முழுக்க கேட்டுக் கொண்டிருக்கலாம் போலிருக்கிறது. இன்ன தென்று முழுக்கப் புரியாவிட்டாலும் இன்பமும், துன்பமு மாய் மனம் ஊசலாடுகிறது. கற்கண்டுச் சிலும்பல் ஆனாலும் குத்தாமல் இல்லையே! மனம் அலை அடங்குவதுபோல் இருக்கிறது, உடனே தத்தளிக்கிறது. நிம்மதியில்லை.''

'நிம்மதி இல்லாவிட்டால் நிம்மதி அடைய வேண்டும். சமாதானம் கிட்டாவிட்டால் வலுக்கட்டாயமாய்ப் பண் ணிக்கொள்.

**நீ என் சண்டையானால், நான் உன் சமாதானம்**
**நான் உன் கோபமானால், நீ என் சாந்தம்**
**நான் உன் வருத்தமானால், நீ என் சந்தோஷம்**

இந்த முயற்சி தான், வாழ்க்கையின் எல்லாமே!''

''வார்த்தைகளை எப்படிக் கொட்டறேள்! புல்லரிக் கிறது. உங்கள் நாக்கில் வாக்குப் பேசறது.''

''விமலா!''

''.........''

''விமலா!''

''ஊம்...கூப்பிட்டேளா?''

''நாம் நாளைக்கு மத்தியான வண்டிக்குக் கிளம்பி விடணும்'

''என்ன?''

'.........'

''இதுதான் உங்கள் தீபாவளி வெடியா? கையை விடுங்கோ—''

'மாட்டேன்.'

''விடுங்கோன்னா விடுங்கோ—''

'விமலா நான் சொல்வதைக் கேள்...'

''எல்லாம் கேட்டாச்சு. உங்கள் சுண்டுவிரலில் பாகாய்ச் சுற்றி, நீங்கள் இழுக்கும் வழியெல்லாம் நான் இழுபடத் தானா இந்த வாய் ஜாலக் எல்லாம்?''

'விமலா, விடிந்தால் ஸ்நானம் பண்ணி மருந்தை விழுங்கின பிறகு அடுத்த வருஷம்தானே தீபாவளி!'

''என் கோபத்தை அனாவசியமாய்க் கிளப்பாதேயுங்கள். தீபாவளியை எப்போதிலிருந்து தங்க நிறையாய் நிறுத்தாறது?''

'விமலா, நாமே இங்கு வந்திருக்கக் கூடாது.'

''ஏன், யார் உங்களை இங்கே என்ன மரியாதைக் குறைவாய் நடத்தினா? ஆமா, எனக்கும் இப்போத்தான் தோணறது; வந்ததிலிருந்தே நீங்கள் ஒரு தினுசாய்த் தான் இருக்கிறீர்கள். கூப்பிட்டால் காது கேட்கவில்லை. ஊமையடி பட்டாற்போல் தலையைத் தூக்கி முழித்து முழித்துப் பார்க்கிறீர்கள். நீங்கள் ஏன் ஸொரத்தாயில்லை? திகைப் பூண்டு மிதித்து விட்டீர்களா? உடம்பு சரியாயில்லையா?''

'விமலா, நாம் ஊருக்குப் போகணும்.'

''என்னைச் சீண்டாமல் இருங்களேன். அழுகைகூட வருகிறது. வருஷம் கழித்துத் தொலை தூரத்திலிருந்து வந்திருக்கிறோம்; ஒரு வாரமாவது...''

'விமலா! விமலா! நாம் போயிடலாம்—'

''நீங்கள் வேணுமானால் போங்கள்; நான் இருந்து பின்னால் வருகிறேன்.''

'இல்லை; நீ இப்போது என்னருகில் இல்லாமல் நான் இருக்க முடியாது'

''கொஞ்சம் மட்டுக் கட்டிக் கொள்ளுங்கள்! நாளைக்குக் கொஞ்சம் வேண்டாமா?''

'இது பிரியம் இல்லை; இது அவசியம். பிராணனின் மூச்சு மாதிரி.'

''என்னவோ பேசறேளே? பயமாயிருக்கே! ஒண்ணுமே புரியல்லியே? திடீர்னு என்ன நேர்ந்துவிட்டது?''

'ஏதோ மறந்து போனது, மறந்து போனதாக நான் நினைத்துக் கொண்டது நினைப்பு வந்துவிட்டது.'

''என்னது? ஆபிஸில் தப்புத்தண்டா பண்ணிவிட்டேளா?''

'முக்கியமாய், ரகஸ்யமாய், பொறுப்பாய்ப் பூட்டி வைக்கவேண்டிய பேப்பர் ஒன்று வெளியில் இருக்கிறதோ என்று பயம் வந்துவிட்டது,'

''பொய் சொல்கிறீர்கள்!''

'ஆமாம்; பொய் சொல்கிறேன்.'

''இதென்ன! அடிவயிற்றில் புளியைக் கரைக்கிற விளையாட்டு! நிஜத்தைச் சொல்லுங்கோளேன்!''

'நிஜம் சொல்கிறேன்.'

''எது நிஜம்;''

'நாளைக்குப் போயாகணும். நீ என்னோடேயே வந்தாகணும், என்னோடேயே இருக்கணும்.'

''ஈசுவரா!''

'விமலா'

**என்னை விட்டால் உனக்கில்லை**
**உன்னை விட்டால் எனக்கில்லை!**

* * *

''ஹ்ஹ ஹஹ—உங்களைத் திடீர்னு பின்னால் பார்த்ததும் எனக்குத் திக்கெனத் தூக்கிவாரிப் போட்டது. உட்காருங்கள். மார் படபடக்கிறது. ரெண்டு நிமிஷம். அம்மாடி! நானே இங்கில்லை. என்னென்னவோ பழசு எல்லாம் யோசனை, வீட்டு நினைப்பு வந்துவிட்டதோ என்கிறீர்களா? அப்படி ஒன்றும் இல்லை. வீட்டில் என்ன இருக்கிறது? நான் என்ன, பச்சைக் குழந்தையா? அம்மா மடியில் படுத்துக் கொண்டு பால் குடிக்கணுமா? இல்லை. நினைத்துக் கொண்டால் போய் வரும் தூரமா? உங்கள் அருகில் இருப்பதைவிட அங்கு ஒன்றும் எனக்குக் காத்துக்கொண்டு இல்லை. இன்னும் நாம் புதுத் தம்பதிகள் தானே!

''அதுவே இல்லை; என்னவோ யோசனை. யோசனை என்றுகூட இல்லை; சில சமயம் மனம் நிரம்பியிருக்கையில் யாரோடும் பேசணும் என்றுகூட இல்லாமல் மௌனமா உட்கார்ந்துண்டே யிருக்கலாம் போல் இருக்கே, அது அப்பவும் மனம் சும்மா யிருக்கிறதோ? ஏதாவது நினைப்பில் ஓடிக் கொண்டே யிருக்கிறது; அது மாதிரி.

''விமலா வந்து ஒருநாள் முழுக்க இல்லை; போய்விட்டாள். 'கலகல'வென்று அவள் இருந்துவிட்டுப் போனதிலிருந்து வீடு கொஞ்சம் வெறிச்சுனு தானிருக்கிறது. ஆனால், அதனால் என்னுடைய சந்தோஷம், சொந்த மனோலயம் தப்பிப் போய் விட்டதென்று நான் சொல்ல முடியுமா?

தீபாவளிப் புடவை மடியில் பார்த்ததைவிட உடுத்திக் கொண்ட பின்னர்தான் எனக்கு எவ்வளவு பாந்தமாயிருக் கிறதென்று தெரிகிறது. இந்தப் பாந்தம், வெறும் என் தோலின் சிவப்போடும் சதைமேல் துணி படும் அனுபவத் தோடும் மாத்திரம் இல்லை; மனசுள் புகுந்து அதன் ஆழத் தோடு இழையும் சக்தி அதற்கு இருக்கிறது என்றால் நீங்கள் நம்புவீர்களோ? புடவையின் தரத்தைச் சொல்லவரவில்லை! அதை இழுத்துப் பிடித்துப் பார்த்துக் கண்டுகொண்ட இழை நயத்தைச் சொல்லவில்லை; தலைப்பு ஜரிகையைச் சொல்லவில்லை; அதன் நிறம்—என் ஹ்ருதயத்தில் அதன் ஆஹாய நீலம் இன்னும் அடித்துக்கொண்டிருக்கிறது. நீங்களும் வந்தேள்.

''ஏன் புன்முறுவல் பூக்கறேள்? நான் கவியாகிவிட்டேன் என்றா? நானா பேசறேன்? அந்த ஆகாய நீலம்னா பேசறது. அவ்வளவு தனி சாமர்த்தியம் எல்லாம் எனக்கு ஏது? எனக்கு எதுக்கு? இந்தத் தோட்டத்தில், இதோ நீங்கள் கல்மேடை யில் உட்கார்ந்திருக்கிறீர்கள்; உங்கள் காலடியில் நாய்போல் நான் உட்கார்ந்திருக்கிறேன். இதைவிடப் பதவி எனக்கு வேண்டாம். இதுவே என் ஆனந்தம். நான் என்னை இழிவு படுத்திக்கொள்ளவில்லை, என் நன்றியை எப்படி உங்க ளுக்குத் தெரிவிப்பது?

''உங்கள் முகம் ஏன் சுளிக்கிறது? ஓஹோ, புஞ்சுது! நான் நன்றி என்கிற போதெல்லாம் உங்களுக்குப் பிடிக்க வில்லை. வேறென்ன சொல்லவேண்டும் என்கிறீர்கள்? பேச மாட்டேன் என்கிறீர்களே, சொன்னால்தானே தெரியும்?— ஊம் ஜாக்கிரதை; கையில் திருகிக்கொண்டிருக்கிறீர்களே; மறுபடியும் பொக்கப் போறது. இப்பவும் முள்ளோடுதான் பறித்துக்கொண்டு வந்திருக்கிறேன். இந்தப் பூதான் என் அடையாள பாஷை. முள்ளில்லாது இதைப் பறிப்பதில், இதன் பாஷைக்கு அர்த்தமில்லை.

''சரி, சரி; நீங்கள் சொல்லாமலே புரிஞ்சு போச்சு. நான் ஆசை, அன்பு, ரத்தத் துடிப்பு, வெறி என்கிற பாஷையைப்

பேசவில்லை என்றுதானே? நான் 'நன்றி நன்றி' என்பதால் வயதை ஞாபகமூட்டுகிறேன் என்கிறீர்களா? நான் ஏழை யானதால் வயது வித்தியாசத்தைப் பாராட்டாமல் உங்களுக்கு வாழ்க்கைப்பட்டு விட்டேன் என்று நினைக்கிறீர் களா? அப்படியில்லை. அப்படி இருந்தாலும்தான் என்ன? உங்களுக்கென்ன குறைச்சல்? உங்கள் வயதில் உங்கள் மாதிரி இப்போ யாரிருக்கிறார்கள்? ரிஷி மாதிரி இத்தனை நாளிருந்துவிட்டு, இப்பொழுது என் பக்கம் திரும்பி என்னை உங்கள் அகன்ற மௌனத்தில், உங்கள் கடைக்கண் பார்வையில் என்னை அணைக்கும்போதெல்லாம், எனக்கு உடல் பறக்கிறது. திரௌபதியம்மன் விழாவில் நெருப்பு மிதிக்கிற மாதிரி மனம், உடல் எல்லாமே பரவசமாகின்றன. நான் கொடுத்து வைத்தவள் என்று உங்களிடம் சொல்லக் கூடாதா? நன்றி யிருப்பதால் எனக்கு மற்றதெல்லாம் இல்லை என்று அர்த்தமா?

''ஆனால் மற்றதெல்லாம் எத்தனை நாள் இருக்கும் என்று நினைக்கிறீர்கள்? இதைப் பற்றிப் பேசுவதால் கேட்கிறேன், உடலில் திமிர் இருக்கும் வரை தானே பெண்கள்? எங்கள் வாழ்வெல்லாம் இரண்டு குழந்தைகள் பெறும்வரை. அப்புறம் நாங்கள் கிழவிகள் தானே! ஐந்து பெண்களைப் பெற்றுவிட்டு என் தாயார் எப்படியிருக்கிறாள் என்று நான் கண்கூடாய்ப் பார்க்கவில்லையா?

''ஆனால், நிலைத்து நிற்கக்கூடியது நன்றியும் விசுவாசமும்தான். இப்போதைக்கு எனக்கு ஒரு குறைவுமில்லை. ஆனால், எனக்கு இதுதான் பெரிதாய்ப்படுகிறது. நன்றி விசுவாசம்— என் வரையில் எனக்கும் உங்களுக்கு மிடையில், எனக்குத் தெரிந்து உங்களுக்குத் தெரியாதது ஒன்றும் இருக்கலாகாது. என் வரையில், உங்களிடம் நான் வெட்ட வெளி; எனக்கு அதுதான் பெரிசு.

''நாம் வெளிக் கிளம்பினால், 'எந்தக் கலர்ப் புடவையை உடுத்திக்கொள்வது? இந்தப் புடவைக்கு இந்த

ரவிக்கை சரியா?' என்பது முதற்கொண்டு— எனக்கே தெரிந் தாலும், உங்களைக் கேட்டுகொள்வதில்தான் எனக்கு சந்தோஷம்; என் வாழ்க்கையின் நிறைவு. என் சாபம், என் விமோசனம் இரண்டுமே, எல்லாமே நீங்கள் தான்! உங்களிடம் நான் ஒன்றும் ஒளிக்கமாட்டேன்.

''உங்களிடம் ஒண்ணு சொல்லப் போறேன்; சின்ன விஷயம்தான். உங்களிடம் சொல்லாமலிருந்தால், என் நெஞ்சில் பொத்துக்கொண்டேயிருக்கும். அதற்கு நான் இடம்விடப் போவதில்லை. அண்டாப் பாயஸத்தில் ஈ விழுந்த மாதிரி, நம்மிடையில் அந்த ஈயின் கால் அளவிற்குக் கூடச் சிறு ரகஸ்யம், என்னை உங்களிடமிருந்து ஏன் பிரிக்கணும்? நான் இடம்விடப் போவதில்லை—நீங்கள் இப்போ குறுக்கே பேசாதேயுங்கள். அப்புறம், அப்புறம்...

''விமலாவின் கணவரை ஏற்கெனவே நான் அறிவேன். மூணு வருஷங்களுக்கு முன்னால் ஏதோ பாலம் கட்டுவதை மேற்பார்வையிட எங்கள் ஊருக்குக் காம்ப் வந்திருந்தார். அந்தப் பட்டிக்காட்டில் ஹோட்டல் வசதி கிடையாது. யாராவது வந்தால், யாராவது இடம் கொடுத்துத்தான் ஆகணும். எங்கள் வீட்டில்தான் தங்கியிருந்தார்.

''காலையில் போனால் மறுபடியும் இரவுதான் வரு வார். மத்தியானச் சாப்பாடு, ஆள் வந்து எடுத்துக்கொண்டு போவான். இரவு சாப்பிட்டுவிட்டு, அப்பாவும் அவரும் திண்ணையில் பேசிக் கொண்டிருந்துவிட்டு, அப்படியே உடம்பை நீட்டி விடுவார்கள்.

''அப்பாவுக்குப் பேச ஆள் அகப்பட்டால் போதும்; தான் பிறந்தது, வளர்ந்தது, வாழ்க்கையில் சரிந்தது... வியாதிக்காரனானது, கிராமத்தில் தானே பள்ளிக்கூட வாத்தியார், தானே போஸ்ட்மாஸ்டர், மணியக்காரருக்கு மந்திரி, ஊர்க் கட்சி வழக்குகளுக்கு மத்யஸ்தர் எல்லாமா யிருப்பது, ஐந்து பெண்களைப் பெற்று அவஸ்தைப்படுவது—

'ஐந்து பெற்றால் அரசனும் ஆண்டி, தான் ஏற்கெனவே ஆண்டி, இன்னும்ஆண்டி ஆவது எப்படி, இனி அரசனாய்த் தான் ஆகணும்; ஒருவேளை ஆறு பெற்றால் அரசனா வேனோ, தலைக்குமேல் சாண் போனால் என்ன, முழம் போனால் என்ன?' என்கிற ரீதியில் இது மாதிரி வாய்க்கு வந்ததெல்லாம் பேச்சாய் ஏதாவது பேசிக் கொண் டிருப்பார். அத்தனைக்கத்தனை வந்திருந்த விருந்தாளி சங்கோசி. தாகத்துக்கு ஒரு டம்ளர் தீர்த்தம் கேட்பதற்குள் முகம் மூணு தடவை மாறும்.

வீட்டில் கிணற்று ஜலம் உப்பு. குடிஜலம் ஊருக்கு ஒதுக்காகயிருக்கும் பிள்ளையார் கோவிலை ஒட்டிய குளத்தி லிருந்துதான் காலையும் மாலையும் கொண்டு வரவேண்டும். அம்மாதான் ஆயிரம் வேலையோடு முக்கி முனகியபடி உசிரோடு உடம்பைக் கட்டி இழுத்துக்கொண்டு கொண்டு வருவாள். அவளுக்கு முடியாத சமயம்தான் நான் போவேன். என்னை வெளியில் அதிகமாய் அனுப்புவதில்லை. நான் மதமதவென வளர்ந்திருந்ததாலோ, ஊர் வாயில் அடிபடாமல் இருக்கவோ.

''ஒரு நாள் மாலை குடத்தைத் தூக்கிக்கொண்டு கிளம்பினேன். இந்த மாதிரி சமயங்களெல்லாம் எனக்கு அவிழ்த்துவிட்ட மாதிரியிருக்கும். வழியெல்லாம் ஒரு கல் லைப் பொறுக்கி இன்னொரு கல்லின்மேல் எறிந்துகொண்டு காலடியில் சுள்ளி இருந்தால் அது வழியிலிருந்து ஒதுங்கும் வரை, வழியெல்லாம் காலால் ஏற்றிக்கொண்டு, வேடிக்கை இல்லாவிட்டாலும் வேடிக்கை பார்த்துக்கொண்டு, —குடத் தைத் தூக்கிப் போட்டுப் பிடித்துக்கொண்டு ஏதோ ஒன்று... கையும் காலும் சும்மாயிராது.

''இவர் எதிர்க் கரையில் உட்கார்ந்திருந்தார். அன்று ஒழிவோ என்னவோ? என்னைப் பார்த்ததும் முகம் சிவந்து, வெளுத்து, சிவந்தது. அதுவே எனக்குச் சிரிப்பாய் வந்தது. எனக்கப்போ விளையாட்டுப் புத்தி அதிகம்தான்.

அவரைச் சீண்டவோ, கையின் ஓயாத சேஷ்டையோ, கரையிலிருந்து ஒரு சிறு கல்லைப் பொறுக்கித் தாழச் சுழற்றிக் குளத்தில் எறிந்தேன். அது மூணு தடவை ஜலத் தகட்டின் மேல் தத்திச் சென்று உள்விழுந்தது.

''அவர் முகத்தில் சிரிப்பு இல்லை; அதன் மூன்னொளி பரவியது; ஒரு கல்லை யெடுத்து வீசினார்.

''ஒண்ணு—ரெண்டு—மூணு - நாலு—அஞ்சு—கிளுக்!

''எனக்கு ரோஸம் வந்துவிட்டது. சரியான கல்லைத் தேடி என் கண்ணோட்டம் கரைமேல் பாய்ந்தது. அவரும் அவசர அவசரமாய் அவர் பக்கத்தில் தேடினார்.

—எப்படி நேர்ந்ததோ, இரண்டு கற்களும் ஒரே சமயத் தில் கிளம்பின.

' - ஒண்ணு—ரெண்டு—மூணு—'டனார்'-!' பொறிகள் பறந்தன.

''களி வெறியில் எனக்குச் சிரிப்புப் பீறிட்டது. வெற்றி யுடன் எதிர்க்கரையை நோக்கினேன்.

''அவர் ஒரு கையால் மாரைப் பிடித்துக்கொண்டு கரை மேல் சாய்ந்து கிடந்தார். முகம் கடிதாசாய் வெளுத்து விட்டது. உள் வலியில் புருவங்கள் நெறிந்தன.

''குளத்தைச் சுற்றிக்கொண்டு அவரிடம் ஓடினேன். மூச்சுக்கு அவர் தவிக்கும் தவிப்பைக்கண்டு எனக்கும் துக்க மும் திகிலுமாய் அழுகை வந்துவிட்டது.

''என்ன உடம்பு? என்ன பண்றது?'' பூச்சி பறப்பது போல், கைகளைப் பிசைந்துகொண்டு அவரைச் சுற்றிச் சுற்றி வந்தேன்.

''ஒண்ணுமில்லை.''— குரல் அடைத்துக்கொண்டு வந்தது. ஜுரத்தின் கலங்கிய சிவப்பை அவர் முகம் அஸ்த மனத்திலிருந்து வாங்கிக் கொண்டதா? அல்லது அவரிட மிருந்துதான் அந்தச் சாயம் வானத்துக்கு ஏறிற்றா?

''இருங்கோ; நான் யாரையாவது அழைச்சுண்டு வரேன்—''

''வேண்டாம், வேண்டாம்.'' பின்னாலிருந்து அவர் குரல் அவசரமாய்த் தடுத்தது.

''இல்லை ஒரே நிமிஷம்!''

''ஆணையாச் சொல்றேன்; போகாதே! எனக்குச் சரி யாய்ப் போய்விட்டது. நானே போகிறேன்.''

''ஆணை யென்றதும் நான் திகைத்துத் திரும்பினேன். அவர் கையை ஊன்றி எழுந்து சற்றுத் தள்ளாடிய மாதிரி கரை மேட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தார்.

''நான் வெகுநேரம் நின்ற இடத்திலேயே நின்றுகொண் டிருந்தேன்,

''ஜலத்தகட்டில் நாங்கள் கிளப்பிய விதிர் விதிர்ப்பை யும், கற்கள் விழுந்த இடத்தின் சுழிப்பையும் நான் வாங்கிக் கொண்டு விட்டேனா?

''அன்று இரவு சாப்பாட்டிற்கு அவர் வரவில்லை. அப்புறமே எங்கள் வீட்டுப் பக்கம் அவர் வரவில்லை, அவசர மாய் ஊருக்குக் கிளம்பிப் போய்விட்டதாய்த் தெரிய வந்தது.

''ஒரு வாரம் கழித்து, யாரோ வந்து அவர் பேரைச் சொல்லி அப்பாவிடமிருந்து ஜாதகம் மாற்றிக் கொண்டு போனார்கள். அப்புறம் ஒரு தகவலும் இல்லை. அப்பா பார்த்ததில் ஜாதகங்கள் பொருந்தவில்லை.

''இங்கு என்னைப் பார்த்ததும் அவருக்கு அதிர்ச்சியாய்த் தானிருந்திருக்கும். பரவாயில்லை. சமாளித்துக்கொண்டு விட்டார். இன்று ஊருக்குக் கிளம்புகையில், மெனக்கெட்டு, உங்களிடம் சொல்லி என்னை வரவழைத்து எனக்கு நமஸ் கரித்ததே, அன்று குளத்தங்கரையில் தன் மனம் திறந்துவிட் டதற்கு மன்னிப்புக் கேட்கத்தானோ என்னவோ?

நான் சொல்ல வந்தது இதுதான்! சொன்ன பிறகு என் மனம் இன்னும் பெரிதான மாதிரி எனக்கு இருக்கிறது. என்னுள் ஆகாசம் புகுந்துகொண்டாற்போல், நானே இப்போது அதில்தான் மிதந்து கொண்டிருக்கிறேன். உங்களிடம் சொன்னதிலேயே எனக்கு நிறைவு ஏற்படுகிறது.

"நானே தான் பேசிக்கொண்டிருக்கிறேன்; எனக்கே தெரிகிறது. ஆனால், எனக்குப் பேசின மாதிரியே இல்லை. இன்னும் பேச எவ்வளவோ முடியும்.

"உங்களிடம் சொல்லிக் கொண்டு வருகையிலேயே, கேள்விகள் தாமே எழுகின்றன.

"எங்களிருவருக்கும் ஜாதகம் ஒத்திருந்தாலோ?

"அவர் திரும்பி வந்திருந்தாலோ?

"இப்பொழுது விமலாவின் கழுத்தில்தொங்கும் மாங்கல்யம் என் கழுத்தில் ஏறியிருந்தாலோ?

"அவர் அவ்வளவு சங்கோசியாயில்லாமல் இருந்திருந்தாலோ?

குளத்தங்கரையில் அவர் என் கையைப் பிடித்திழுத்திருந்தாலோ?

"இக்கேள்விகளுக்கு இப்போநான் என்ன பதில் சொல்ல முடியும்? நான் என் வர்க்கத்திற்கே பேசுவதாய் வைத்துக் கொள்ளுங்கோளேன். எனக்கு வாய்க்கப்போகும் கணவன் இவன்தான் என்று நான் முன்கூட்டி எப்படியறிய முடியும்?

"ஆகையால் எனக்கு வாய்ப்பவன் எவனோ, எவனாயிருந்தாலும் சரி, அவரிடம் நன்றி, விசுவாசம், நாணயம்—இவை விட உயர்ந்து, நிலை நிற்பனவாய், நிச்சயமாய் நான் நிறைவேற்றக்கூடிய பிரமாணிக்கங்கள் எவைகளுக்கு நான் என்னை சமர்ப்பித்துக்கொள்ள முடியும்? மற்றவை தாமே வரும்; வந்தால் வரட்டும். வாராதினும் போகட்டும்! இவை தாம் எனக்கு முக்கியமாய்ப் படுகின்றன.

''நன்றி, விசுவாசம், நாணயம்.

''நான் சொல்லியாகிவிட்டது. இனி, நீங்கள் பாயஸத்தைத்தான் கொட்டுவீர்களோ, ஈயைத்தான் எடுத்தெறிவீர்களோ; உங்களிஷ்டம்! நான் சொல்லியாகிவிட்டது!''

''என்ன செய்கிறீர்கள்? மறுபடியும் பொக்கப் போகிறது. அட, விரலாலேயே முள்ளைக் கிள்ளி எறிந்து விட்டீர்களே! இல்லை, நீங்கள் சூட்டவேண்டாம். நான் உங்கள் குழந்தையல்ல. உங்கள் மனைவி. என் கையில் கொடுங்கள். நானே சூட்டிக்கொள்கிறேன். என்னுடைய வெற்றி; என் பிரமாணிக்கங்களின் வெற்றி!

—ஆனால் உங்களுடைய ப்ரஸாதம்.

நமஸ்கரிக்கிறேன்.

இதானே கிழக்கு?



# ஆண்டாளு

'தோ பாரம்மா, இப்பவே கண்டிப்பா சொல்லிட்டேன்; ஆம்புள்ளேப் புள்ளையாப் பெத்துக்கிட்டுவா• பொட்டைக் குட்டியானால் கையால் தொடக்கூட மாட்டேன்.'' காப்பி வடிகட்டியை இழுத்து இழுத்துத் தேய்த்துக் கொண்டே ஆண்டாளு கட்டளையிட்டாள்.

'அது ஏது? அந்தப் பக்கம் ஒரே பெண்மயம்னா! எப்படி ஆகிறதோ?' பஞ்சாமி ஆபீஸுக்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தான்.

'எனக்கென்னவோ ஆம்புளேப் பசங்க மேலேதான் ஆசை. அம்மாக்கு கொளந்தே வேலை ஒண்ணு வெக்க மாட்டேன். பையன் நம்ம இடுப்புலேயேதான் சவாரியாயிருப்பான்.'

''நீ ஏதோ கோட்டை கட்டிக்கொண்டேயிரு! உன் எசமானியம்மாளுக்கும் கூடப்பிறந்தவங்க எல்லோரும் பெண்கள். முன்னாலேயும் பெண். பின்னாலேயும் பெண்.''

சுசிக்குக் கோபம் வந்தது. ''ஆமாம், நீங்கதானே எல்லோருக்கும் வரன் தேடி, கட்டிக்கொடுத்து கஷ்டப்பட்டேள்!''

''சரி சரி, உன்னைக் கட்டிக்கொண்டு உங்கப்பாவுக்கு ஒரு சுமை குறைத்தேனே போதாதா?''—பஞ்சாமி 'குஷி'யில் இருந்தான். இன்றைக்கு சமையல் பலே 'ஜோர்'.

வயணமான சாப்பாட்டுக்கும் வண்ணான் மடிக்குமே ஒரு தனி உற்சாகமுண்டு. சோற்றுத் திமிர். துணிக் கொழுப்பு.

''அடேப்பா! ஒண்ணா, இரண்டா? எட்டு. மனுஷ னிடம் ஒரு முழம் கயிற்றுக்குக் காசிருந்தால் எப்பவோ தொங்கியிருப்பான். எங்கேயிருக்கும்? அஷ்டலக்ஷ்மிகளும் ஒரே இடத்தில் வந்து தங்கினால், இடம் கனம் தாங்குமா? கப்பல் தட்டு கவிழ்ந்து எல்லாம் தலைகீழாப் போச்சு? கையிருப்பெல்லாம் கடனாக மாறிப்போச்சு.''

அவ்வளவுதான். சுசி மூக்கைச் சிந்திப்போட ஆரம்பித்து விட்டாள். பஞ்சாமி சொக்காய்ப் பொத்தானைத் திருகிக் கொண்டே சிந்தித்துக்கொண்டு போய்விட்டான்.

''நீ அழுவாதே அம்மா. ஐயா சொபாவம் புதுஸ்ஸா. அவருக்கு உன் அழுகையிலே சிரிப்பு காணறதே கண்ணாப் போச்சு. புள்ளத்தாச்சியாச்சேன்னு மனுசனுக்கு இரக்கம் இருக்குதா பாரேன்.''

தேற்ற ஆளிருந்தால் அழக் கேட்கணுமா? சுசி பெருங் குரல் எடுத்தாள்.

''அட சும்மாயிரும்மா, இந்த பொண்ணா, புள்ளையா தகறாரெல்லாம் வவுத்துலே இருக்கிற வரைக்கும்தானே! இடுப்பு நோவு எடுக்கட்டும்! ஏதோ ஒண்ணு களிஞ்சா சரின்னு ஐயாவுக்கே ஆயிடும். இந்தக் கிண்டல் எல்லாம் கொள்ளுச் சுண்டலாப்பூடும்! அட பேபா நீ ஒண்ணு! கொளந் தையை ஏந்திட்டு வண்டிவிட்டு இறங்கினதுமே, ஆலத்தி கரைச்சு வெச்சுகிட்டு நான்தானே காத்திட்டு நிப்பேன்? எங்கிட்டேதானே பையனைக் கொடுத்து வாங்கப் போறே! அட, பையன்னுதான் வாயிலே வருது, உனக்குப் பையன் தான் போ!—''

''ஆண்டாளு, நீ இல்லாட்டா இந்த வீட்டில் என்பாடு அதோகதி தாண்டி! நீ என் உடன்பிறப்பு மாதிரி.''

''ரெட்டேன்னு சொல்லும்மா. இங்க வாம்மா. என்னோட நிலைக்கண்ணாடியண்டை நின்னு பாரு. ரெண்டு பேரும் ஒரே ஒசரம், ஒரே தாட்டி, தெரியல்லே? முந்தா நா கொடுத்தியே ஒரு ரவிக்கை, எனக்கே அளவு எடுத்து தச்ச மாதிரி அச்சா இருந்திச்சு!''

''ஊருக்குப் போய் திரும்பி வரப்போ இன்னும் ரெண்டு, மூணு நல்லதாக் கொண்டு வரேன்.''

''உன் பிரியம்.''

தனிக் குடித்தனம் வைத்த புதிதிலேயே ஆண்டாள் வந்துவிட்டாள். அவள் வேலைக்கு வந்து அமர்ந்த விதமே தனி. கருவேப்பிலை விற்றுக்கொண்டே வாசற்படி ஏறியவள் வீட்டு எசமானி கூடத்தில் படுத்திருக்கக் கண்டாள். சுற்று சாமான்கள் வாரியிறைந்து கிடந்தன. சுசிக்கு மசக்கைக் கோளாறு. அப்போதுதான வாந்தியெடுத்துக் களைத்துப் போயிருந்தாள். ஆண்டாளு கூடையை அப்படியே கீழே வைத்தாள். ஐந்து நிமிஷம் பம்பரமாய் ஆடினாள். சாமான்களை எடுத்து அடுக்கி ஒழுங்குபடுத்தினாள். முற்றத்தில் போட்டிருந்த புடவை, வேஷ்டியைக் கசக்கிப் பிழிந்து, விரித்து அங்கேயே குறுக்கே கட்டியிருந்த கம்பிக்கொடியில் இழுத்து பிடித்து உலர்த்தினாள். உடனே மூலையில் சார்த்தியிருந்த துடைப்பத்தைப் பிடித்துப் பெருக்க ஆரம்பித்து விட்டாள்.

குப்பையைத் தள்ளிக்கொண்டே அவள் பக்கமாய் வருகையில், ''என்னம்மா! உடம்பு எப்படியிருக்குது? நான் தொட்டுப் பார்ப்பேன். ஆனால், நீங்கள்ளாம் பாப்பாராச்சே ஒட்டிக்கிட்டா?''

சுசிக்குத் திகைப்பில் அடைத்துப்போன வாய் இன்னும் திரும்பவில்லை.

என்னத்தைக் கொடுப்பது, எவ்வளவு கொடுப்பது? கேட்கவும் அஞ்சினாள். காட்ரெஜ் பீரோ—பஞ்சாமி ஆபீஸ் சகாக்கள் சேர்ந்து பணம் போட்டு வாங்கிக் கொடுத்த

கலியாணப் பரிசு, ஆள் உயரத்துக்கு. ஒரு பக்கத்துக் கதவு முழுக்க நிலைக்கண்ணாடி பதித்தது-அந்தப் பீரோவிடம் போய் அதைத் திறந்து மூடித் திரும்பிவந்தாள்.

''என்னதும்மா, துட்டா? துட்டு யாருக்குமா வேணும், என்மாதிரி நீ ஒரு பொம்புள்ளே, படுத்திருந்ததப் பார்த் தேன் மனந்தாளல்லே. அவ்வளவுதானே! உன்னைப் பெத்த வங்க இங்கே யிருந்தா உன்னை இப்படிக் காணப் பொறுப் பாங்களா?''

சுசி, அந்த நிமிஷமே உடைந்து உருகிப்போனாள். எட்டுப் பெண்களைப் பெற்ற அவள் தாயாருக்கு உண்மை யிலேயே அவள்மேல் அவ்வளவு தனி ஆதரவு இருக்குமோ? ஆனால், வந்தவள் சொன்ன விதத்தில் அவளுக்கு அவள் தாயார்மேல் அன்பு திடீரென ஆடிப் பெருக்கெடுத்தது.

''எனக்கு ஏதாச்சியும் குடுக்கணும்னு இருந்திச்சா, ஒரு டம்ளர் காப்பி ஸ்டாங்கா, நீங்க குடிக்கற மாதிரி—ரெண் டாந்தண்ணி, மூணாந்தண்ணியில்லே—நிறைய பாலுவிட்டு, அள்ளி சக்கரைப்போட்டு சேறாட்டம் கொடு. எனக்குப் பாப்பார் வீட்டுப் பண்டம்னா அவ்வளவு ஆசை. விட்டுச் சொல்றேனே, உன்னைப் பார்த்தவுடனே எனக்கென்னவோ அப்படி புடிச்சுப் போச்சும்மா, மெய்னா வெச்சுக்க, பொய்னா வெச்சுக்க. என்ன வேலைக்கு வெச்சுக்கறி யாம்மா? நீ இஷ்டப் பட்டது கொடும்மா. துட்டு யாருக் கம்மா வேணும்? எப்ப வேணும்னாலும் சம்பாரிச்சுக்கலாம். இந்தா கருவேப்பிலை எடுத்துக்க. துவையல் அரைச்சு எனக்கு ஒரு உண்டை கொடு—''

கூடையைக் கவிழ்த்து ரேழி வாசற்படியைத் தாண்டு மிடத்தில் தாழ்வாரத்துச் சுவரில் ஏற்கெனவே அதற் கென்றே அடித்தாற்போலிருந்த ஆணியில் மாட்டினவள் தான்.

அன்று மாலை பஞ்சாமி ஆபீஸிலிருந்து வந்து விவரம் கேட்டதும் வழக்கப் பிரகாரம் ஆரம்பித்துவிட்டான்.

"ஓஹோ, கண்டெடுத்த குண்டு முத்தாக்கும்! காசின் மேல் ஆசையில்லையாக்கும்! காப்பி என்றால் உசிராக்கும்! எனக்கு இப்போ ஞாபகம் வருகிறது. எங்கள் ஊருக்கு ஒரு சாமியார் வந்தார். காஷாயம், மொட்டைத் தலை எல்லாம் சரி. அவருக்கு சாப்பாடுகூட வேண்டாம். வாசற்குறட்டின் மேல் ஒரு கால், படிமேல் ஒருகால், இடுப்பில் ஒருகை ஊன்றி அதிகாரமாய் நிற்பார். 'சிவத்துக்கு ஒரு டம்ளர் பால் அகப் படுமா?' என்பார். அவரோட பாதக்குறட்டின் சப்தம் கேட் டாலே எல்லோரும் ஓடி ஒளிவார்கள். பாவம், எல்லோருக் கும் பயிர்த் தொழில். காலையில் தண்ணுஞ் சோறு, மத்தி யான்னம் மாவு சாதம், இரவு அடுப்புப் புகைந்தால் அதிகம்! பாவம், பாலுக்கு எங்கே போவார்கள்? சரி! சாமான்கள் ஜாக்ரதை, சொல்லிவிட்டேன். எங்களுக்கெல்லாம் இப்படி வேலை கிடைத்துவிட்டால், நாட்டில் வேலையில்லாத் திண் டாட்டம் ஏன் தலை காட்டும்?"

"இந்த இடக்குப் பேச்சைத் தவிர உங்களிடம் என்ன கண்டது? உங்கள் கூட்டமே சந்தேகக் கூட்டம்தானே?"

தோசையில் கடிபடும் சுண்டைக்காய்போல் 'தறுக்தறு'க் கெனும் பேச்சு. மண் கூஜாவிலிருந்து கொட்டும் ஜலம்போல் கிளுகிளுக்கும் குரல். நின்ற இடத்தில் நிற்காததோர் கீர்த்தனம்.

ஆண்டாளு கண்டிராத படம் கிடையாது. 'ஸ்டார்' களின் குடும்ப வரலாறு, அவர்கள் நடித்திருக்கும் படங்களின் ஜாபிதா, அவர்களைப்பற்றி அக்கப்போர் அத்தனையும் அவளுக்கு அற்றுப்படி.

எங்குமே மூவர் கூடில், இருவர் ஒன்று சேர்ந்து கொண்டு மூன்றாமவனைத் தாக்குவர். ஆண்டாளு சுசிக்கு சரியான பக்கபலமானாள். ஆண்டாளு வெளிப்படையாய்க் கக்ஷி கட்டினாள். இருவரிடையிலும் குறுக்கே விழுந்து கலக மூட்டினாள் என்று அர்த்தமல்ல. அவள் அவர்களிடையில் புகுவதுகூட இல்லை. ஆனால், சம வயதில் தன் பக்கம்

ஒருத்தி யிருப்பதே சுசிக்குப் பஞ்சாமியுடன் தர்க்கிக்கவோ, தன் ஆக்ரமிப்பை அவன் எவ்வளவுதூரம் பொறுப்பான் என்று ஆழம் பார்க்கவோ தைரியமாயிருந்தது.

ஆனால், அவர்கள் இருவரையுமே கண்டு ஆண்டாளு, தன்னுள் ரகஸ்யமாய்ச் சிரித்துக் கொண்டிருந்தாளோ எனப் பஞ்சாமிக்குத் தோன்றியது. அவ்வெண்ணமே இம்சையாயும் ரோஸமாயும் இருந்தது. எந்த சமயத்தில், எதற்காக, அவர் களுடைய எந்த அசட்டுத்தனத்துக்காக கேலி நகைப்பில் உள்குலுங்குகிறாள் என்று குறிப்பாய் சுட்டிக் கண்டு கொள்ளமுடியாதது இன்னொரு பெரிய சீண்டல். ஏனெனில் ஆண்டாளு எப்பவும் இன்முகமாகவே யிருந்தாள்.

சுசிக்கு எடுத்ததுக்கெல்லாம் மூக்கு துடிக்கும். போதும் போதாதற்கு இப்போ கர்ப்பிணி, துர்க்குணி. அத்தனைக்கத் தனை ஆண்டாளு பற்பொடி விளம்பரம்போல் இளித்துக் கொண்டே யிருப்பாள். கன்னம் குழிந்தது. எப்படி அவ ளுக்குப் பற்கள் அவ்வளவு வெண்மையாய், வரிசையாயிருக் கின்றன? நிஜமாய்த்தான், எதைப் போட்டுப் பல் விளக்கு கிறாள்?

சுசிக்கு வரவர தள்ளவில்லை. மேல் மூச்சு வாங்கிற்று. 'அம்மா எப்போ வந்து அழைத்துப் போவாள்? அதுக்குள் ளேயே, ஆண்டாளு, நீ இல்லாட்டா என்னடி பண்ணுவேன்? அவர் இருக்கிற ஊழலுக்கு வீடு நாறிப் போயிடுமே!''

'நீ ஏம்மா கவலைப்படறே? நான்தான் உன் வூட்டு மனுசி ஆயிட்டேனே!'

சுசிக்கு உச்சி குளிர்ந்து போகும். பஞ்சாமிக்குத் தெரிந் தும், தெரியாமலும் ஆண்டாளுக்குச் சௌகரியங்கள் நடக் கும். தனக்கு அவன் மாலை வாங்கி வரும் கதம்பத்தில் சரி பாதி ஆண்டாளுடன் பகிர்ந்து கொள்வாள். அவளைவிட 'ஸ்டைலா'க, ஆண்டாளு அதைக் கொண்டையில் வட்ட மாகச் சுற்றிக்கொள்வாள்.

'சுசி, இன்று காலையில் பருப்புசிலி நன்றாகப் பண்ணி யிருந்தாய். ஆபீஸுக்குப் போகும் அவசரத்தில் அனுபவித் துச் சாப்பிட முடியவில்லை. இப்போ கொண்டு வா. சாதத் தில் பிரட்டி, காப்பிக்கு முன்னால் ஒரு உருண்டை, ஒரு டென்னிஸ் பால், டிபன் மாதிரி அடிக்கிறேன்.'

'சரிதான், ஆண்டாளுக்குத்தான் கொஞ்சம் வெச்சிருக் கேன். அதற்குப் பூனையாட்டம் வட்டமிடவேண்டாம். இதென்ன முச்சந்தி மூணு வேளையும், குழந்தை பருப்புஞ் சாதத்துக்கு அழற மாதிரி! காலையில் பண்ணினது இன்னும் அப்படியே உக்காந்திருக்குமா?'

தர்க்கமும் மொணமொணப்பும் ஓயும் தறுவாய்க்குச் சற்று சமாதானம் பண்ணுகிற மாதிரி, 'சரி. வேணுமானால் ஏதாவது டிபன் பண்ணிடறேன். உங்களுக்குத்தான் குழம்புமா உப்புமா உசிராச்சே! இன்னி சாயங்காலம் ஜவுளிக் கடைக்குப் போவோமா?' என்றாள் சுசி.

'ஏன் உங்கப்பா வைத்திருக்கிறாரா?'

இந்தக் குத்தலை வாங்கிக்கொள்ளாதது மாதிரியே, 'அத்தரதையா ரவிக்கையே இல்லை.'

'இதென்ன அக்ரமம்! முந்தா நேற்றுக்கூடப் பார்த் தேனே, உன் பெட்டியை ஒழித்து அடுக்கிக்கொண்டிருந் தையே, ஒரு போர் இருந்ததே!'

'எல்லாம் பழசு, ஆண்டாளுக்குக் கொடுத்துட்டேன்.'

'பழசா? எல்லாம் கல்லாட்டம், அத்தனையுமா?'

'அத்தனையுமாம்! சுண்டைக்காய் எத்தனை? உங்கள் கூட்டமே அல்பக் கூட்டம்தானே!'

ஆண்டாள் வந்ததிலிருந்தே, சுசிக்கு வாய் அதிகரித்து விட்டது.

இப்படியே, காரணம் ஸ்பஷ்டமாய் உணர முடியாமலே அவனுக்கும் ஆண்டாளுக்குமிடையில் ஊமைப் பகை

வளர்ந்துகொண்டிருந்தது. அதுவே ஆண்டாளுக்குத் தெரிந்ததோ இல்லையோ? தெரிந்தாலும் அவள் காட்டிக்கொள்ளவில்லை. தெரிந்தால்தான் என்ன, அவளுக்குப் பயமா? எசமானியம்மா அவள் பக்கம் இருக்கும்வரை, அவளை யார் என்ன செய்ய முடியும்?

ஆனால், ஒன்று: ஆண்டாளுக்குத் திரிசமம் பிடித்த கையல்ல. வெள்ளிப் பண்டங்கள், சில்லரை, நோட்டு, கைக்கடியாரம், பவுண்டன் பேனா, தங்கப் பொத்தான்—நினைவாகவோ, மறதியாகவோ வைத்த இடத்தில் வைத்தபடி இருந்தன. நம்பி அவளை வீட்டில் வைத்துவிட்டு எங்கு வேணுமானாலும் செல்லலாம். நாளடைவில் அம்மாதிரியே பல காரியங்கள், பொறுப்புகள் எல்லாம் ஆண்டாளிடமே விடப்பட்டன. சுசிக்கு அதிகரித்துக் கொண்டிருக்கும் உடல் தள்ளாமைக்கும், காலை வெய்யில் முகத்தில் உறைக்கும் வரை பஞ்சாமி தூங்கும் சோம்பேறித்தனத்திற்கும் ஆண்டாள் ஒரு பெரும் வரமாய் அமைந்தாள். எனினும், அதுவே ஒரு முறையில் அவமானமாயுமிருந்தது. ஆனால், அத்துடன் சரி தன்மானம் குத்தப்பட்டதன்றி, தூண்டப்படவில்லை. உண்மையில் அவள் பேய்ச் சுறுசுறுப்பில் ஒரு போதை தானிருந்தது. இப்படித்தான் என்று கூற முடியாது. மற்றவர்களுடைய பலத்தை அது தான் உறிஞ்சிக்கொண்டு, அவர்களை இன்னும் பலமான மயக்கத்தில் ஆழ்த்தியது.

ஒரு விஷயத்தில் சுசியும் ஆண்டாளிடம் அசௌகரியத்தை அனுபவித்தாள். பொழுது சரியாய்ப் புலருமுன், ஜன்னலுக்கு வெளியே வானத்தில் விடி சாம்பல் பூக்குமுன் வந்து கதவைத் தடதடவெனத் தட்டுவாள், சபித்துக் கொண்டே பஞ்சாமி எழுந்து வருவான்.

'இன்னும் கொஞ்ச நேரம் பொறுத்துவரக் கூடாதா ஆண்டாளு?' என்று சுசி எத்தனையோ விதங்களில் எத்தனையோ முறை சொல்லிப் பார்த்தாயிற்று.

'நீ சொன்னபடித்தானே அம்மா நேரமாய் வந்தேன்!' என்று சிரிப்பாள். ஆனால், வருகிறபடி வந்து சுவாரஸ்ய மான விடி நித்திரையைக் கலைத்துக் கொண்டிருந்தாள்.

'காரியம் நறுவிசோ இல்லையோ, சதா ஏதாவது செய்து கொண்டிருக்கணும். ஒழித்துப் பெருக்குதல் என்பதே அவளுக்கு ஒரு வெறியாயிருக்கிறது.' ஒரு நாள் சோப்பு, சீப்பு வைக்கும் அலமாரியில் நான் விழித்துக்கொள்ளப் போகிறேன்' என்று பஞ்சாமி இரைவான்.

ஒரு சமயம் பஞ்சாமி ஆபீஸிலிருந்து வேலைசெய்ய வீட் டுக்குக் கொண்டு வந்திருந்த முக்கியமான பேப்பர், மறுநாள் சாப்பிட்டுவிட்டு வேலைக்குக் கிளம்பும் வேளைக்கு காணோம். பஞ்சாமிக்கு உடல் பதறிவிட்டது. முதலில் அதை வீட்டுக்குக் கொண்டு வந்திருக்கக்கூடாது. கேட்டிருந் தாலும் துரை அனுமதித்திருக்கமாட்டான். அத்துடன், வந் திருப்பவன் புதிசு. அவன் புது ஜோரில், இன்று திட்டத் தொடங்காமல் நல்ல நாளாய்ப் போகணுமே என்று ஒவ் வொரு நாளும் கதி கலங்கும் நாட்கள். வீட்டையே தகர டப்பாபோல் தலை கீழாய்க் கொட்டித் தேடி, வாசலில், கார்ப்பரேஷன், வீட்டுக்கு வீடு தாராளமாய் அளித்திருக்கும் சிமிட்டிக் குப்பைத் தொட்டியை ஆராய்ந்தபின், மூலைப் பிள்ளையாருக்கு ஒரு சதிர்த் தேங்காய் சுசி வேண்டிக் கொண்டபின், பேப்பர்க்காரனுக்கு நிறுத்துப் போடக் கட்டி வைத்திருக்கும் தினசரி பேப்பர்க் கட்டில் சொருகியிருந்தபடி அகப்பட்டது. பஞ்சாமிக்கு சீற்றம் கட்டுக்கடங்கவில்லை

'என் அறையை யாரும் பெருக்க வேண்டியதில்லை, அதில் எதையும் ஒழித்துப் பெருக்க வேண்டியதில்லை, என் குப்பையிலேயே நான் புதைந்து, மூச்சுத் திணறிச் செத்து நாறிப் போனால் போகிறேன். என்னை யாரும் எடுக்கவேண் டியதில்லை' என்று உத்தரவுவிட்டான்.

அதற்கு அவனுக்குக் கிடைத்த பதில், கூஜாவிலிருந்து கிளுகிளுக்கும் தண்ணீர்ச் சிரிப்புத்தான். ஆண்டாளுக்குப்

பயம் என்று ஒன்று இருந்ததாகவே தெரியவில்லை. அந்தச் சிரிப்பில் அவன் உணர்ந்த ஏளனம், உடல்மேல் கம்பளிப் பூச்சிபோல் முலுமுலுவெனப் பிடுங்கிற்று.

ஒரு சமயம் அவனும், சுசியும் கடைக்கோ, சினிமா வுக்கோ, தெரிந்த வீட்டுக்கோ போய்விட்டுத் திரும்பு வதற்குள் ஆண்டாளு, தானே சமையலறையில் புகுந்து, பற்றுப் பாத்திரங்களை ஒழித்துப் போட்டு, தேய்த்துத் துடைத்து, பலகைகளில் கவிழ்த்து அடுக்கி, ஒரு சாதமும் சின்னப் பாத்திரத்தில் குழம்பும் பண்ணித் தனியாய் வைத்து, அடுப்பையும் சாணியிட்டு மெழுகிக் கோலம் போட்டு விட்டாள்.

சுசிக்கே கொஞ்சம் 'திக்'காகிவிட்டது. சுசியின் முகத்தைப் பார்த்துப் பஞ்சாமிக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

'உன்னை யாருடி ஆண்டாளு இதெல்லாம் செய்யச் சொன்னது. என்னதான் எல்லாம் போச்சுன்னாலும் ஒரு இலை மறைவு தலை மறைவு, இடது கண் வலது கண்கூட இல்லாமல் போகணுமா?'

'உன் பாசையெல்லாம் யாருக்குப் புரியுது? என்னவோ புள்ளத்தாச்சியாச்சேன்னு செஞ்சுட்டேன். ஏன், நான் தொட்டதை, நீங்க தொட்டுத்துன்னா, குடல் கறுத்துடுமா?'

அவளை என்ன செய்ய முடியும்?

தலையைச் சற்று சாய்த்தபடி குறும்பு கூத்தாடும் கண் களுடன் அவள், அவர்களைப் பார்க்கும் இச்சமயம், அவன் தன் கிராமத்து வாய்க்காலில் குளிக்கையில்-ஓடும் தண்ணீரில் சில சமயங்களில் பாசி, கும்பியோடு வேர் கழன்று பெரிய காதுகள் போன்ற இதழ்களுடன் மிதந்துவரும் வெள்ளைப் புஷ்பத்தை ஞாபகமூட்டினாள். அதன் பேர் என்ன? எங் கிருந்து வருகிறது, எங்கே போகிறது-யாருக்கும் தெரியாது. ஆனால், அதன் பெருமையான சிரிப்பு மாத்திரம் மனதில் பதிந்துவிட்டது. அம்மாதிரியே இவளுக்கு எப்பவும் எல்லாமே சிரிப்பு, ஏளனமாக இருந்ததோ?

சமயம் போதற்று உலகத்தையே ஒரு பெரும் சிரிப்பாய்க் கண்டு தன்னைக் கோபிப்பவரை மூர்க்கனாயும், முட்டாளாயுமாக்கும் ஒரு குழந்தைத் தன்மை. சூடிக்கொடுத்த நாச்சியார் இப்படித்தான் இருந்திருப்பாளோ?

ஊருக்குப் புறப்படுகையில் சுசி, ஆண்டாளிடம்தான் வீட்டை ஒப்படைத்துவிட்டுப் போனாள்.

'ஐயாவுக்குப் பொறுப்பு கிடையாது. நீதான் எல்லாத்தையும் கவனிச்சுக்கணும். அவர் ஓட்டல்லே சாப்பிடுவார். இரண்டு வேளையும் வந்து சாணி தெளிச்சிப் பெருக்கி...'

அவள் கிளம்பும்போது, ஆண்டாளு பச்சைக் குழந்தை மாதிரி அழுதாள், மனம் தாளாது. சுசியின் கண்ணீரும் கலந்தது. ''ஆண்டாளு என்மேல் இவ்வளவு பக்ஷம் வெச்சிருக்கையாடி?'' அழுகை ஓட்டுவாரொட்டி. அவனுக்கும் தொண்டை அடைத்தது. ஆனால், ஆண்டாளு இப்படி அழுகையிலேயே, அவள் கண்ணீரின் பாசனத்தில் புதுப் புதுச் சிரிப்புகள் அவளுள் பூத்துக் கொட்டிக் கொண்டிருந்தன என்று தோன்றாமல் இல்லை— வெடித்துவிட்ட அவுட்டு வாணம் இன்னும் சற்று நேரத்தில் பாளை பாளையாய்க் கக்கவிருக்கும் நக்ஷத்திரக் கூட்டங்கள்போல்.

ஒரு நாள் தற்செயலாக, கூடத்துக்கொடியில் பட்டுப் புடவை உலர்த்தியிருக்கக் கண்டான். எல்லா அரக்குச் சமத்துக்களின் தனி மறதிக்கு விலக்கில்லாமல், சுசி அதை மாத்திரம் உள்ளே வைக்க மறந்து ஊருக்குப் போய்விட்டாள். 'எலி பிடுங்காமல் அதை மடித்தாவது போடச் சொல்லணும்.'

தலை தீபாவளிக்கு எடுத்தது. பொன்வண்டுக் கலர்.

ஆனால், ஆண்டாளுவும், அவனும் அதிகமாய்ச் சந்திக்கக்கூட வாய்ப்பில்லை. சந்திக்கும்போது ஞாபகம் இருக்காது. வாசற் கதவு சாவி ஒன்று அவனிடம் இருந்தது. மற்றதை சுசி ஆண்டாளுவிடம் கொடுத்திருந்தாள். காலை

யில் அவன் கையைக் காலை முறிக்கும் வேளைக்கு, வேலை முடிந்து போயிருப்பாள். மாலை ஆபீஸ்விட்டு எங்கெங்கோ சுற்றிவிட்டு இரவுதான் திரும்புவான்.

புடவை உலர்த்தியபடியே கொடியில் தொங்கிற்று.

மாமனாரிடமிருந்து மஞ்சள் தடவி வந்த கடிதாசின் பின்புறத்தில் சுசியின் பலவீனமான கையெழுத்தில் இரண்டு வரிகள் இருந்தன.

'ஆண்டாளுவை சர்க்கரையை வாயில் அள்ளிப் போட்டுக் கொள்ளச் சொல்லுங்கள். அறுந்துபோன உங்கள் மூக்கை எடுத்து ஒட்ட வைத்துக்கொள்ளுங்கள்.'

தீபாவளி வந்துவிட்டது.

மூன்று நாட்களாகவே பட்டாசு வெடியும், தெருவில் பசங்களின் ஆரவாரமும் காது பொளிந்தது. ராத்தூக்கமே கெட்டது. கண்கள் எரிந்தன.

குறைத் தூக்கமும், அறை விழிப்புமாய்ப் படுக்கையில் இருப்புக் கொள்ளாமல் புரளுகையில், சுசி நினைப்பு எழுந்தது. 'ஏ சுசி, கலியாணமான புதிதில் நான் கண்ட சுசியா இப்போது நீ? சே, இப்போது மாத்திரம் உன்மேல் எனக்கு ஆசையில்லையா? அதற்கென்ன, கொஞ்சம் சீண்டுகிறேன், அவ்வளவுதானே! அது என்ன கோபமோ, ஆங்காரமோ புர்ர்ர்ர்-ரோ? அதென்ன சொக்கு சொக்கி சினிமாவில் காணற மாதிரி சோகமாய் விழுந்தால்தான் ஆசையா? சுசி, நீ கோபிக்கையில் உன் முகம் எவ்வளவு களை கட்டுகிறது தெரியுமா! சுசி, நான் நல்லவன்தாண்டி! உனக்குப் பிடிக்க வில்லையானால் இனிமேல் சீண்டவில்லை. திருப்திதானே! நீ இல்லாவிட்டால் பொழுதும் போகவில்லை. நினைத்துக் கொண்டு ரயிலேறிவிடும் கிட்ட தூரத்தில் இருக்கையா? தலை தீபாவளிக்குப் பிறகு எப்போது உன் வீட்டுக்கு வந்திருக்கிறேன்?'

நினைப்பு அப்படியே கனவுள் நழுவியது.

அவனுக்குத் தலை தீபாவளி.

கீழே ஓரே அமர்க்களம்.

சுசி மாடிப்படி ஏறி வருகிறாள். 'ணக்ணக்' என மெட்டி ஒலிக்கிறது. மெதுவாய்ப் படுக்கையறைத் கதவு க்றீச்சிட்டுக் கொண்டு திறக்கிறது.

விடியிருட்டில் அவள் உருவக்கோடுகள் விளிம்பிடுகின் றன. புதுப் புடவை சலசலக்கிறது. பக்கத்தில் வந்து நிற்கிறாள்.

"சுசி!" அவள் கையைப் பிடித்து இழுக்கிறான். அவன் மேல் சாய்கிறாள். மெத்து மெத்தென அங்கங்கள் அழுத்து கின்றன.

"சுசி! சுசி!"

தாழ்ந்து, நீண்டதோர் கொக்கரிப்பு அவனுள் மருந்து ஊசிபோல ஏறி, கனவு கலைந்தது. உடலில் மின்சாரம் பாய்ந்து, நினைவு வெடுக்கென உதறிக்கொண்டது. பதறி எழுந்து விளக்கைப் போட்டான்.

சிறித்தபடி ஆண்டாளு எதிரே நின்றுகொண்டிருந்தாள். எண்ணெய் தேய்த்து ஸ்னானம் பண்ணி, கொடியிலிருந்து இழுத்து சுசியின் தலை தீபாவளிப் புடவையை உடுத்தி யிருந்தாள். ஈரம் உலர அள்ளிச் சொருகிய கொண்டையில் சொகுசாய்ச் சூடிய பூச்சரம் தொங்கிச் சிரித்தது. பட்டுப் புடவையிலிருந்து பொன்வண்டின் மின்னிறங்கள் 'டால்' அடித்துச் சிரித்தன. ரவிக்கையில் ஜிகினாப் பொட்டுக்கள் மினுக்கிச் சிரித்தன. கைவிரல்களிலிருந்து சொடுக்குகள் சிரித்துக்கொண்டு உதிர்ந்தன. கைவளையல்கள் குலுங்கிச் சிரித்தன. சிரிப்பு மணம் அவளைச் சூழ்ந்து கமழ்ந்தது. உலகத்தின் புளுகுகளை அம்பலப்படுத்தும் சிரிப்பின் தேவதையாக காக்ஷியளித்தாள்.

அப்படியே ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு எவ்வளவு நேரம் நின்றுகொண்டிருந்தனரோ?

அவள் புன்னகை மாறவில்லை. சாவகாசமாய்த் திரும்பினாள். அவள் இடை மிடுக்காய் ஒடிந்தது. ரேழி வாசற்படி தாண்டுமிடத்தில் தாழ்வாரத்துச் சுவரில் இந்த வீட்டில் அவள் புகுந்தபோது மாட்டிய அவளுடைய கூடையை எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு நடைதாண்டி இருளில் மறைந்தாள்.

வாசல் கதவு திறந்து மூடியது.

கூடை மாட்டியிருந்த வட்டமான அடையாளம் சுவரிலிருந்து சிரித்தது.

பொறி கலங்கி அங்கேயே நின்றான்.

கிராமத்தில். வாய்க்காலில் குளிக்கையில், பாசி கும்பியுடன் யானைக் காதுகள் போலும் இதழ்களுடன் வேர் கழன்று சிரித்தபடி, வெள்ளைப் புஷ்பம் மிதந்துவரும்— அதன் பேர் என்ன? எங்கிருந்து வருகிறது? எங்கே போகிறது.........



# நெற்றிக் கண்

[ஓம்! பூர்வ கதையில், பகவானானவர், பவித்ர னான தம்மை பழித்துக்கொண்டு, ஆணவம் பிடித்து அலையும் தாருகாவனத்து ரிஷிகளைப் பங்கப் படுத்துவதற்குப் புறப்பட்டார்.]

பனிமலையில், சதா யோக நித்திரையிலேயே விறைத்திருந்த அவ்வுள்ளத்தில், பூவுலகின் ரஸ்மி புகுந்ததும், அது இளகிப் புளகித்தது. நடைவழியிலேயே, அவனது சிருஷ்டியின் சிறப்பு அவனையே பிரமிக்கச் செய்தது. வண்டுகள் தேனைப் பூக்கிண்ணங்களினின்று வாரி வாரிக் குடித்து விட்டு, அவனது காதருகே சென்று, ரீங்காரம் செய்தன. அத்துடன் புட்களின் கானமும் சேர்ந்து இழைந்தது, ஆநிரைகள் அமைதியாய், பச்சைகளை மேய்ந்தன. வேளையின் வெறியில், மான் குட்டிகள் துள்ளி விளையாடின. சர்வம் சௌந்தர்யம். ஈதெல்லாம் அவன் செயல். உள்ளம் உவகை பூத்தது. விருப்பு வெறுப்பற்ற அந்த மனத்தின் பரந்தவெளியில், பூமியின் உன்மத்தம் பற்றியதும், எடுத்த காரியம் பிடித்த காரியமாயிற்று.

பொன் வெயில்தான், அவனது மண் ஓட்டில் தன் பொன் கிரணத்தை முதற் பிச்சையாயிட்டது. அந்த மகிமையில் ஓடு பொன்னாய் மாறியதும், அவனுக்குச் சிரிப்பு வந்து விட்டது.

இதோ அக்ரஹாரம்.

''தாயே தேஹி—''

உள்ளிருந்து மெட்டிச் சப்தம் அணுகியது. அவனது முகத்தில் முறுவல் அரும்பியது. தன் அற்புதமான அழகின் முள்ளை, தன் குரலினிமையால் மறைத்தான்...

வந்தாள். வந்து வாசலில் நின்றவள்தான். அவனுடைய கண்கள், மெதுவாய் உயர்ந்து, அவளைக் காலினின்று தலை வரைக்கும் கணித்து, சட்டென அவளுடைய கண்களைச் சந்தித்து, கனிந்த விஷத்தைக் கக்கின. காமனைப் பழித்த அம் மாபெரும் அழகிலும் அதிக வேதனையுமுண்டோ? அவளுடைய மானமும் உள்ளமும் கழன்று, அவனது ஓட்டில் விழுந்தன. புன்னகை புரிந்தவண்ணம், கபாலி, மறு வாசலை நோக்கி நடந்தான்.

அன்று அவன் வாங்கிய பிச்சையே வினோதம். வளையும் பவித்ரமும், செவியினின்றி கழலும் குழையும், கண்டத்தினின்று சரிந்த சரமும் பிரம்ம கபாலத்தில் குவிந்தன. வீட்டுக்கு வீடு அந்தப் பிரம்மசாரி இழைத்த அலங்கோலத்துக்கு அளவு இல்லை!

கண்டதும் கல்லாய்ச் சமைந்தவர் எத்தனைபேர்! அவன் கையைப் பிடித்திழுப்பவர் எத்தனைபேர்! அவனைப் பங்கிட ஒருத்தரோடொருவர் பூனைபோல் பிறாண்டிச் சண்டையிடுபவர் எத்தனையோ? அவசரமாய், வற்கலமும் புடவையும் இடையினின்று நெகிழ, மெய்ம்மறந்து மயங்கி நிற்பவர் எத்தனை பேர்? அந்தக் காட்சி அவனுக்குத்தான் அற்புதம். சகல ஆசாரங்களுக்கும் உறைவிடமாயிருந்த அவ்வாசிரமம், சடுதி நேரத்தில் ஆபாசம் நிறைந்த அனங்களின் போர்க்களமாயிற்று.

இன்னும் ஒரு வீடுதான். அத்துடன் அவனது வெற்றியும் முழுமை பெற்றுவிடும்.

''பிச்சை...!'' அது என்ன பிச்சைக் குரலாகவாயிருக்கிறது? மெட்டி குலுங்க, ஓட்டமற்று, நிதானமான நடையோசை.

அவனது குனிந்த புருவம். ஆச்சரியத்தால் உயர்ந்தது. முதன் முதலாய், கபாலத்தில், அரிசி விழுந்தது. பொறுக்குப் பொறுக்காய், ஒரு அள்ளு அரிசி.

அவன் தலை நிமிர, பார்வை அவள்மேல் பாய்ந்தது. ஆனால் முப்புரத்தையும் எரித்த அது ஆகாயத்தில் எய்த அம்புபோல், பயனற்று, நிஷ்களங்கமான அவளுடைய கண்களைச் சந்தித்துக் கீழே விழுந்தது. அவனது மனதில் களங்கம் புகுந்தது. என்ன இருந்தால்தான் என்ன நர உருவம் எடுத்தால், அதன் நச்சு விடுமோ?

ரிஷிபத்தினியே ஆயினும், ராஜ லட்சணங்கள் அவளுடைய முகத்தில் பிரகாசித்தன. தாருகாவன ரிஷிகளுக்குள்ளேயே, மஹா கொடியவன் வல்லபன். எந்தச் சமண ராஜனிடம் எந்த உபகாரத்துக்கு ஈடாய் இவளைப் பெற்றானோ? ஆனால், அதிலும்தான் என்ன விந்தை! நச்சுமிக்க நாகத்திடம் தானே, மாணிக்கம் உறைகிறது?

அவளது இதயத்தின் விசாலம், அவனுடைய கண்களுக்கு நேர். மயிரின் இருள். அவனது மனதில் புகுந்த் இருளுக்கு இணை. அவளுடைய அங்கங்களை அத்தனை அளவுடனும் உருவுடனும் கடைய, அவள் அப்பன் தொழும் அருகன், எத்தனை நாள் உழைத்தானோ!

அவளது முகத்தில், இவ்வுலகம் பிறந்து, அதில் ஜீவன் அவஸ்தையுறுமுன்னே தேங்கிய அகண்ட அமைதி நிலவியது. அதைக் கண்டதும், அவனது உள்ளம் நடுங்கிற்று; உடல் நடுங்கிற்று; கையில் பிடித்த ஓடும் நடுங்கியது. அவளது உருவம் பதிந்து கனத்த நினைவுடன், அவன் அவ்விடம் விட்டு அகன்றான். நீந்துபவனை நீர்ச்சுழல் இழுப்பது போன்று, அவன் சென்ற காரியத்துக்கு அவனே பலியானான்.

காமன் தன் கறுமைத் தீர்த்துக்கொண்டு விட்டான்.

கிள்ளைகள், முகத்துடன் முகம் சேர்த்து, கொஞ்சி மொழியாடின, கொம்பும் கொடியும் நாணிக் குழைந்து

பிணைந்தன. பட்டு பூச்சிகள் ஒன்றுடனொன்று ஒட்டிப் பறந்தன. அதோ, அந்த மரத்தின் மறைவில், கலைமான், பேடையைத் துரத்துவதேன்? வானமே, வையத்தைப் புல்லி அதன் மேல் கவிந்து குவிந்து குலவியது. இப் புலவியின் பெரு மிதத்தில் பூமி, பூவும் பச்சையுமாய்ப் பொங்கி வழிந்தது. இது அத்தனையும் பொய்யா? ஏ கடவுளே, இத்தனையும் உன் செயல்தானே? எல்லாம் பொய்யென்று போதித்து விட்டு கையில் ஓடும் எடுத்துவிட்டாயே? இப்போது என்ன செய்வாய்?

அடிபட்ட சிங்கம் போன்று, பகவான் மூச்சு வாங்கிய வண்ணம், ஓர் அரச மரத்தடியில் விழுந்தான். அவனது சிருஷ்டி அவனை ஏளனம் செய்தது.

முட்புதரில், ஸ்பரிச வேதனையே படாது, மலர்ந்து வெற்றியுடன் நகைக்கும் ரோஜாவை யொத்து, அவள் கை கெட்டாது புஷபித்திருந்தாள். அவளது நினைவில் கமழ்ந்த மணத்தின் இன்பம் தாங்கமுடியவில்லை. அவளைப் பறித்து முகராத ஒவ்வொரு விநாடியும் தாளமுடியவில்லை. மூர்க்க வெறி அவ்வாண்டியைப் பிடித்து அலட்டியது. அவன் மயக்கு அவளிடம் பலியாததில், அவனது வேதனை அதிகரித்தது. தான் வந்த காரியத்தை மறந்தான்; தன்னை மறந்தான்.

கட்செவி உணர்வது போன்று, அவள் அங்கே வருவதை அவன் எப்படியோ உணர்ந்தான்.

ஆம், அவள்தான்; இடுப்பில் குடத்தை யூன்றி சரிந்து, நடந்து அவனிடம் நடந்து வரவில்லை. அவனைப் பார்க்கவு மில்லை. குடத்தைக் கரையில் வைத்துவிட்டு, தடாகத்தில் இறங்கினாள். அவள் புனர் ஸனானம் செய்வானேன்?

அவளைத் தரிசிக்கும் ஆவலும் அவசியமும் தூண்ட, பகவானும் எழுந்து, ஆடையைக் களைந்து, கௌபீனதாரி

யாக மறுபுறம் வந்து ஜலத்தில் இறங்கினான். அவனைக் கண்டு நடுநடுங்கி புனலும் சலசலத்தது.

அவள் அவனைக் கண்டாள், அவனது உள்ளம் துள்ளிய துள்ளலில், உடலைவிட்டே வெளி வந்துவிடும் போலிருந்தது. அவளுடைய கரங்கள் குவிந்து, தலைகுனிந்து வணங்கி நிமிர்ந்தது. அக்கண்களில், எள்ளளவும் சஞ்சலமேனும் இருக்க வேண்டுமே! அலைகளுக்கப்பால், சப்தமற்றுத் தூங்கும் கடல் நீலம் போல, தன்னுள்தானே நிறைந்து, அவள் உள்ளத்தே அமைதி அசைவற்று நின்றது. அவனது உடல் மறுபடியும் நடுங்கியது. அவளையோ, சாந்தமே கவசமாய்க் கவிந்திருந்தது.

''சூர்ய கதி உயர்ந்துவிட்டாற் போலும்!''—என்றான், ஏதாவது பேசியாக வேண்டுமே, அதற்காக. அவள் வாய் வார்த்தையில் சொரியும் தேனுக்கு ஏங்கி அலைவுற்றது மனம்.

'ஆம்' என்னும் முறையில், அவள் தலையை அசைத்தாள்.

பேச மாட்டாளா? வாயில் கொழுக்கட்டையா?

''தண்டகாரண்யம் இங்கிருந்து இன்னும் எவ்வளவு தூரம்?''

''சுவாமி, நான் அறியேன். வேணுமானால், இங்கிருந்து கிழக்காய்ப் போனீர்களானால், ரிஷிகளின் யாகசாலை இருக்கிறது. அங்கே விசாரியுங்கள்—''

ஆச்சு, அத்துடன் பேச்சும் முடிந்தது. அவனது உள்ளம் வெள்ளையாயிருந்தால், பேச்சும் வெள்ளமாய் வரும். ஆனால், அதில்தான் கள்ளத்தனம் புகுந்துவிட்டதே!

அவள் ஈரச் சேலையுடன், நிறை குடத்தைத் தாங்கிய வண்ணம் — அக்ரஹாரத்துக்குப் போகவில்லை — அதோ தெரிந்த மூங்கிற் காட்டை நோக்கிச் சென்று, புதர்களிடை மறைந்தாள்.

சேலையைச் சரிப்படுத்திக் கொள்ளவோ?

அவனது நெற்றியில் வியர்வை அரும்பிப் பொட்டுப் பொட்டாய் நின்றது. மேலுதட்டைக் கீழ்ப் பல்லால், இழுத்துக் கடித்துக் கொண்டு நின்றான். அவளது உடலின் விறுவிறுப்பும், நடையின் துள்ளலும் அவனது மனத்தில் புகுந்து துடிக்க ஆரம்பித்துவிட்டன. வேதனை சஹிக்க முடியவில்லை. அவளை—

மதம் பிடித்த களிறு ஆகிவிட்டான் கடவுள். அவனுடைய நடையின் வீச்சும் கடிய நேரத்தில், வாவிக்கும் வேய்க் காட்டுக்கும் உள்ள இடைவெளியைக் கடந்தது.

சலசலப்புக் கேட்டு, அவள் சட்டென்று திரும்பினாள். புதர்களை இரண்டு கைகளாலும் விலக்கிக் கொண்டு, கால்களை அகல விரித்து, அழுந்த ஊன்றிய வண்ணம், தலை நிமிர்ந்து, ஆஜானுபாகுவாய் கோவணாண்டியாய் நின்றானவன். புஜங்களிலும் மார்பிலும் தொடைகளிலும், நரம்புகள் புடைத்து விம்மியெழுந்தன. ஒரே சௌரிய உருவாய் விளங்கினான் கடவுள். அவனுடைய இரு கண்களும் நெருப்பாய் ஜ்வலித்தன. முதன் முதலாய், அவளது மனதில், அவனது நோக்கிலும் அவன் நின்ற நிலையிலையும் சந்தேகம் பிறந்தது. சாந்தக் கடல்களான, அவளுடைய கண்களில் கொந்தளிப்பு உண்டாகிவிட்டது.

ஓர் அணுவளவு நேரத்தில், துணுக்களவு நேரம், உலக இறுதியின் நிசப்தம்.

'கீச்—கீச்—கீச்—'

எங்கோ ஒரு குருவி அலறியது.

அவள் காதில் ஒரு பயங்கர வெள்ளம் இரைந்தது.

''நீ எவ்வளவு சுந்தரமாய் இருக்கிறாய்!''

''சுவாமி, நீங்கள் இப்படிப் பேசுவது உங்களுக்குத் தகாது. கையிலே ஓடு தாங்கி, இடையில் காஷாயம் பூண்டிருக்கிறீர்கள்,''

"பாதகமில்லை." அவள் பக்கத்தில் அவன் நெருங்கினான். அவனது அனல் மூச்சு, அவளுடைய முகத்தைச் சிவக்கச் செய்தது. "உனக்கு என்னைப் பார்த்தால் என் காஷாயம்தானா தெரிகிறது? வேறொன்றும் தெரியவில்லையா?"

"தெரிகிறது, காஷாயம் உமக்கு வேஷமென்று. தயவு செய்து ஒதுங்கும். தனிமையாயிருக்கும் ஒரு ஸ்திரீயிடம் உமக்கு என்ன வேலை?"

"உன்னிடம்தான் எனக்கு எவ்வளவோ வேலை. உனக்கு இன்னும் புரியவில்லையா? பெண்ணே, எல்லோரையும் போலல்ல நான்—நான்—நான்."

"ஐயா, நான் பரஸ்திரீ; பரத்தையல்ல. உம் பேச்சு உம் கோலத்துக்குத் தகாது. தர்ம சாஸ்திரத்துக்குத் தகாது—"

"ஓஹோ! தாருகா வனத்தவர்க்குத் தரும சாஸ்திரமுமுண்டோ? பெண்ணே ஊடாதே. எதற்கும் சமயாசமயமுண்டு—வா—"

"அட பாவி—விட்டுவிடடா—என்னைத் தொடாதே—தொடாதே—"

அவளது அலறலைக் கேட்டு, பட்சிகள் பயந்து கதறின; மிருகங்கள் மிரண்டோடின; காற்றும் அஞ்சி அலைந்தது. ஆனால், அவன் செவியில் எது ஏறும்? முகத்தில் வெறி நகைக்க, அவன் அவளைத் தொடர்ந்தான். அவளைத் துரத்தத் துரத்த, வேய்க்காடு, அவர்களைச் சுற்றி அடர்ந்தது.

காட்டின் மத்தியில் ஓங்கி வளர்ந்ததோர் ஆலமரத்தை நோக்கி அவள் ஓடினாள்.

ஒரு பக்கம் ஆத்திரம் பொங்கியெழுந்தது. அவனுடைய கால்கட்டை விரலின் அழுந்தலில், அஷ்ட குலாசலங்களும் குலையுமே! அவனுடைய ஆற்றொணா ஆற்றலைக் கேவலம் ஒரு பெண் குலைப்பதா?

ஓடும் வேகத்தில், அவளது ஆடை புதர்களில் சிக்குண்டு கிழிந்தது. அவளது வெண்தொடை பளீரென மின்னிற்று.

''ஆணை! ஆணை!!—நான் தொழும் தெய்வத்தின் மேல் ஆணை!—தொடாதே—ஐயோ!''

வேர் தடுக்கிற்று என்னத்தையோ அணைப்பது போன்று, கைகளை வீசி, குப்புற வீழ்ந்து மூர்ச்சையானாள். தூரத்திலிருந்து அவளை நெருங்குகையிலே, அம்மரத்தடியில் வீற்றிருக்கும் ஒரு மணல் லிங்கத்தை அவளுடைய கரங்கள் தழுவியிருப்பதைக் கண்டான்.

அவள் தொழும் தெய்வம்!

அவள் அதை அந்தரங்கத்துடன் நம்பிக் கதறிய அபயத்தின் வேகம், அவனது வேஷத்தை, அவனையறியாமலே உரித்துவிட்டது. அவன் வந்து அவளண்டை நின்றபொழுது, ஜடையும் கங்கையும் சூலமும், மானும் மழுவும், பாம்பும் தாங்கி, பரமசிவனாய் நின்றான். அவன் மனதில், ஆச்சரியம் வெட்கம், துயரம் இன்னும் பல்வேறு உணர்ச்சிகள் பொங்கியெழுந்தன.

அவன் அவளை அழித்தான்; நெற்றிக் கண்ணால் சுட்டு எரித்தான். வேறு வழியில்லை?

சர்வ ஜீவராசிகளும் வாழ்க்கையில் சறுக்கி விழுந்தும், தட்டுத்தடுமாறிச் சேரமுயலும் லட்சியத்தின் சிகரம் அவன், அந்த லட்சியத்தின் தோல்வியாய் அவன் இப்பொழுது நின்றான். ஆதலின், அந்த நினைவை அழிக்க, அவளை, அழிப்பது தவிர வேறு வழியேது? நெற்றிக் கண்ணைத் திறந்து அவளைச் சுட்டெரிந்தான்.

சகலமும் அவனுக்கு அடக்கம்; அவன் அவனது நெற்றிக் கண்ணுக்கு அடக்கம். தன்னுடன் சமரிட்ட மாறனை எரிக்கவோ, வாதில் வென்ற கீரனை ஒறுக்கவோ, தான் கட்டுக் கடங்காது தெறிக்க முயலும்பொழுது, அதை அழிக்கவோ

எதற்கும் திறப்பது அந்த நெற்றிக் கண்தான். அது, அவனுடைய தோல்வியற்ற வெற்றியின் சின்னம்.

ஆகையால், அவன் அவளைச் சுட்டெரித்தான்.

கல்லையே வெல்லப் பாகாய் உருக்கிய, அந்தக் கண்ணின் வீட்சண்யத்துக்கு, மாந்தளிர் போன்ற அவளது சரீரம் எம்மாத்திரம்? இமைப் பொழுதில் அவள் விழுந்த இடத்தில், ஒரு சாம்பற் குவியல் கிடந்தது. அதில் விழுந்து புரண்டு எழுந்தான் பெருமான். அவனுடைய கண்களினின்று, இரண்டு எரி நீர்த்துளிகள் கிளம்பி, கன்னத்தில் வழிந்து, முகவாய்க் கட்டையினின்று உதிர்ந்து, கீழே விழுந்து புகைந்து, தீ காட்டைப் பற்றியது.

ஸ்னானத்துக்குச் சென்ற மங்களமுகி வேய்ங்காட்டுத் தீயில் மறைந்தாள் என்று வதந்தி சொல்லிற்று.

* * *

**[பூர்வ கதையில், பகவானானவர், பவித்திரனான தம்மைப் பழித்துக்கொண்டு, ஆணவம் பிடித்தலையும் தாருகா வனத்து ரிஷிகளை, அவர்களுடைய மனைவிமாரின் கற்பையழித்துப் பங்கப் படுத்தி, அவர்களின் செருக்கை அடக்கி, பிறகு அவர்களை ஆட்கொண்டார். ஓம்......]**

□□□

# மாற்று

குவிந்த விரல்கள் வழியாக இழைகள் வழிந்தன. பாற் குடம் உடைந்தாற்போன்று சன்னதி முழுதும் பரவிய கோலத்தின் மையத்தில், தூய வெள்ளையில் அச்சிற்றுரு, ஒரு பிரும்மாண்டமான மலர் தளையவிழ்கையில் அதன் நடுமொட்டுப்போல் தோன்றிற்று. அங்கிருந்து நீண்டும் குறுகியும் இழைகள் பெருகி, பிசகாத வளைவுகளிலும் வட்டங்களிலும், நீள் கோடுகளிலும் வீசி, விசிறிப் படர்ந்து முடைந்து மேலும் மேலும் அடர்ந்தன. அத்தனை நெருக் கத்திலும் துளிக்கூடச் சிக்கலற்ற, தெளிவான அவற்றின் தனித்தனிக்கதிகளை வியந்து நின்றான். என் கோணங் களையும் சட்டங்களையும் கொண்டுகூட, இந்தக் கமான் களையும், சுழிகளையும், பாய்ச்சல்களையும், நுட்பமான சந்திப்புகளையும், பிரிவுகளையும் என்னால் அமைக்க முடியுமோ? இத்தனைக்கும் 'ப்ளான்கள்' தான் என் படிப்பு, என் பிழைப்பு.

அவள் நெஞ்சில் அக்கோடுகள் கீறுகையில் அவளையு மறியாது, கை நெஞ்சுக்குழியைத் தொட்டுக் கொண்டது. பீதி. இது கோலமல்ல; காடு. நள்ளிரவில் நிலவு நிழலில், இலைகளின் நெய்வில், விலங்குகளின் விழிகள். இலைமறை வில், இரையைச் சிந்திக்கும் குரூர விழிகள். என்ன சிந்திக் கின்றன? ஏன் சிந்திக்கின்றன? இந்த ராக்ஷஸக் காடு இப்படித் தன்னை கடை பரப்பி, தன்னைப் பார்ப்போரின் அந்தரங்கங்கள் தன் மேல் கவிழ, தான் மட்டும் தன் குடலில்

தன் ரகஸ்யத்தைப் பத்திரமாய் அடக்கிக் கொண்டு என்ன சிரிக்கிறது? நடுக்கடலில் விரித்த வலைபோல் இம்முடைய லுள், சிந்தனையின் உருக் கூட நழுவும் என்ன என்ன எண்ணங்கள், ஏக்கங்கள், சீறல்கள், சிக்கித் தவிக்கின்றன? சன்னதியில் விரித்த இவ்வலை, ஏதோ ஒரு வகையில் உள்ளிருக்கும் மூர்த்தத்தையும் தன்னுள் வலித்ததோ?

இருந்தாற்போலிருந்து பார்வையின் எதேச்சையில், இழைகளின் சேர்க்கையில் ஒரு முகம் புனைந்து, கோலத்தின் அடைப்பினுள் பிரிந்து தனித்தது. சுவரில் கறைச் சாந்தில், வானத்தில் முகிற் குழைவில், உருப்பிதுங்கல்போல் கண்ணுக்குப் பட்டதென்னவோ, கன்னங்களின் கோடும், மோவாயின் உருட்டும்தான். மற்றதை உணர்வின் அடிவாரத்தில் புழுங்கும் இஷ்டம் இட்டு நிரப்பி, முகம் அடையாளம் கொண்டதும், அடிவயிற்றில் கண்ட பொறி திரியாகி, 'சுர்ர்ர்'ரென்று நெஞ்சைத் துரத்தியடைந்து அங்கிருந்து பெரும் வீறலாய்க் கிளம்பிற்று.

"பா பூ!"

அலறியபின்தான் உணர்ந்தாள், தான் அலறியதை. நல்லவேளை; சன்னதியில் வேறு யாருமில்லை. முன்றானையை வாயில் திணித்துக் கொண்டாள். வெடிக்கவோ எரியவோ வழியடைத்துப் போன ஜ்வாலை, விழிவழி உடைந்து சரிந்தது.

> 'நீ இட்ட கோலத்தை அளிச்சு
> அதை உன் நெஞ்சுலே எழுதவே வாரான்
> இன்னோடு மாதம் அஞ்சுக்கு ரெண்டு
> மகிழ்வாயம்மா கையில் ஏந்தி'

அண்டை வீட்டு, எதிர்வீட்டுச் சிநேகிதிகள் காட்டினதால், அவர்கள் கூட்டாயத்தில் தானும் நீட்டிய கைமேல் மந்திரக்கோலை வைத்து, மைதீட்டிய விழிகள் அவள் முகத்தைக் கவ்வ, மருள் கண்ட 'சோசியக்காரி' சொன்ன சொல் பலித்த சுருக்கென்ன, பலித்த கனவு பொய்த்த சுருக்

கென்ன? 'பாபூ, நீ எப்படிடா சொல்லி வெச்சாப்போல கோலத்தை அழிச்சே? நீ உண்டாவதற்கு முன்னேயே அவள் சொன்னதைக் கேட்டிண்டிருந்தியோ? கோலத்தைக் கண்டாலே உனக்கு என்னடா பண்ணித்து? அது உன்னை என்ன சொல்லி அழைச்சுதுடா?'

கோலத்தைக் கண்டால் போதும், தவழ்ந்தோடி வந்து அதன்மேல் உருள்வான். தொப்பையில் கோலத்தின் பதிவைத் தொட்டுத் தொட்டுச் சிரிப்பான். 'பாபூ, பாபூ! நீ கோலத்தில் விளையாடி எங்களைக் கோலம் காட்டி, என் கண்ணே, கோலத்திலேயே மறைஞ்சுட்டியேடா!'

'ஷ்ஷ்—'

திடீரெனப் புரியாததோர் சீற்றம் அவளைப் பற்றிற்று. வெறியானாள். திடுதிடுவென ஓடிவந்து, காலால் கோலத்தைப் பரபரவெனத் தேய்த்தாள்.

'கோமதி! கோமதி!!'

ஆனால் அவளுக்கு எங்கிருந்தோ மிருகபலம் வந்து விட்டது. அவன் கட்டிலிருந்து திமிறினாள். வெட்கமும் கோபமும் அவனைப் பிடுங்கின. மூன்றாம்பேர் எதிரில் தன்னோடு மல்யுத்தம்.

'பளீர்!'

சன்னதி அதிர்ந்தது. துரிஞ்சல்கள் மிரண்டு பறந்தன. அவள் ஆவேசம் சட்டென அடங்கிற்று. விழிகள், திகைப்பில் மங்கின. கன்னத்தைத் தடவிக் கொண்டு அவள் அனாதையாய் நிற்பது கண்டு வயிறு ஒட்டிக் கொண்டது. அவன் கண்கள் துளும்பின.

'என்னை மன்னிச்சுடு!'

அங்கிருந்து பதில் ஏதுமில்லை.

ஏதேதோ சமாதானம் பேச எடுத்த வாயில் திடீரென வார்த்தைகள் மறந்து போயின; அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது.

அங்கு அவர்கள் மூவர் தவிர யாருமில்லை.

அமைதி தன் வெண் சிறகுகளை விரித்துக் கொண்டு இறங்கி மெத்தென்று அணைப்பதை உணர்ந்தான். வலியின் நெரிவுகள் கலைந்து இதவு கண்டு கோமதியின் முகம் குழந்தை முகம்போல் ஆவது கண்டான். இங்கு என்ன நேர்ந்து கொண்டிருக்கிறது?

கண்ணை கசக்கிக் கொண்டான்.

அங்கு அவர்கள் இருவர் தவிர யாருமில்லை.

கண்டதென்ன, கானல்நீரா?

காலடியில் பிரும்மாண்டமான கோலத்தின் மையத்தில் ஒரு மொட்டு, தன் புது மலர்ச்சியில் புன்னகை புரிந்தது.

* * *

அவர்கள் தங்கிய வீடு, சன்னதித் தெருவிலேயே. வாசற் குறட்டில் வீட்டுக்காரர் தேங்காய், வெற்றிலை, பழம், பூஜை சாமான்களைக் கடைபோட்டு உட்கார்ந்திருந்தார். அவன் குஞ்சுத் திண்ணையில் சாய்ந்திருந்தான்.

அங்கிருந்து சொர்க்கவாசல் வழி:

திருக்குளம்:

அதைச் சுற்றியோடிய மண்டபம்:

அடுத்து த்வஜஸ்தம்பம்:

நந்திதாண்டி உள்பிரகாரத்தின் வாசலளவுக்கு வாசலை அலங்கரித்த ப்ரபை பூரா மிதக்கும் அகற்சுடர்கள்—

அதற்கப்பால் பார்வை எட்டவில்லை. உள்ளூரிலிருந்தும் தங்களைப்போல் வெளியூரிலிருந்தும் வந்து வழிபடுவோரின் பரம்பரை பரம்பரையான முறையீடுகளின் மூட்டத்தில், கர்ப்பக்கிருஹத்தில் காலத்துக்கும் தேங்கிப்போன இருளோடு இருளாய்' இருளுக்குச் சாட்சியாய், கூழையாய். அங்கு ஏதோ குழம்பிற்று.

ரேழி விசுப்பலகையில், அரை மயக்கத்தில் கோமதி ஏதோ முனகுகிறாள். அவளறியாது மூச்சு தேம்புகிறது.

துக்கம் மறக்க வந்தோம். இடம் மாறினதால், துக்கம் மறக்க முடிந்ததோ? துக்கத்தினின்று தப்ப முடிந்ததோ? ஏன் முடியவில்லையென்று இப்போ தெரிகிறது. பெற்ற வயிறைத் துக்கம்பட்ட இடத்திலேயே விட்டுவர முடிந்ததோ?

இருந்தாற்போலிருந்து, கண்ட கனவின் மீட்சிபோல் மேலிமையுள், கோலத்தினின்று ஓர் உரு நிமிர்ந்தது. சின்னப் பொம்மையின் சிறுகூடு. உடுத்திய தூயவெள்ளையையோ டிழைந்த வெள்ளைத் தாழம்பு நிறம். கால், கை, நகங்கள், உதடு, செவிமடிகளின் ரோஜா இதழ்த் திட்டுகள் கவனத் தைப் பறித்தன. கன்னத்தின் பீங்கான் வழுவழுப்பின் கீழ், மாதுளை விதையுள் உறைந்த ரஸ ஓட்டம்போல் கமழும் ரத்த காந்தி. கழுத்தின் பால்வெளுப்பில் பின்னியோடும் பச்சை நரம்பு.

முகத்தில் புன்னகைகூட இல்லை; ஒரு அமானுஷ்யத் தெளிவு. என் பிம்பமே காணுவேன்போல் நெற்றியில் தனித் துலக்கம், என் ஏக்கத்தில், அப்பார்வை என்மேல் என்று நான் என்னை ஏமாற்றிக் கொள்ளலாமேயன்றி, உண்மை யில் அது எதிலுமே ஊன்றவில்லை. ஆகாசத்திற்கு விழுங்கல் உண்டு, பார்வையேது? பார்க்கப்போனால் நானே அவ்விழி களுள் புகுந்துவிட்டேனா?

உடல் புல்லரித்தது. இனம் தெரியாத வேட்கையில் இதயம் உரிந்தது.

மறுபடியும் காண்பேனா? நாளையும் இன்றுபோல் இருக்குமோ? அமைதியின் வெண் சிறகுகள் திரும்பவும் என் மேல் இறங்குமோ?

''இன்று நாங்கள் கோவிலில் ஒரு கோலத்தைப் பார்த் தோம்'' என்றான்.

''வேப்பிலைப் பாட்டியின் கோலங்கள் இந்த ஊரில் பார்க்க வேண்டிய காட்சிகளில் ஒன்றுன்னா! கோவில்; கோவிலில் கோலம்!''

மூச்சுத் திணறிற்று. ''பாட்டியா? நீங்கள் யாரையோ சொல்கிறீர்கள்!'' முட்ட முட்ட மதித்தாலும் முப்பத்தி அஞ்சுக்கு மேல் ஏறாது. பாட்டியாம்! சிறு கோபம் மூண்டது.

''ஸ்படிகமா இருக்காளே, அந்த அம்மாதானே?''

இந்த அடையாளத்தை அவனால் தப்ப முடியாது. தொண்டையில் அடைத்த எச்சிலை விழுங்கிக்கொண்டு, தலையை ஆட்டினான்.

''வேப்பிலைப் பாட்டியேதான். என் தகப்பனாரின் கணக்குப்படி ஆனிக்கு அறுபத்திமூணு பூர்த்தி?'

அந்த அதிர்ச்சியிலிருந்து தேற அவனுக்கு அவகாசம் கொடுக்கவோ, அல்லது தானே சிந்தனையில் ஆழ்ந்தத னாலோ, சற்றுநேரம் தாழ்த்தி வீட்டுக்காரர், ''வேப்பிலைப் பாட்டியும் இந்த ஸ்தல மகிமையில் சேர்ந்தவள்தான்'' என்றார்.

உள்ளே விசுப்பலகை நொடிக்கிறது. கோமதி எழுந்து உட்காருகிறாள்.

''ஏன், அந்தக் குடும்பமே இந்த ஊரின் பெருமை தான்.''

என் தகப்பனார் சொல்வார், ரங்கசாமி வாத்தியாரைத் தெரிந்தவர்கள், அவர்கள் வீட்டு வாசற்படித் தரை மண்ணைக் கிள்ளிக் கிள்ளி நெற்றியில் இட்டுக்கொண்டே தரை பள்ளமாய்ப் போயிற்று என்று. என் தகப்பனார் ஒரு கவி.

'இன்னிக்கு ஸ்பெஷல் க்ளாஸ் வெச்சேளா? இன் னிக்கு நீங்க முழுசா வீடு போய்ச் சேருவதைப் பார்த் துடறேன். இன்னி ராத்திரி மாமி மடிக்சுக் கொடுக்கிற

வெற்றிலையைக் கடிச்சு முழுங்க உமக்குப் பல்லிருக்கா, பார்த்துக்குவம் வோய்!'

என்று நேருக்கு நேர் ஹெட்மாஸ்டரிடமே துளிர் மீசையை முள்ளாய்த் திருகும் பின்பெஞ்சு மைனர்கள் எல்லார், ரங்க சாமி வாத்தியாரின் வகுப்பில் மகுடிப் பாம்பாய், வாயைப் பிளந்தபடிப் பாடம் கேட்டுக் கொண்டிருப்பார்கள்.

இத்தனைக்கும் அவர் எந்தப் பையனையும் தொட்டது கூட இல்லை. யார் உடலும் தன்மேல் பட்டால்கூட அவருக்குப் பிடிக்காது. கூட்டங்களை அறவே விலக்குவார். சுள்ளென்று ஒரு வார்த்தை அவர் வாயிலிருந்து வந்த தில்லை.

சுவாமி தரிசனம் பண்ணிவிட்டு—அர்த்தஜாம அடுக்கு தீபாராதனை பார்த்த பிறகுதான் ராச்சாப்பாடு—இந்த வழியாத்தான் வருவார்கள். முன்னாலே மாமா, அவர் நிழலை மிதிக்காமல், நிழலை ஒட்டினாற்போல், பின்னால் மாமி. இருசாரியிலும் திண்ணையில், குறட்டில், தெருவில் கயிற்றுக் கட்டிலில் பேசியபடி— காற்று வாங்குவோர்— சின்னவா பெரியவா அத்தனை பேரும் வாயடைச்சுப்போய் எழுந்து நிற்பார்கள். அதையும் அவர் கண்டுக்கமாட்டார். அவர் பார்வை நேர்ப் பார்வை; பாட்டை ராஜபாட்டை.

இப்பவும் கோவிலுக்குப் போறாளே, கை கோர்த்துண்டு போனால்தான் உலகத்தின் கவனம் ஒன்பதினாயிரம் 'காண்டில்பவர்' இவாள்மேல் விழும் என்று! நான் என்னவோ தேங்காய் பழம்தான் விற்கிறேன். ஆனால் இந்தத் தெருவரங்கில் நான் எத்தனையோ நாடகம் பார்த் தாச்சு. அக்ரமங்களைப் பார்த்துப் பார்த்தே மதில்மாதிரி சதையடைச்சுப்போன இந்தக் கண்ணோரத்தில் அத்தனை வருஷங்களுக்கடியில் எங்கோ ஒதுங்கி, மாமாவும், மாமியும் அர்த்த ஜாமத்திலிருந்து திரும்பிவரும் காட்சி, இப்போ நினைச்சுப் பார்த்தால் கூட குளுகுளுக்கிறது.

அப்படி ஒரு சக்தி அந்த மனுஷனிடம் இருந்ததென்று கேட்டால் இப்போக்கூட எனக்குச் சொல்ல வரல்லை. அது உடலோடு பிறந்த மகிமை. முக்திக்கு முன் இத்தனை என்று விதித்திருக்கும் பிறவிக் கணக்கைக் கழிச்சு எடுத்த ஒரு ஜனிப்பு.

இதுகூட என் தந்தையின் பாஷைதான்.

'ரங்கசாமி வாத்தியார் ஒரு மகாபுருஷன்' என்று சொல்லிவிட்டு உடனேயே என் தகப்பனார், 'புருஷன்' என்கிற பதத்திற்கு முப்பது-பிரிவினை, ஒவ்வொன்றிற்கும் தனித்தனியாகப் பதினெட்டு பொருள்கள், சில சந்தர்ப்பங்கள், சான்றுகள் காட்டி மகிழ்வார். என் தகப்பனார் தமிழ் வாத்தியார் மட்டுமல்ல; சமஸ்கிருத பண்டிதர்கூட.

'ஸாரு'ம் மாமியும் எப்போது இந்த ஊருக்கு வந்தார்கள். போயும் போயும் இங்கு தானா வரணும்? அவருடைய மேதைக்கு இன்னும் எவ்வளவோ பதவியில் அவர் இருக்கலாமே?

எங்களுக்குள்ளேயே இந்தக் குமைச்சல்களுக்குப் பதில் கிட்டியதேயில்லை. 'ஸாரை'க் கேட்க யாருக்குத் தைரியம்?

ஒரு தடவைகூட தபால்காரன் அவர் வாசற்படியை மிதித்ததில்லை மாமியோ மாமாவோ சேர்ந்தோ தனியாவோ விடுமுறையென்றோ விசேஷமென்றோ ஊரை விட்டுப் போனதில்லை. மாமிக்கும் மாமாவுக்கும் உற்றார், உறவினர், மாற்றுமுகம், எல்லாம்—தங்களுக்குத் தாங்களே; ஒருவருக்கொருவர் சிறைப்படவுமில்லை.

எனக்கும் உனக்கும்
நமது நமது என
எதை
எனக்கு எனக்கெனக் கொண்டோமே
ஆனாலும்
உன்னிலும் என்னிலும்
உன்னையும் என்னையும்

இன்றி
கண்டது பின்னையும் என்?
கண்டதும் வேண்டாம்
கொண்டதும் வேண்டாம்
உன்னையும் என்னையும்
நம்மிலிருந்து
நான் நான் எனது என
விண்டதும் வேண்டாம்

எங்கு படித்தேன்? ஆ, நினைவு வருகிறது! என் தகப்பனார் இறந்தபின் அவர் சொந்தங்களைக் கிளறுகையில் கிடைத்த ஒரு குறிப்பு.

"தன் குழந்தைகளை இங்குதான் மாமி பெற்றாள். இந்த் வீட்டில், இந்த ஒடுங்கை யறையில்" என் தாய்தான் துணை.

முதலில் பெண். ஐந்து வருடங்களுக்கப்புறம் ஒரு பிள்ளை. கச்சிதம்.

'வாத்தியார் பிள்ளை மக்கு' என்று பெரியவாள் வாக்கு பொய்க்க, ரங்கசாமி வாத்தியார் மகன்; வீணா காமல் இருக்க, என் மகன்' என்பார் என் தகப்பனார்.

தகப்பன் மகனை மெச்சமாட்டான்.

நானும் மெச்சும்படியாயில்லை.

குற்றம் யாருடையதோ?

வருடா வருடம் வகுப்பின் பரிசுகள் ரங்கசாமி வாத்தி யார் பையனுக்கே சாஸனமாகி விட்டாற்போல், அவனையே போய்ச் சேரும். பையன் படிப்பில்தான் முதல் என்றால் விளையாட்டிலுமா அப்படி? நியாயத்திலும் அக்ரமம் என்றால் அதுதான்!

பதினாலு வயதில் பையன் மெட்ரிகுலேஷனில் பள்ளிக் கூடத்திற்கு பெருமையோடு தேறினான். பயல் மிட்டா யாட்டம் இருப்பான், சின்னதாய். ஆகிருதியில்லை. சிரமப் பட்டுத்தான், வயதுக்கு விலக்கு வாங்கி, காலேஜில் சேர்க்க

முடிந்தது. அப்போ நான் எட்டாவது வகுப்பில் தோப்புக் கரணம் போட்டுக் கொண்டிருந்தேன்.

ஆசைக்கு ஒரு பெண்; ஆஸ்திக்கொரு பிள்ளை.

ஒரு சமயம் பாடம் கேட்க நாங்கள் நாலைந்து பையன்கள் 'ஸார்' வீட்டுக்குப் போயிருந்தோம். ஆஸ்தியைப்பற்றி ஏதோ பேச்சு வந்தது. அவருடைய கள்ளப் புன்னகையில் ஒளி வீசிற்று. யாவும் கடந்த சிரிப்பும் கள்ளச் சிரிப்புத்தான்.

'என் ஆஸ்தியெல்லாம் என் குருவின் அருளில் என் சக்திக்கெட்டிய அளவுக்கு எனக்குக் கிட்டி நான் சொல்லிக் கொடுக்கும் இந்தப் படிப்புத்தான். இது என் பிள்ளைக்கு மாத்திரமல்ல; எல்லோருக்கும் பொதுச்சொத்து. பற்றிக் கொள்வது அவனவன் சமர்த்து. நேரமில்லை; ஆகையால் சுருக்க! சுருக்க!''

என்ன 'சுருக்க?' ஏன் 'சுருக்க?'

யார் கேட்பது?

ஸாரிடம் ஒரு விசேஷம். அவர் வகுப்பில் பையன்களின் கேள்விகள் இராது. அவர் பாடம் சொல்லிக்கொண்டே வருகையில், கயிற்று நுனியைத் தெரிந்தவன் பிடித்து இழுத்தால் அவிழும் முடிச்சுகள்போல் சந்தேகங்கள் தாமே தெளிந்துவிடும் அப்படியும் மீறி ஏதாவது கேட்டால் ''உனக்கு இப்போதைக்கு அது தெரியவேண்டிய அவசியமில்லை?'' என்று சொல்லிவிடுவார். அப்படியும் மடக்கினால் ஊமையாகி விடுவார்; முகம் ஒரு தினுசாய், கல்லாய் இறுகிவிடும். அவரைக் கேள்வி கேட்க மனம் அஞ்சும்.

என்னது 'சுருக்க?'

யார் கேட்பது?

இப்போ தெரிகிறது. கேள்விக்குப் பதில் அவர் புன்னகையில் எங்கள் கண்ணெதிரேயே ஒளிந்துகொண்டிருந்தது.

ஒருநாள் வகுப்பில் பாடம் நடந்துகொண்டிருக்கிறது. என் தகப்பனார் அன்று லீவு. அவர் க்ளாஸை ரங்கசாமி வாத்தியார் எடுத்துக் கொண்டிருந்தார்.

அயோத்யா காண்டம். ராமன் வனம் புகும் கட்டம் மகன் காட்டுக்குப் போயே விட்டான் என்ற சேதி கேட்டதும் தசரதன்—ஸார், கைகளை விரித்தபடி நாற்காலியி லிருந்து எழுந்துவிட்டார்—'ராமா! ராமா! ராமா!'

அவ்வளவுதான்.

பஸ்மம் குமுங்கினாற்போல் எங்கள் கண்ணெதிரே குன்றிப்போய், குறுகி மேஜைமீது குப்புறக் கவிழ்ந்து விட்டார். அவரிடமிருந்து எங்களையும் ஊடுருவிய பரவசத் தில் உணர்ச்சி வேகம் என்று நினைத்தோம். சற்று நேரம் பொறுத்து நான்தான் எழுந்து கிட்டப்போய், 'ஸார், ஸார்' என்று மெதுவாய்க் கூப்பிட்டேன். பதில் இல்லை. தொட்டுப் புரட்டினேன். முகம் துவண்டு சாய்ந்தது. கடைவாயில் எச்சில் வழிந்தது. கண், கண்ணாடியாகிவிட்டது.

மாமி தைரியமாயிருந்தாள் என்றுதான் சொல்ல வேணும்.

தான் கலங்கினால், குழந்தைகள் இடிந்துவிடுமோ எனும் பயம்.

கல்யாணத்துக்குப் பெண் காத்திருக்கிறாள்.

காலேஜில் பையன் படிக்கிறான்.

வளரும் பயிர்கள்.

தன் துயரத்தை மூட்டை கட்டி—இல்லை, அப்படியே விழுங்கிவிட்டு இனி வேண்டியதைக் கவனிக்க ஆரம்பித்தாள். அசல் வீட்டு, எதிர்வீட்டுப் பெண்டிர், ஏன், என்னோடுகூட பேசாத மாமி என்னைக் கூப்பிட்டு, என் தகப்பனாரை அழைத்துவரச் சொன்னாள். இருப்பதற்குள் என் தகப்ப னார் தான் அவள் கணவருக்கு நெருங்கியவர். மாமி அப்பா வுக்குப் பெண்ணாயிருக்க முடியும். சன்னதியிலிட்ட திரை பின்னிருந்து வரும் அசரீரிபோல், கதவின் பின்னிருந்து கேட்கும் மாமியின் அமைதியான குரலும், அனுமார் போல்

கைகட்டி அங்கங்கள் அனைத்தும் செவியாய்மாறி அப்பா நிற்பதும்—பார்த்தால்தான் உணரமுடியும்.

என் கேளாத கேள்விக்குப் பதில்போல்,

அக்ஷதையை என்மேல் தெளித்து தனக்கும் போட்டுக் கொள்வதுபோல் ''வாத்தியார் பத்னிடா'' என்று சொன்னதையே சொல்லிக்கொண்டிருப்பார்.

மாமா போனபின் மாமி கோவிலுக்குப் போவதில்லை. அவளை வீடு விழுங்கிவிட்டதோ என ஐயுறும்படி, வாசலில் கூடத் தென்படுவதில்லை. அவள் முகம்கூடச் சிலருக்கு மறந்து போயிருக்கும் என்றால் மிகையில்லை. காரணமாய் காரியமாய், கேட்க வேண்டியவர்களுக்கு மட்டும் குரல் கேட்கும். அவர்களுக்கு மாமி இன்னும் இருக்கிறாள் என்று தெரியும்.

வாசலில் சாணி தெளித்ததெப்போ?

கோலமிட்டதெப்போ?

யாரும் அறியமாட்டார். ஆனால் கோலத்தைப் பார்த்தவர்கள் யாரும் அங்கு ஒரு நிமிஷம் நின்று பார்த்துவிட்டுத் தான் நடப்பார்கள். ஒருநாள் போல் மறுநாள் இருக்காது.

சில விஷயங்களில் வருஷங்கள் கழிவது தெரிவதில்லை. அடிநாக்கில் ஊறுகாய் வண்டலை வைத்து இழுத்தாற் போல், ஏதோ ஒரு அடையாளம், அற்ப சம்பவத்தில், திடீரென்று ஒருநாள், ''சுறீல்'' என்று உறைக்கிறது.

அதுமாதிரி, மாமி வாசலில் கோலம் திடீரென ஒருநாள் பெரிதாகி, தெருவையடைத்து, அதில் செம்மண் பளிச் சென்றது.

''அங்கச்சிப் பாப்பாடா! கடிக்காதே!'' என்று சொல்லி வேப்பிலை மாமி என் வாயுள் திணித்த கற்கண்டை அடக்கியபடியே, நேற்றிரவு படுத்து, மறந்து, உறங்கிப் போய், இன்று காலை நாக்கில் தித்திப்புடனேயே எழுந்த மாதிரி இருக்கிறது.

அதுக்குள்ளேயா? அபிதாவுக்கா?

பையன் இந்த ஊர்ப் பையன்தான். எங்களுக்குத் தெரிந்த பையன்தான். எட்டிய உறவுகூட. கொஞ்சம் பசையுள்ள இடம்தான். என் தகப்பனாரின் சிரத்தையில் கைகூடிய சம்பந்தம். அம்மாவுக்கும் அப்பாவுக்கும் இதனால் வாக்குவாதம் கூட.

''நான் நாலுபேர் மாதிரி காசுக்கும் சீருக்கும் ஆசைப் படறேனா?''

''ஏன், ஆசைப்பட்டுத்தான் பாரேன்!''

''இந்த வீட்டில் பிறந்த அந்தப் பெண், இந்த வீட்டை மிதிச்சால் ஆகாதா? ''ஓஹோ''ன்னு வாயைப் பிளக்க இல்லாவிட்டாலும் ''ஊஹூம்''னு உதட்டைப் பிளக்க இல்லாமல், வேப்பிலை உள்ளத்துக்கு வஞ்சனை பண்ண மாட்டாள். நமக்கு ஒண்ணு இருக்கே. உங்களுக்குக் கண் அவிஞ்சு போச்சா? அவனைக் கண்டாலே உங்களுக்கு இப்படி வேரோடு வேகணுமா? வேகணுமான்னு கேக்கறேன்?''

''குந்தளம், சும்மா அடுக்கிண்டே போகாதேடீ! தாய்ப் பாசம் உனக்குத் தான் கண்ணை மறைக்கிறது. எத்தோடு எது பொருந்தும் என்கிற பகுத்தறிவு நம்மைவிட்டு ஓடிப் போய்விடக் கூடாதடீ! நாளை நான் உலகத்துக்கு ஜவாப் சொல்லியாகணும். நம் பிள்ளையைப் பற்றிய நம் சண்டை இன்றையச் சண்டையா, நேற்றையச் சண்டையா? கலியாண சமயம். நாம் விரதம் பண்ணி தாரை வார்த்துக் கொடுக்கும்வரை ஒற்றுமையாயிருப்போம். கையைப் பிடித்துக் கொடுத்து, கோத்திரத்தை மாற்றும்வரைதான் வரம் கேட்கிறேன். பிறகு நான் தேவையில்லை. அப்புறம் அப்பளாத்துடன் சேர்த்து என்னையும் நீ பொரிக்கலாம்!''

என் தகப்பனார் இருக்காரே-இல்லை இருந்தாரே, அவர் மஹா மஹா-என்ன சொல்வது? தெரியவில்லை. நாக்கு தோற்றுப் போச்சு, அப்படியே விட்டுவிடுகிறேன்.

அம்மா சொன்னது போல், குடும்பத்தை வாயையும் வயிற்றையும் இழுத்துக்கட்டி நடத்தியது போக, மாமாவின் இன்ஷூரன்ஸ், சம்பளப் பிடிப்பில் மிச்சத்துடன் தன் காது, மூக்கு, கழுத்தில் இருந்ததையும் கழற்றி அதுவரை பெட்டியில் வைத்திருந்ததைப் பெண்ணுக்குப் பூட்டி, கையில் இருந்த பண்டம் பாத்திரங்களைப் புதிசு பண்ணி இட்டு நிரப்பினாள், மாமி. போதும் போதாதற்கும், சரீர உபகாரத்திற்கும் 'நான், நீ' என்று ரங்கசாமி வாத்தியாரின் பழைய மாணவர்கள் முந்திக் கொண்டனர்.

எல்லாம் இருப்பவர்களுக்குக் குறைவில்லாமல், கலியாணம் செவ்வையாகத்தான் நடந்தது.

பொலபொலவெனப் புலரும் தருணம்

கொட்டு மேளம் கொட்டி முழங்குகையில்

பந்தலுள் வாசலையடைந்த பெண்கள் கூட்டத்தில்

புதுப் புடைவைகளின்

புசுபுசுவிலிருந்து

ஒரு ஒளி பிரிந்து

படியெதிரில் நின்ற பரதேசி கைபிடித்து

ஓரங்கள் முள்கூராய்

இழுத்து மை தீட்டிய

இரு விழிகள்

ஒருதரம், ஒரே தரம்

கைப்பிடித்தவனை மலர விழித்து

உடனே தாழ்ந்து

அ பி தா வாய்

அமைந்ததும் எனக்கு அடிவயிறு 'திக்' கென்றது.

அது அபிதா தானே? தரிசனமா?

எனக்கே தெரிந்தது. இது எனக்கு எட்டாத கனவு.

இப்போ புரிந்தது. என் தகப்பனார் மஹா விவேகி.

இப்பவும் மாமி கண்ணில் படவில்லை.

மாமியின் வேலையே, முழுக் கவலையே சோடையே இல்லாமல் தன்னைத் துடைத்துக் கொள்வதுதானா?

''வேப்பிலை எங்கேடி? பெண்ணும் பிள்ளையும் சேர்ந்து மணையில் பார்க்க வேண்டாமா? இந்தச் சமயத்துக்கு எத்தனை நாளாய்க் காத்திருப்பாள்?''

அம்மாவுக்குக் குரல் கம்மிற்று.

''வேப்பிலை மாமி கோவிலுக்குப் போயிருக்கா!''—ஒரு வாண்டு கீச்சுக் குரலில் கத்திற்று.

மாமா போனபிறகு இன்றுதான் மாமி கோவிலுக்குள் காலை வைத்திருக்கிறாள்—அம்பாளுக்கு நன்றி செலுத்த.

கோவிலுக்குப் போகாவிட்டாலும் மாமி மனசு எங்கே என்று தெரிகிறதா?

பெண்ணும் மாப்பிள்ளையும் கூடத் தவறாமல் கோவிலுக்குப் போவார்கள். நான் கடையில் உட்கார்ந்திருப்பேன்.

அவர்களிடையே தங்களை மறந்த ரகஸ்யம் அப்படி என்ன ஓயாமல் இருக்கும்? அவள் பக்கமாய் அவன் தலை சற்றுச் சாய்ந்திருக்கும். அவனை அண்ணாந்து பார்த்து மலர்ந்த அவள் முகத்தில், மணிக்கூண்டில் ஒளிக்கதிர் போன்று திடீர் திடீர் என உவகை பொங்கி மங்கும். பீறிடும் சிரிப்பை அடக்க இரு கைகளாலும் வாயைப் பொத்திக் கொள்வாள். கை மறைவினின்று கண்கள் பளபளவென எட்டிப்பார்க்கும். நெற்றிக் குங்குமம் கண்போல் உயிர்வீசும் அவர்களையறியாமலே தோளோடு தோள் இடிக்கும்.

இது விளம்பரமல்ல.

இடமும் வேளையும் பொருந்தி, பருவம் கண்ட நிறைவு, நியாயமாய், தைரியமாய், தாராளமான அளவில் பாத்திரம் மீறி வழியும் இளமையின் இயல்பு.

அப்போ நான் மாத்திரம் கிழவனா? இல்லை. வாசற் குறட்டில் தேங்காய் பழம் விற்றுக் கொண்டிருக்கிறேன்;

உலகத்தின் நடைப்பாதையில் உட்கார்ந்து—நின்று—உலகத்தின் நடப்பைக் கவனித்துக் கொண்டிருக்கிறேன். நான் கிழவனா? குமரனா?

கிழவன் தேவலை.

எனக்கு அப்பவே தோன்றும். தங்களிடம் இல்லாத எதைத்தேடி இவர்கள் கோவிலுக்குப் போகிறார்கள்? குறை பட்டவர்களுக்குத்தானே கோவில்?

பிறகு சேர்ந்தாற்போல் ஒரு வாரம் அவர்களை காணோம்.

வேளையே வெறிச்சிட்டது.

பிறகு ஒரு நாள் வீட்டுக்குள்ளிருந்து வெளி வருகையில் கடையண்டை நின்று அவள் மாத்திரம் அப்பாவுடன் பேசிக் கொண்டிருந்தாள். முகத்தில் கவலை தோய்ந்திருந்தது. அப்பா ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்தார்.

"ஒண்ணும் நேராது, கவலைப்படாதே, அம்மா. மனிதன் என்று பிறந்தால் ஜுரம், தலைவலி, நோய் நொடி கண்டு தெளிந்து எழுந்திருப்பது எல்லாம் சகஜம்தானே? நம்மை இரும்பாலா அடித்துப் போட்டிருக்கிறது? கவலைப் படாதே, ஒண்ணும் நேர்ந்துவிடாது"

இதைக் கவனித்திருக்கிறீர்களா?

ஒவ்வொருவரின் சிறப்பு அல்லது அழகு ஒரு குறித்த சூழ்நிலையில்தான் பரிணமிக்கிறது. ஒரு ஒரு முகம் கோபத்தில் சுறுசுறுக்கிறது. சில முகங்கள் பயத்தில் களை கட்டுகின்றன. அபிதா அப்போது கையைப் பிசைந்துகொண்டு நிற்கையில் அவள் முகம், தோற்றம் முழுதிலுமே அமானுஷ்ய அழகு பொலிந்தது. ஆகையால் எந்த நிலையில் ஒரு அழகு பரிமளிக்கிறதோ அதே சூழ்நிலையில் அந்த அழகைக் கண்டுகொண்டிருக்க விரும்பும் எண்ணம் நல்லதா, கெட்டதா? ரஸிகத் தன்மையின் விபரீதமா? அல்ல, உண்மையே அப்படித்தானா? நீங்கள் தான் சொல்ல வேணும்.

திடீரென அபிதா என் அப்பா காலில் விழுந்து எழுந் தாள்.

"இப்போ நான் வாழ்வது நீங்கள் கொடுத்த வாழ்க்கை. அதை நான் காப்பாற்றிக் கொள்ள வேணும். ஆகையால் தேங்காயின் மூணு கண்ணும் முழுசாப் பார்த்துக் கொடுங்கள்"

தட்டை ஏந்தி, அம்பாளிடம் தன் பங்கு நியாயத்தைக் கேட்டு வாங்கிக் கொள்ளும் தீர்மானத்துடன், விர்ரென்று அவள் நடந்து செல்கையில்—வருணஜபத்திற்கு இலையில் அரிசியைப் பரப்பி, அதன் மேல் வைத்த தண்ணீர்க் குடத் தினின்று விசிறி உழும் மாவிலைக் கொத்துப்போல், பச்சைப் பசேலெனத் துல்லியமான ஒரு விறு விறுப்பு அவளிடம் மிளிர்ந்தது. முகத்தில் தனிக்களையும், மேனி மினுமினுப் பும்—

மறுபடியும் அதே, அர்த்தமற்ற பிதற்றலாய்ச் சந்தேகம் என்னுள் எழுந்தது; அபிதா என்கிறவளே நிஜம்தானா? அல்லது ஒரு தோற்றமா?

அப்புறம் ஒரு நாள் மாமி என் வீட்டுக்கு வந்திருந்தாள். நான் தேங்காய் பிடிக்கப் பக்கத்தூர்ச் சந்தைக்குக் கிளம்பிக் கொண்டிருந்தேன்.

அம்மாவின் இரு கைகளையும் பிடித்துக் கொண்டு, "நீங்கள் தான் வரணும். எல்லாம் உங்கள் கைராசி. ஆசீர் வாதமாய்த்தான் இருக்கணும். அபிதாவை எடுத்துக் கொடுத்த உங்கள் கையேதான் அபிதாவுக்கும் பிள்ளைப் பேறு பண்ணிக் கொடுக்கணும்" என்றாள் மாமி.

ஓ!

சந்தை பூராச் சுற்றியும், தேங்காய் விலை தகைய வில்லை. நேரமானதுதான் மிச்சம். வெறுங்கையோடு திரும்பினேன்.

தெருவின் திருப்பத்திலேயே. ஒரு பயங்கரமான கூச்ச லில் தெருவே கிடுகிடுத்தது. வேப்பிலை மாமியை எட்டுப்

பேர் கட்டிப் பிடிக்கிறார்கள். சமாளிக்க முடியவில்லை. எனக்கு அடிவயிற்றை திருகிற்று. கைகால்கள் வெல வெலத்தன. அங்கே ஒரு வீட்டுச் சுவர் மேல் சாய்ந்து கொண்டேன். இல்லாவிடில் விழுந்திருப்பேன்.

என்னை கண்டதும் அம்மா லொங்கு லொங்கென்று ஓடி வந்தாள்.

''அபிதா வாயில் மண்ணைப் போட்டுட்டாடா!''

நான் அந்த வீட்டுப் பக்கமே போகவில்லை. நான் பயந்தாங்கொள்ளிதான்; ஒப்புக்கொள்கிறேன். ஆனால் காட்டுத் தீயைக் குடத்து நீரால் அணைக்க முடியாது என்பதும் எனக்குத் தெரியும். அதை நீங்கள் ஒப்புக் கொள்ளுங்கள்.

மாமி அபிதாவை அணைத்துக்கொண்டு அவளைத் தூக் கவே விடவில்லையாம். அதனால் மாமியை அபிதாவிட மிருந்து பிரித்து, அறையுள் தள்ளிப் பூட்டிவிட்டார்கள்.

நான் ராப்பூராத் தூங்கவில்லை. மாமி கதவை ஆட்டி உடைக்கும் சப்தம் என் மார்பில் சுத்திபோல் இடிக்கிறது. வாத்தியார் வீடு எங்கள் வீட்டுப் பின்புறத்துத் தெருவில் தான். ஒரு மாதமாகியும் நான் அங்கே போகவில்லை.

ஒரு நாள் மாலை, 'நான் எங்கோ போய்க்கொண்டிருக் கையில் மாமி எதிர்ப்பட்டாள். மாமிதானா அது? முதலில் பெண் சொரூபந்தானா அது?

எலும்புக் கூடாய்த் தேய்ந்துபோய்; நெற்றிப் பொட்டும் கண்ணும் கன்னமும் குழி விழுந்து-இல்லை, குகை விழுந்து-மூக்கு கழுகாய் நீண்டு, தலை சடைபிடித்து, உடலில் துணி போன இடம் தெரியாமல்...

என்னைக் கண்டதும் அது, மடியுள் எதையோ இழுத்து மறைத்துக் கொண்டது. குண்டக்கனல்போல் கண் குழிகள் காங்கை வீசின.

''ஏண்டாப்பா?'' —தொண்டையில் எட்டுக் குரல்கள் நொறுங்கின.

''ஏண்டாப்பா, தமிழ்ப்பண்டிதர் வீடு இங்கேதான் எங்கோவாமே? எங்கேடாப்பா இருக்கு?''

எனக்குக் குடலைக் குழப்பிற்று.

''என்ன மாமி, என்னைத் தெரியல்லியா?''

''இல்லையேடாப்பா! தமிழ்பண்டிதராத்துக்கு வழி செல்லேன்!''

''என்னோடு வாங்கோ! நானே அழைச்சுண்டு போறேன்!''

அது கொஞ்சம் எட்ட நகர்ந்துகொண்டது. முகத்தில் தனிக் கபடு வீசிற்று.

''முன்னாலே நீ நட, நான் பின்னாலே வரேன்!''

அப்பா வாசலில் நின்றிருந்தார். எங்களைக் கண்டதும் அவர் முகம் மாறிற்று.

''என்னப்பா, மாமி இப்படி ஆயிட்டா?''

எனக்கு அழுகை வந்துவிட்டது.

அது அப்பாவை நெருங்கி—சந்தையில் மாட்டை நோட்டம் பார்ப்பது போல்—சுற்றி வந்தது. அப்பாவுக்கும் கண் துளும்பிற்று.

''ஆமா, நீயேதான்! ஏண்டா, நீதானேடா என் குழந்தையைக் கைப்பிடிச்சு தாரை வார்த்துக் கொடுத்தது?''

''நான் மஹா—ஆ—ஆ—பா—வி'' — அப்பா விக்கி விக்கி அழுதார்.

''நம்பினவரை மோசம் பண்ணினவன் நீதானே?'' குரல் கிறீச்சிட்டு, உச்சத்தில் உடைந்து, கண்ணாடிச் சுக்கலாய் உதிர்ந்தது. ''என் குழந்தையை எமனுக்குத் தாரை வார்த்துக் கொடுத்த கை இதுதானே?''

வீசிய வேகத்தில் அரிவாள்மணை உள்ளே, ரேழியில் போய் விழுந்தது.

''அம்மா! அம்மா! எங்கே போயிட்டே அம்மா?''—மாமியின் பையன் தேடிக்கொண்டு வந்துவிட்டான்.

''தூ!''

''அம்மா! அம்மா!''—பையனின் விழிகள் திகிலில் சுழன்றன.

அப்பா ஒரு கையால் தோளைப் பிடித்துக்கொண்டு நின்றார்.

உதிரம் நூல் பிரிந்து தரையில் சொட்டிற்று.

* * *

''மாது, அத்திம்பேராத்தில், இந்த ஏனத்தைக் கொடுத்துட்டு வாயேன்!''

''என்னம்மா அது?''

''பருப்பு உருண்டை ரஸம்டா! அபிதாவுக்கு உசிராச்சே! பிள்ளைத்தாச்சி வாய்க்கு வேணுங்கறதை இப்போத்தான் சாப்பிடலாம். பாவம், மசக்கை வேறே குழந்தையைப் பாடாப் படுத்தறது''—

''அம்மா!''

''என் கண்ணோன்னோ! பெரிய மனசு பண்ணி சித்தே போயிட்டு வாடா! பாடம், படிப்புன்னு சாக்குப் போக்குச் சொல்லாதே. சூடாறிப்போறது!''

மாது பக்கென்று இளைத்துவிட்டான். மாமி நிலை பெரியவாளாலேயே சமாளிக்க முடியாது. குழந்தை அவன், என்ன பண்ணுவான்? ஒருநாள் போல் நாய்மாதிரி அம்மாவைக் கட்டிப் போடுவதா?

பாடம் படிப்பானா?

சமைத்துப் போடுவானா?

அக்கா போனதுக்கு அழுவானா?

அம்மா இப்படி ஆனதுக்கு அழுவானா?

பரீட்சை பாட்டுக்கு இரக்கமற்று நெருங்கிக் கொண்டிருக்கிறது?

காலேஜிலிருந்து—அங்கு மட்டும் வீட்டை நினைத்துக் கொண்டே பாடம் ஏறுமா?

சாப்பிட்டாளோ இல்லையோ?

குழந்தைபோல் அவளுக்கு அவன் வாயில் சோற்றை ஊட்டியதை பார்த்து—பார்க்க முடியாமல்—ஒரு சமயம் நான்—நான் வந்தது தெரியாமல், திரும்பி வந்திருக்கிறேன். தாய்க்கும் பிள்ளைக்கும் தனியான அப்புனித சமயங்களில் நாய்போல் புக நான் யார்?

காலேஜிலிருந்து வீடு திரும்பி வந்தால் அம்மா வீட்டிலிருப்பாள் என்பது என்ன நிச்சயம்? எங்கேயாவது அலைந்து கொண்டிருப்பாள். வீட்டில் போட்டது போட்டபடி.

கதவு திறந்தது திறந்தபடி.

அவனும் அப்படியே தேடக் கிளம்பிவிடுவான்;

அப்படியே தேடிக் கண்டுபிடித்தாலும் லேசில் திரும்பி வருவாளா?

"அம்மா!—"

"இருடா!—" பிள்ளை கையை உதறுவாள்—" அவளும் வரட்டும்."

"அம்மா!"

"அபிதாவும் வரட்டும், சேர்ந்து போகலாம்."

"அபிதா வரமாட்டாம்மா!"

"ஏன் வரமாட்டா? இந்த வழியாத்தானே தூக்கிண்டு போனா?" —மாரே வெடித்து விடும்போல் பையன் அழுவான்.

"அடசீ, அசடே! ஏண்டா அழறே? அவளும் வருவாடா. சேர்ந்து போவோம்!"

ஒரோரு சமயம் இந்த வாசலெதிரே, சன்னிதியைப் பார்த்தபடி, மறந்தது எதையோ நினைவுகூட்டிக்கொள்வது போல், நெற்றியைச் சொரிந்துகொண்டு மாமி நிற்கையில் எனக்குத் தோன்றும்.

எந்தக் கொடுமை பெ ‌து? இவள் இப்படியே மூளை கலங்கி இருப்பதா? நினைவு மீள்வதா?

இவள் இப்படியே போய்விட்டால் எவ்வளவு நல்லது?

இவளுடைய கடவுள், இவள் பிடித்திருந்த காலாலேயே இவளை எட்டி உதைத்தாயிற்று. இவள் ஏன் இன்னும் இருக்கணும்?

அவனே இருக்கிறானோ? இருந்தால், இப்படி எட்டி உதைப்பதால்தான் இருக்கிறானோ?

வேறே இங்கு என்ன இருக்கிறது?

கோவில் இருக்கிறது.

கோவிலுக்கு வருவோரும் போவோரும் இருக்கின்றனர். அப்புறம் தேங்காய், பழம், வெற்றிலை, கற்பூரம் இருக்கின்றன. [இலக்கணம் நாசமாய்ப் போக!]

நம்பினவாளுக்கு நடராஜா.

வேப்பிலை மாமி, ரங்கசாமி வாத்தியார், அபிதா, எல்லோரும் நம்பினவர்கள்தான். ஆனால் அவர்கள் கண்டது எமராஜா.

எமராஜா தான் நிஜ ராஜா.

''அம்மம்மா கண்டெடுத்தேன்,
அப்பப்பா காணோமே!
எல்லாம் காக்கா ஊஷ்!''

அப்படியானால் நீ நாஸ்திகனா? என்று கேட்காதேயும்.

ஐயையோ இந்தக் கோவில் இல்லாட்டி என் கதி என்னாச்சு? என் குடும்பம் பிழைப்பதெப்படி?

இந்த ஊர்லே என்ன இப்படி நாயும் நரியும் ஓடறதேன்னு பார்க்காதேயும். இது பாடல் பெற்ற ஸ்தலம் ஓய்! நாலு பேரும் பாடியிருக்கா ஓய்! ஒரு தை வெள்ளி, ஒரு ஆடி வெள்ளி, ஒரு கிருத்திகை, ஒரு அமாவாசை, இந்த வாசற்குறடு உள்ளே முற்றம்வரை இருநூறு சைக்கிளுக்குக் குறையாமல் நிற்கும். அத்தனையும் அடியார்கள்.

சைக்கிளுக்கு நிறுத்துக் கூலி ஒரு அணா மேனிக்கு ஒரு கிழமைக்கு என்ன ஆச்சு? இது தவிர பூஜை சாமான் விற்பனை, ஒரு ஒரு விசேஷ தினத்துக்கும் ஐந்நூறு தேங்காய் செலவழியும். அது வேறே என்னாச்சு?

மலிவு டயம் பார்த்து வாங்கி மட்டையை உரிக்காமல் போட்டு வெச்சா, சமயத்தில் ஒரு வாரு வாரித்துன்னா, மாதச் சம்பளக்காராள் எங்கிட்ட என்ன பண்ணிக்க முடியும்?

பார்க்கப்போனால் கேவலம்

ஒரு தேங்காய்.

2 பூவம்பழம்.

குங்குமம்.

சூடப் பொட்டலம்.

1 முழம் பூ.

பத்ரம் புஷபம்.

பூஜை சாமான், ஒரு செட்.

என்னவோ உளர்ற மாதிரி இருக்கோ? என்னிடந்தான் இளநீர் மலிஞ்சிருக்கேன்னு வெய்யிலில் புளிக்க வெச்சு நானே குடிச்சுட்ட மாதிரி இருக்கோ? அதெல்லாம் இல்லை, பயப்படாதேயும். எதுக்குச் சொல்ல வந்தேன்னா, கோவில் எனக்கு அவசியம் வேணும்; ஆனால் கோவிலுக்குள்ளே நான் போய் வருடக் கணக்காச்சு.

எங்கேயோ ஆரம்பிச்சு எங்கேயோ முடிக்கிற மாதிரி இருக்கோ? இல்லவே இல்லை. நான் சரியாத்தானிருக்கேன். நான் என்ன வேப்பிலை மாமியா?

எங்கு விட்டேன்? ஆ! —நினைவு வந்து விட்டது!

மாது ஒருநாள் மத்யானம் தலைவலிக்கிறதென்று நடு வகுப்பில் கேட்டுக் கொண்டு வீட்டுக்குத் திரும்பிவந்தவன்—

—அன்றைக்கென்று பாருங்கள், மாமி வீட்டிலிருந்தாள். ஒரு தரம், ரெண்டு தரம், மூணு தரம் அடுத்தடுத்து வாந்தி

யெடுத்து—வாசலில் 'கொல்'லாயிட்டுது—எங்கள் அத்தனை பேருக்கும் எதிரிலே மாமி மடியிலேயே—

வீட்டுக்காரர் கையை வீசிய வேகத்தில் ஒரு தேங்காய் அதன் வரிசையிலிருந்து பிசகி உருண்டு கீழே விழுந்து 'பொட்'டென்று உடைந்து சிதறிய இளநீரில் வாயைப் பிளந்தது. முதுகுத் தண்டு சில்'லிட்டது. அவருக்கு லேசாய் மூச்சுத் திணறிற்று.

எங்கள் அதிர்ச்சி இருக்கட்டும்—

மாமி?

நாங்கள் எல்லோரும் ஒருமுகமாய்—

மாமி?

மாமி தன் மடியில் கிடந்த முகத்தை இரண்டுமுறை தொட்டு அசைத்துப் பார்த்தாள். தலை பூட்டு கழன்று துவண்டது.

இருந்தாற்போலிருந்து ஒரு சிரிப்பு கிளம்பிற்று பாருங்கள், அது மாதிரிச் சிரிப்பை நாங்கள் ஒருத்தருமே எங்கள் வாழ்நாளில் கேட்டதில்லை; இனிமேல் கேட்கப் போவதுமில்லை.

அதென்னவோ ஜன்மேதி ஜன்மத்திற்கும் புரியாத ஒரு புதிர், திடீரென்று அவிழ்ந்த வேடிக்கையின் தெறி மணிகள் நாலா பக்கமும் உருண்டோடின மாதிரி, அப்படி ஒரு சிரிப்பு.

அது மாமி குரல்கூட இல்லை.

எத்தனையோ நாள் காத்திருந்து இந்தச் சமயம் பார்த்து அவளுள் எது புகுந்து கொண்டதோ அதன் குரல், அதன் சிரிப்பு

அந்தச் சிரிப்புத்தான் மாமியிடம் கடைசியாய்க் கேட்ட ஒலி. அப்போதிலிருந்து மாமிக்கு வாய் அடைத்துவிட்டது.

அத்தோடு இல்லை.

கட்டிடத்துடன் பூமியை வாங்கிக் கொண்டவன் பழைய கட்டிடத்தை அடியோடு இடித்து, தன் இஷ்டத்துக்குப்

புதிதாய்க் கட்டிக் கொண்டாற்போல், மாமி அடியோடு உருமாறிவிட்டாள்.

உடலில் சதை பிடித்து முகம், உடல் எல்லாம் நிரவிக் கொண்டு, இளமைகண்டு, முன்னைவிட நன்றாய் நிறத்துக் கொண்டு, பளபளவென்று இப்போது காண்பதுபோல்— மூணு நாள் ஆகாரமில்லாவிட்டாலும் மேனி தளர்வதில்லை.

ஆண்டவன் தேற்றும் விதமே தனி, அவன் அமைதியை அருளும் வழியே தனி!

அவர் குரல் சட்டென்று தாழ்ந்தது.

வெள்ளையாய் ஒரு உருவம் கோவிலிலிருந்து வெளிப்பட்டது.

அவனையுமறியாமல் அவன் எழுந்து நின்றான்.

கோமதி உள்ளேயிருந்து வெளியே வந்தாள்.

அது அவர்களைத் தாண்டிச் செல்கையில் லேசாய்க் காற்று அவர்களைச் சுற்றி எழும்பி, உடனே ஓய்ந்தது.

இறக்கை வீச்சினின்று முள்மேல் உதிர்ந்த சிறகு போன்று, வெண்மையாய், மிருதுவாய், புரிந்தும், புரியாதுமாய் அவனுள் ஏதோ இதவாய் மிளிர்ந்தது.

□□□

# கண்ணன்

கண்ணன் கால்வாயோரமாய் உட்கார்ந்து, ஒவ்வொரு கல்லாய்ப் பொறுக்கியெடுத்துத் தண்ணீரில் விட்டெறிந்து கொண்டிருந்தான். ஒரு கல்லைப் போட்டதும், தண்ணீர் சலனம் அடைந்து, அலைகள் எழும்பி, வட்டம் வட்டமாய்ச் சுற்றி ஓயுமுன் இன்னொரு கல்லைப் போடுவான்.

சீக்கிரமே இருட்டிவிட்டது. அரை நிலா பனையுச்சியி லிருந்து எட்டிப் பார்த்தது. கால்வாயின் எதிர்க்கரைக்கப்பா லிருந்து வயல்களில் பச்சைக்கதிர்களின் ரகசியங்கள் காற்றுவாக்கில் மிதந்து வந்து எட்டின. கதிர்களின் பேச்சை இரைந்து அடக்குவது போன்று ''க்ரீச்...க்ரீச்'' என்று அலறும் ஆந்தையின் அகவல், நிசப்தத்தை துண்டுதுண்டாய் வெட்டிற்று. புதர்களில் சலசலப்பு...

கண்ணன் தன்னந்தனியனாய் உட்கார்ந்திருந்தான். அவனுக்கு இதுகூட அவ்வளவு பயமில்லை. வீட்டுக்குப் போனால் மாமாவிடம் பயத்துக்கு எதிரே இந்த பயம் என்ன பயம்?...

கல்லெரிந்து அலுத்த பின், கண்ணன் முட்டிக்காலைக் கட்டிக் கொண்டு கொஞ்ச நேரம் ஆடினான். வளையம் வளையமாய்ச் சுருண்ட மயிர்த் திருகுகள் காற்றில் அலைப் புற்று. கண்ணிலும் நெற்றியிலும் மோதின. வாய் சிறிதே மலர்ந்து, முன்னிரண்டு பற்கள் மாத்திரம் சற்றே எட்டிப் பார்க்க, அவன் அழகாயிருந்தான்.

கண்ணன் பரீக்ஷையில் 'பெயில்'. தன் ஸ்லேட்டை நேரே பார்க்கத் தைரியமில்லை. ஓரக் கண்ணால் பார்த்தான். வயிறு 'பகீர்' என்றது. வெள்ளைச் சாக்கில் 10 கீழே போட்டு, மேலே ஒரு கோடு கிழித்து அதன் மேல் பட்டதும் படாததுமாய் ஒரு பூஜ்யம் உட்கார்ந்திருந்தது. சுத்தமாய், வட்டமாய். வழவழப்பாய். கோழி முட்டை மார்க்கைப் பார்க்காமலே வாத்தியாரிடமிருந்து ஸ்லேட்டைத் திருப்பி வாங்குகையில் "சார், நான் பாஸா?" என்று கேட்டான். தொண்டை பக் பக் பக் பக்—

"பாஸா? பாப்பாஸ்தாள்! நீ எங்கேடா பாஸ் ஆறது? எங்கேயே செவித்தைப் பார்த்துண்டு யோசனை பண்ணிண்டிருக்கே! ஒன்னைக் கோவிச்சுக்கவும் பயமாயிருக்கு. அடிக்கறத்துக்கு அதைவிடப் பயமாயிருக்கு. அப்படியே செத்து விழுந்துடுவே போல் நடுங்கறே. 'ஹூம்,'ன்னா அரையோட போயிண்டுடறே!

"வா, வா, எந்த ஐ. ஸி. எஸ். பரிக்ஷை தட்டுக் கெட்டுப் போறது? இன்னும் ஒரு வருஷம் இங்கேயே இருந்துட்டுப்போ. அப்புறம் நானே இரண்டாவதுக்குத் தூக்கிப் போட்டுடறேன்..."

அவனுக்கு அதெல்லாம் புரியவில்லை. இப்போ ஒன்று தான் புரிந்தது. அவன் 'பெயில்'.

வீட்டுக்குப் போனால் மாமா அடிப்பாரா? தெரியாது. இதுவரைக்கும் அடிச்சதில்லை. ஆனால் மாமா முழிச்சுப் பார்த்தாலே போருமே... நடுமுதுகிலே 'ஐஸ்' வெச்சாப் போலே சில்லுன்னு, அப்புறமும் கீழே இறங்கி வழியறது. அப்பா, அதுக்கு பதிலா குதிரை சாட்டையிலே இருவத்தியெட்டு அடி சேர்ந்தாப்போல் வாங்கிக்கலாம்-அந்த முழியை வாங்கிக்க முடியாது. மாமா எப்பவும் அப்படித்தான் இருக்கா... அன்னிக்குக்கூட அப்படித்தான்... அம்மாவும் அவனும் மொத மொதல்லே, மாமா ஆத்துக்கு வந்தானே, அன்னிக்கு...

தலைக்குப் பின்னால் கைகளைக் கோத்துக் கொண்டு, கண்ணன் மெல்ல மரத்தடியில் சாய்ந்தான். இப்போ ஞாபக மில்லை. கொஞ்சம் கொஞ்சந்தான் ஞாபகமிருக்கு,

மழை 'ஜோ'வென்று கொட்டித்து ராத்திரி.

அம்மா ஒரே தெப்பம். இத்தனை ஈரத்திலும், அவள் அவனை அணைத்துக் கொண்டு, தன் மார்பின் உஷ்ணத்தை அவனுக்கு ஊறவைக்க முயன்றும்—குளிரில் அவனுக்கு தூக்கிப் போட ஆரம்பித்து விட்டது. அதோடு பசி...பசி யான பசி. எவ்வளவுதான் வரவழியெல்லாம் தண்ணி குடிச் சுட்டு இருக்க முடியும்?

கதவு திறந்தது. மாமாவை முதல் முதலாப் பார்த்தது அப்போத்தான். ஒருகையில் ராந்தலைத் தூக்கிப் பிடிச் சுண்டு, இன்னொரு கையை கதவின் மேல் வெச்சுண்டு, பின்னால் இருட்டில் மூஞ்சியை மாத்திரம் நீட்டிண்டு மாமி.

''அண்ணா—''

மாமாவுக்கு முகம் அப்படி மாறுவானேன்? மாமா முழி யைப் பார்க்கறதும் அப்போத்தான் முதல் முதல். மாரிலே ஐஸ் வெச்சாப்போல ஏற்கனவே எனக்கு ரொம்ப குளிர்ரது.

மாமா அப்போ மூஞ்சிக்கு என்ன பண்ணிக்கறா? தெரி யல்லே. என்னமோ முகமூடி போட்டாப் போலே. அன்னிக்கு, டம்பக் கூத்தாடி ஆடினானே அது மாதிரி என்னமோ ஆயிடறது. நெத்தி சுருங்கி, கண்ணும் வாயும் கடுகடுத்து; ஒரு புருவம் இன்னொரு புருவத்து மேலே தூக்கிண்டு கோணிண்டு—

''அண்ணா!'' —அம்மா குரல் கேக்கவே மாட்டேன் கறது.

''யாரு நீயா?''

மாமா உரக்கவே பேசவில்லை. இருந்தாலும் அன்னிக்கு அம்மா பாதி தூக்கி, பாதி நடத்திக் கூட்டி வந்தப்போ

காலில் முள்குத்தித்தே, அது மாதிரியிருந்தது—அதைவிட சுறீல்—

"ஆமாண்ணா, எங்கேண்ணா போவேன்? குழந்தையும் கையுமாய் நிக்கறேன்—"

"பேஷ் சுமை வேறையா?—"

"அண்ணா சாப்பிட்டு ரெண்டு நாளாறது..."

அப்புறம் அதிகமாய் ஞாபகமில்லை. ஏதோ உள்ளே போய் ஒரு கந்தையை அம்மா அவன்மேல் சுற்றினாற் போலிருந்தது... அப்புறம் சாப்பிட்டாற்போலிருந்தது பழையது. அப்புறம் தூக்கக்கலக்கம். கூடம் தூண், கூடத்திலே மாட்டியிருக்கிற படமெல்லாம் ஒரே சுத்தல். நடுவில் நடுவில் மாமாவுக்கும் அம்மாவுக்கும் வார்த்தைகள்—துணுக்குகள்—தண்ணியிலே பேசறாப்போல...

"சரி, இந்த ருக்மிணியைத் தூக்கிண்டு போன அந்தக் கிருஷ்ணன் எங்கே? இப்போ சத்ய பாமையைத் தேடிண்டு போயிருக்கானா?"

அம்மா ஏன் தேம்பி தேம்பி அழறா? அம்மா அழாதேம்மா, எனக்கும் அழுகை வரது பயமாயிருக்கு அழாதேம்மா—

"அண்ணா சொல்லாமே வதைக்காதே அவா போயிட்டா. ஒரு நாள் சாயந்திரம் வேலை செஞ்சுட்டு மாரடைக்கறதுன்னு உட்கார்ந்தா. தீர்த்தம் கொண்டு வரத்துக்குள்ளே அப்படியே தூணிலே சாஞ்சுட்டா—"

"மாப்பிள்ளை எந்த ஆபீசுக்குப் போயிட்டு வந்தாரோ?"

"ஹோட்டல்லே வேலை." அம்மா குரல் கொஞ்சம் வெடிப்பாத்தான் வந்தது. "வேறே உத்யோகம் கிடைச்சிருந்தால் தேவலைதான்—"

"ஆங்காரத்தைப் பார். ஆங்காரம் என்னவேண்டிக் கிடக்கு? எங்கள் மூக்கை அறுத்து வெச்சையேடி பாவி!

பார்த்து வெச்ச வரனைக் கலியாணம் பண்ணிண்டிருந்தா நீ இப்படி நடுத்தெருவிலே நிப்பையா? நாங்களும் இப்படி மானங்குலைஞ்சு போகணுமா?''

''அண்ணா ஒனக்கு எப்படித்தான் மனஸு வந்தது, அந்தக் கிழவனுக்கு என்னை நிச்சயம் பண்ண?—''

''ஆமாண்டி. இப்போ மாத்திரம் ரொம்ப வாழறையா?'' அப்புறம் தெரியவில்லை. அம்மாவினுடைய அழு குரலைத் தவிர, அதுவும், கொஞ்சங் கொஞ்சமாய் விசித்து விசித்து... அப்புறம் ஞாபகமில்லை. மூடின கண்ணுக்குள்ளே மெத்து மெத்துனு ஓரே ரோஜா சிவப்பு, அதுக்குள்ளே அமுங்கிப்போனதுதான் தெரியும். அவ்வளவுதான்.

அப்புறம் ராத்ரி ராத்ரி நான் தூங்கிப்போய்விட்டேன்னு அம்மா நினைச்சுண்டிருக்கும் பொழுது மறுபடியும் விக்கி விக்கித் தேம்பி தேம்பி அழுகை. என் கன்னத்தில், கண்மேல் ஒண்ணு ரெண்டு 'சுறீல், சுறீல்' நெருப்புப் பொறி.

அம்மா ஏன் அழறாள்? அம்மாவுக்கு மார் வெடிச்சுடுத்தா? அவனுக்கு துக்கம் தொண்டையை அடைக்கும். ஆனால், ஏன் அழறேன்னு கேட்க பயமாயிருக்கும். கேட்கலாமா வேண்டாமா? என்ன கேக்கறது, எப்படி கேக்கறதுன்னு யோசனை பண்ணிக் கொண்டிருக்கையிலேயே கண்ணுக்குள்ளே, மெத்து மெத்துனு ரோஜா சிவப்புலே குளுகுளுன்னு நீலம் கலந்து அதன் உள்ளே, ஆழமே தெரியாமல் அமிழ்ந்து போவான்.

அம்மா ஒவ்வொரு சமயம் ஆவேசம் வந்தாற்போல் இறுகத் தழுவிப்பாள். மூச்சுகூடத் திணறும். அது பிரியமா, அல்லது எதையாவது பார்த்துப் பயந்து. நான் அவளைக் கட்டிக்கிற மாதிரி என்னைக் கட்டிக்கறாளா? கால்சறுக்கிட்டா கை எதைவேணாப் பிடிச்சுக்கத் தவிக்கிறதே, அம்மா அதுமாதிரி என்னைப் பிடிச்சுக்கறாளே!

ஆனால் அம்மா எங்கேயும் விழல்லையே முழிகிப் போய் முழி பிதுங்கினமாதிரி ஏன் என்னைப் பிடிச்சுக்கறா? இன்னொண்ணும் புரியல்லை. தெருவில் நான் போனால், பெரியவா சின்னவா எல்லாரும் உடனே ஒரு கும்பல் கூடி கிசு கிசுன்னு பேசிச் சிரிச்சுக்கறாளே ஏன்? எங்கேயாவது சொக்காயில் கரி, மை ஏதாவது பட்டுண்டுட்டேனா? தோள் பட்டையைத் திருப்பி திருப்பிப் பார்த்துக் கொள்வான். ஒன்றும் தெரியவில்லை. அம்மா சரியாத்தாளே தோச்சுப் போட்டிருக்கா?

பள்ளிக்கூடத்தில்கூட அவனுக்கு ஒதுக்கு இடம்தான். இதே கிசு கிசுப் பேச்சு, ரகசியச் சிரிப்புத்தான். ஒண்ணும் புரியல்லே. முதல்நாள் பள்ளிக்கூடத்திலிருந்து வந்தவுடன், அம்மாவைக் கேட்டான்.

"என்னம்மா! என் முதுகிலே கரி ஒட்டிண்டிருக்கா, பாரு; எல்லாரும் சிரிக்கிறாளே?"

அதுக்குள்ளே மாமா குறுக்கிட்டு: "மூஞ்சியிலே நீங்கள் பூசிய கரி உன் முதுகில் தெரியுதடா அதுதான் காக்ஷி." இதென்ன பாஷையோ? அம்மாவுக்குக் கன்னத்தில் கண்ணீர் மாலை மாலையா வழியறது. அம்மா பேசாமல் இருக்கா. அவனை அவள் அப்பொழுது அணைத்துக் கொண்டால் தேவலை. நடுக்கூடத்தில் நடுக்காட்டில், தனியாக நிற்கிறான். ஆனால் அம்மா தன் மூலையை விட்டு நகரவில்லை.

அப்புறம் இன்னொண்ணு. அம்மா நாளாக ஆக அழகாயிண்டே வந்தாள். ஆனால் அது ஒரு விதமான அழகு; அவளைப் பார்த்தால், ஒரு பக்கம் சந்தோஷமாயிருக்கும். மறு பக்கம் பயமாயிருக்கும்; இன்னொரு பக்கம் துக்கமாயிருக்கும். முகம் சுண்ணாம்பாய் வெளுத்துப்போய் மூக்கு, முழி, வாய் எல்லாம் செதுக்கிவிட்டாற்போல், கோவிலில் ஸ்வாமிக்கு இருப்பதுபோல், சுத்தமாய், எடுப்பாயிருக்கும். முகத்தைச்சுற்றி மாலை போட்டாற்போல் அடுக்கடுக்காய் அடர்த்தியாய் மயிர், பேப்பர் கூண்டுக்குள்ளே அகல்விளக்கு

மாதிரி வெள்ளை வெளேரென்று கன்னத்துக்குள்ளேயிருந்து சிவப்பு டால் அடிக்கும். அம்மா ரொம்ப ரொம்ப அழகாய்ப் போயிட்டா. அம்மா இப்போல்லாம் அழறதில்லை. பேசற தில்லை. தூங்கறதுகூட இல்லை. அவனுக்கு ராத்திரி முழிப்பு வரப்போல்லாம் அவள் உட்கார்ந்திருக்காள்' தூணிலே சாஞ்சிண்டு முழங்கால்மேல் கையைக் கோத் துண்டு ஆகாசத்தைப் பார்த்துண்டு...

சாப்பிடுவதுகூட இல்லை. மாமா ஒரு ஒருநாள் கத்து வார். ''பண்ற அக்ரமமெல்லாம் பண்ணிப்பிட்டு இப்போ சாப்பாட்டு மேலே ராங்கி வந்துடுத்தோ? தவிடு தின்கற திலே ஒய்யாரம் வேறயா?''

ஆனால், அம்மா பதில் பேசறதில்லை.

அப்புறம், ஒருநாள், அவள் பள்ளிக்கூடத்திற்குக் கிளம்பும் நேரத்தில் அம்மா ரேழியில் உட்கார்ந்திருந்தாள்.

''கண்ணா, வா—'' என்று கூப்பிட்டாள். போனேன். ஆசையாய்க் கட்டிண்டு இரண்டு கன்னத்திலும் கண்ணிலும் முத்தமிட்டு, ''போ''ன்னாள்.

ஒரு நாளைக்கும் இந்த மாதிரி அணைச்சுக் கட்டிண்டு முத்தங் கொடுக்க மாட்டா. தினம் ''போயிட்டுவா'' என்பாள். இன்னிக்கு ''போ''ன்னு மாத்திரம் சொன்னாள்.

அவன் வீட்டிற்குத் திரும்பி வரும்பொழுது வாசலில் ஒரே கூட்டம். மாமா அவனைத் தூரத்தில் கண்டதுமே அவ சரமாய் ஓடி வந்து, ''அம்மங்கா, அம்மஞ்சி எல்லோரும் விளையாடிண்டிருக்கா. நீயும் போய் விளையாடு'' என்று அழைச்சுண்டுபோய், மேலத்தெருவில் ஒரு வீட்டில், தன் குழந்தைகளுடன் சேர்த்துவிட்டுட்டு போயிட்டார். அப்புறம் மறுநாள் காலையில்தான் கூட்டிண்டு வந்தார். அன்னி ராத்ரி பாயஸம் இருந்தது. ஜவ்வரசி பாயஸம்; அப்புறம் பத்து பன்னிரண்டு நாள் பொறுத்து, பக்ஷணம் எல்லாம் இருந்தது. ஆனால், அன்னி மொதக் கொண்டு அம்மா இல்லே.

என் அம்மா எங்கே? அம்மா எங்கே மாமா?

கொஞ்ச நாளைக்கு ''இதோ கொல்லைப்புறம் போயிருக்கா. இதோ எதிர்த்தாத்துக்குப் போயிருக்கா. இங்கே போயிருக்கா அங்கே போயிருக்கா'' எல்லோரும் சாக்கு சொல்லி அப்புறம் கேக்கறதுக்கே பயமாயிருந்தது. நானும் கேக்கலே. அவாளும் சொல்லல்லே. அம்மா போன இடம் தெரியல்லே. யாரும் சொல்லாமலே அம்மா இனி வரமாட்டான்னு தெரிஞ்சுபோச்சு. அப்புறம் கேக்கல்லே. தெருவில் போனால் ஒருத்தர் ரெண்டுபேர் 'த்ஸோ, த்ஸோ'ங்கறா. ரெண்டுபேர் ''சரிதான்; நாடோடி பயலுக்கு 'த்ஸோ!' என்ன வேண்டியிருக்கு'' என்கறா.

''குழந்தை என்ன பண்ணுவான்? பெத்தவா பாவம் அவா பெத்ததன் தலை மேலேங்கறது சரியாய்போச்சு,'' இப்படி ஒரு பாட்டி சொல்றா. இப்போதான் நிஜமாப் பயமாயிருந்தது. இத்தனை பேர் என்னைச் சுற்றியிருந்தும் நடுக்காட்டில் தன்னந் தனியாய் விட்டு விட்டாற்போல் இருந்தது...... அம்மா சொல்வாளே ராஜகுமாரன் கதை, அது மாதிரி......

''அம்மா!—'' என்றான் கண்ணன். ஒரே இருட்டு......

''அம்மா!''

அம்மா கிட்டதான் ராத்ரி படுக்கற வழக்கம், காலைத் தூக்கி, அம்மா மடிமேலே போட்டுண்டா எவ்வளவு இதம் மாயிருக்கும்! தலைகாணியைவிட அம்மா தோள்தான் பஞ்சாட்டமிருக்கும். அம்மாவின் ஸன்னமான மூச்சு, முகத்தில் பட்டுண்டே இருந்தால்தான் தைரியமாயிருக்கும்.

''அம்மா!'' துக்கத்தின் இத்தனை நாள் ஊமையடி இன்றுதான் நெஞ்சு வீங்குகிறது.

''அம்மா!''

மலை மலையா மேகத்தின் நடுவிலிருந்து நிலா எட்டிப் பாக்கறது. என்ன ஆச்சர்யம் நிலா நடுவில் அம்மா முகம்!

''அம்மா! அம்மா!'' ஒரே அலறல், ஒரே துள்ளு. அம்மா 'நிலாவிலிருந்து' குதித்து ஓடி வந்து அவனை இறுகத் தழுவிக் கொண்டாள்.

''இதோ இருக்கேனடோ கண்ணா!—அட அசடே, என்னடா இப்படி அழறே?......நான் எங்கேயும் போகலேடா!—நிஜமாத்தான்—எதித்தாத்துக்குத்தான் போயிருந்தேன். நீ என்னைக் கண்டு பிடிக்கறையா பார்க்கலாம்னு கண்ணா மூச்சி விளையாடினேன். அதுக்குள்ள நான் காணாமே போயிட்டேன்னு கனாக் கண்டிருக்கே. இதோ வந்துட்டேனே, பாரு, என்னைப் பாரு......''

''கண்ணா''வுக்கு அருமையாய்த் தூக்கம் வந்தது; காலைத் தூக்கி அம்மா மடியில் போட்டுக் கொண்டான். அம்மாவை இறுகக் கட்டிக் கொண்டான். 'கண்ணா'வுக்கு சிரிப்பா வந்தது. அழுது கொண்டிருந்ததை நினைச்சால் வெக்கமா இருந்தது. இன்னும் சிரிப்பு அதிகமா வந்தது.

மறுநாள் பொல பொலவென விடியும் நேரத்தில் அவனைத் தேடி வந்தவர் கண்டனர். அவன் மரத்தின் வேர் மேல் காலைப் போட்டபடி, வேரை இறுகத் தழுவிக் கொண்டு அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். மாமா தோளைப் பிடித்துக் குலுக்கினார்.

''கண்ணா—கண்ணா—டேய், எழுந்திருடா.'' ஆனால் அவன் எழுந்திருக்க மாட்டான். அவன் தூக்கம்-அம்மாவைக் கண்டு பிடித்துவிட்ட தூக்கம். இஷ்டப்பட்டாலும் எழுந்திருக்க முடியாது.

முடிந்தாலும் இஷ்டப்பட்டிருக்க மாட்டான்.

□□□

# எங்கிருந்தோ வந்தேன்

படி மிதிக்கையிலே வானம் குமுறுது—இல்லை, என் வவுத்தில் என் பசியின் குமுறல்.

பஞ்சடைஞ்ச என் கண்ணிலிருந்தே இத்தினி இருளும் புறப்பட்டு வந்து அந்தி மங்குதோ?

வாசற்படியில் தயங்கி நின்றான். பெரிய திண்ணையில் இரு உருவங்கள் இருளில் கோடு கட்டின.

அண்ணனும் தம்பியுமாட்டம் இருக்குது. பேசிகிட்டிருக்காங்க. சின்ன திண்ணையில் ஒரு சின்னப் பையன் முழங்காலைக் கட்டி குந்தியிருக்கான்.

மாடத்துலே அகல் சுடர், கண்ணைக் கசக்கி மனமில்லாமே முளிச்சுப் பார்த்து மங்கி மூச்சு விடுது.

''ஏ பண்டாரம் உனக்கு மூளையிருக்குதா? இன்னும் உலை காயுதோ இல்லியோ அதுக்குள்ளே உன் பஞ்சப் பாட்டுக்கு வேலை கண்டிருச்சா?''

''என்னண்ணா அந்த ஆளாடே கோவம்? கடலைக்காக் கொல்லையிலே குரங்கு இறங்கிட்ட உன் ஆத்திரத்துக்கு பிச்சைக்கு வந்த ஆண்டியா ஆளு?''

தம்பியார் பேச்சு, பூவாலே அடிச்சாப் போல இருளிலே வந்து மெத்துனு இறங்குது. காதிலே மோதி நெஞ்சை ஒத்தி உதிருது. என் கண்ணோரம் தண்ணி—இல்லை சிலும்பல் றாவுது.

''ஐயா சோறு கண்டு மூணு நாளாச்சு!'' இது என் குரல் தானா? பூமியின் குடலிலிருந்து வருதே? இருளோன்னு வருது.

''ஏனய்யா, பசிக்கிறவங்களுக்கெல்லாம் மூணு அது என்ன கணக்கய்யா?''

''பசி எல்லாருக்கும் ஒண்ணுதான் அண்ணா. பசி வேளைக்கு ஆனையிலிருந்து எறும்பு வரைக்கும் எல்லாத் துக்கும் ஆனைப் பசிதான்.''

''சரிதாண்டா! நீ பெரிய தருமராசா! எனக்குத் தெரியுமே, நாயம் சொல்ல வந்துட்டான் பெரிய நாயம்!''

''சாமியாரே நீங்க சும்மா திண்ணையிலே குந்துங்க. நெஞ்சிலே ஒண்ணும் வெக்காதிங்க. அண்ணனுக்கு பேச்சுத் தான் நெடி. மனசு பிஞ்சு. சமையலாவுது, ஆவட்டும்.''

உஸ்—அப்பாடா, மூச்சோ அல்ல என் உயிர்தான் பிரிஞ்சுப் போச்சோ? இப்போ சாய இந்தத் தூண் மாத்திரம் இல்லாட்டி புடலம் பிஞ்சா சுருண்டுடுவேன். அப்பா என்னைக் குந்தச் சொன்ன வாய்க்கு உன் வவுறு எப்பவும் குளுகுளுன்னு இருக்கணும்! ஐயோ என் வவுத்துக் குழி எனக்கே பயமாயிருக்குதே! பானையிலே வடிச்சதத்தினியும் இலையிலே சாய்ச்சாலும் குழி அடையுமா? ஆண்டவனே! நீ இருக்கையா?

''அப்பா!''

இரு சகோதரர்களும் திடுக்கிட்டுத் திரும்பினர். மூத்த வன் முகத்தின் மாறல் காணச் சகிக்கவில்லை. முகத்தின் மீது அவ்வேளையின் சுழிப்பு தன் முழு வேகத்தில் மோதி உடைந்து விரிசல்கள் அடுக்கடுக்காய் நெற்றியிலும் கன்னங் களிலும் வாயோரங்களிலும் 'விர்ரென' ரேகையோடின.

கண்ணாடி உடைஞ்சாப் போலே

''சின்னதா பேசினது?'' அவன் பேச்சு, கேவிய மூச்சில் தொத்தி வந்து வெளிக்காற்றுடன் கலந்தது.

தம்பி தலையை ஆட்டினான், அவனுக்கு வாயடைத்து விட்டது.

'சின்ன' தன் முகத்தில் திடீரெனச் செழித்த செந்தழல் இடத்தை ஏற்றும்போல் ஒளி வீசிற்று. சின்னத் திண்ணையி லிருந்து குதித்தோடி வந்து பண்டாரத்தின் முகத்துள் உற்று நோக்கினான். அவன் கைவிரல் நுனிகள் ஆண்டியின்மேல் லேசாய்ப் பட்டன. ஆண்டியின் உடல் மயிர்க்கால் நரம்பு கள் தற்காப்பில், அச்சத்தில் குறுத்துகுறுத்து உள்வாங்கின.

ஏன் என்னைத் தொடறான்? என்னண்டை என்னத்தைத் தேடறான்?

பையன் என்ன தேடினானோ என்ன கண்டு ஏமாந் தானோ? அவன் சுறுசுறுப்பு, பற்றிய வேகத்தில் சட்டென விட்டது. கண்களில் அசடு குழம்பிற்று. வாயில் விரல் போட்டுக்கொண்டு நின்றான். பையன் சின்னப் பையன் தான். ஆனால் வாயில் விரல் போட்டுக்கொள்ளும் வயதல்ல. சற்று விளக்குப் பார்வை. ஆனால் விளக்குப் பார்வையு மல்ல என்னத்தையோ தேடித்தேடி அந்தத் திக்கிலேயே சாய்ந்து போன நோக்கு.

பையன் ஆண்டிக்கெதிரே உட்கார்ந்து கொண்டான். வாயில் மாட்டிய விரலை இன்னும் எடுக்கவில்லை, கடை வாயில் எச்சில் வழிந்தது. வாலைக் குழைக்கும் நாய் முகத் தில் காணும் சோகக் கனிவொழுகி, கண்கள் அழகுற்றன. அவனுள் குமுறும் குழம்பில் மார்பு செவ்விட்டது.

உள்ளேயிருந்து 'கம்'முனு வெங்காயம் மூக்கைத் துளைக்குதப்பா! சாம்பாரிலே மூளுசா விட்டிருப்பாங்களா? இல்லே பொரியல்லெ அரிஞ்சு போட்டிருப்பாங்களா? திண்ணையிலே குந்த வெச்சுட்டு இவங்க மாத்திரம் உள்ளே போயிட்டு வெளியே வந்து 'ஆய்ப்போச்சு பண்டாரம்'னு கைவிரிப்பாங்களா? ஆண்டவா! என்மேலே இன்னிக்கு என்ன எண்ணம் வெச்சிருக்கியோ தெரியல்லியே, இரு ளோன்னு இருக்குதே!

சின்னவரு அகல் விளக்கைத் தூண்டறாரு, என்னை இன்னும் நல்லாப் பார்க்க. அண்ணனும் தம்பியும் என்னைப் பார்த்துப் பார்த்து என்னவோ கிசுமுசுன்னு பேசிக்கறாங்க. மூத்தவர் தன் காதை மடிச்சுக் காட்டறாரு. தம்பி தன் தாடையிறக்கத்துலே தட்டி காட்டறாரு. என்னைக் கேஸ் புடிச்சுக் கொடுக்கப் போறாங்களா? நான் என்ன தப்பு செஞ்சிட்டேன்? என்ன செஞ்சிருந்தாலும் இவங்களுக்கு எப்படித் தெரியும்?

ஆனா தப்பு செஞ்சாத்தான் 'தண்டா'வா? நாணயத்தைவிடக் கேஸ்தானே முக்கியம்? 'செஞ்சியா செஞ்சியா?'

''எசமான் என்னை அடிமேல் அடி அடிக்காதீங்க. அடிச்சே கொன்னு போடாதீங்க. கொன்னு போட்டாலும் என்ன செஞ்சேன்னு சொல்லுங்க; செஞ்சதைத் தெரிஞ்சு கிட்டு சாவறேன். என்ன செஞ்சேன்?

''அது உனக்குத் தெரிஞ்சு ஆவ வேண்டியதில்லே. செஞ் சேன்னு ஒத்துக்கோ.''

ஈதானே போலீஸ் தர்பார்! செஞ்சியோ இல்லியோ மூணு மாசம் உள்ளே தள்ளிட்டான்னா கஞ்சியோ களியோ மூணு மாசம் வவுத்துக்குக் கவலையில்லே. இதுவரையும் நான் போனதில்லே. ஆனால் போனவங்க அப்படித்தானே சொல்லிக்கிறாங்க. வவுத்துக் கொடுமையை நினைச்சுப் பாத்தா இதுவரைக்கும் போகாதது நம் தப்புத்தானே! புளைப்போ ஆண்டிப் புளைப்பு. உண்றதோ இரந்து. ஆனா இதிலேயும் ஈனமானம்னு ஏதோ இன்னும் ஒட்டிக்கிட்டு உடல் குன்னுது. இதுவே வெக்கக்கேடாயில்லே, சிரிப்பாக் கூட இல்லே?

''சாமீயாரே, எளுந்து கால்கை களுவறீங்களா?''

சின்னவரே இந்த வார்த்தை எப்போ வரப்போவுதுன்னு தானே காத்துக்கிட்டிருக்கேன். ஆன்ால் கவுரவத்தை விடாமே கனைச்சு நமசிவாயம்னு கூப்பிட்டுகிட்டு எளுந்

திருக்கறேன். என்னவோ நான் கூப்பிட்டவுடனே சிவன் எல்லாத்தையும் தரவன், மேல்முண்டை இடுப்பிலே வரிஞ்சு கட்டிகிட்டு, கைகட்டி வாய் புதைச்சு தவசிப் புள்ளை யாட்டம் என் கால் மாட்டிலே காத்துகிட்டு நிக்கிறாப் போல்.

''அப்பா!''

சின்னப் பையன் குதித்தெழுந்து ஆண்டியின் கையைப் பிடித்தான். நிமிர்ந்த முகத்தில் ஆயிரம் அலைகள் ஊமை வடிவம் ஆடிப் பாய்ந்தன.

அண்ணன் முகத்தில் திரும்பவும் திகைப்பு சூழ்ந்தது. ஆண்டி மேல் ஆழ்ந்த பார்வையில் லேசாய்ப் பகை கக்கிற்று. பையன் தலையில் காடாய்ச் செறிந்த மயிருள் செல்லமாய்த் தன் விரல்களை விட்டுக் கலைத்துக்கொண்டே ''இவன் என் மகன். இவன் பேர் நமச்சிவாயம்'' என்றான்.

தம்பியார் தொடர்ந்து: ''ஆனால் நாங்கள் பேர் கூப் பிட்டு இவன் எங்களுக்கு ஏன்னு கேட்டு எத்தினியோ நாளாச்சு''...

வெளியே பார்த்து வீடு இம்மாம் பெரிசுன்னு எவன் நினைப்பான்? கழுத்துக் குறுகலைக் கணக்குப் பார்த்து நெஞ்சின் ஆழத்தைக் கணிக்க முடியுமா? நடக்க நடக்க வீடு கூடவே வருது. ஒரு ஒரு கட்டும் கோட்டையாட்டம். ஒரு கட்டு, ரெண்டு கட்டு, மூணாங்கட்டு தாண்டிக் கிணறு. அந்தாண்டை புழக்கடை மதில் எங்கே எழும்புது இருட்டிலே தெரியலே. இடையிலே மரமும் செடியும் தென்னையும் வாழையும் இலையும் மட்டையும் படுதாவா ஆடி மறைச் சிட்டு நிக்கிது.

தண்ணியை வாளி வாளியாக இளுத்து மேலே ஊத்திக் கிறேன், ரெண்டு முளுங்கு அள்ளியும் குடிக்கிறேன். பால் தித்திக்குது. அம்மாடி! கண்ணு, வாய், காது, களுத்து, முதுகு, அக்குள் எல்லாம் குளுகுளு—

''இந்தாங்க!''

குரல் கேட்டு திடும்புனு திரும்பினா இளையவர் கையிலே மடிச்ச துண்டைத் தாங்கிட்டு நிக்கறாரு. துண்டை என்னண்டை நீட்டறாரு.

''சுருக்க ஈரத் துவட்டுங்க. இந்த தண்ணி ஜீதளம்.''

எனக்கு உடம்பு பதறிப் போச்சு.

''எசமான் ஏழைமீது உங்கள் கருணை ஏற்கெனவே எனக்கு வாயடைக்குது. இனியும் சோதிக்காதீங்க. இத்தனைக்கு நான் தகுதியில்லே. எனக்கே தெரியும்.''

அவர் குஞ்சிரிப்பா சிரிக்கறாரு.

''ஈதெல்லாம் உங்களுக்குன்னு நீங்க ஏன் நினைக்கிறீங்க? ஈதெல்லாம் நாங்க எங்களுக்கே செய்வதா யிருக்கக் கூடாதா?''

இவர் என்ன சொல்றாரு விளங்குதில்லே. ஆனால் இப்படிப் பேசினா நெஞ்சிலே எதுவோ பயங்காணுது.

கொஞ்சம் நெருங்கி வரார். மூக்கு எடுப்பா, எப்படிக் கத்தியாட்டம்!

''சாமியாரே ஒண்ணு சொல்லுங்க; உங்கள் தாடிக்கும் மீசைக்கும் உள்ளே ஒளிஞ்சிட்டிருக்கறது யார்? என்ன அப்படி முளிக்கறீங்க? எனக்கு முன்னாலேயே தெரியும். எதுக்கும் சந்தேகத்துக்குக் கேட்டேன்; அவ்வளவுதான். சும்மா மிரளாதீங்க.''

''எசமான் எனக்கொண்ணுமே தெரியாது.''

''நான் சொல்றதும் அதுவேதான். நீங்க எதுக்கும் பயப்படத் தேவையில்லே,''

''எசமான் நாய்க்கு ஒண்ணும் தேவையில்லே, கையெடுத்துக் கும்பிடறேன். எசமான் எனக்கு இலையிலே கொடுத்துட்டா, மடியிலே சுருட்டிக்கிட்டு எங்கேனாச்சும் காவாய்க் கரையோரம் கண் காணாமே போயிடுவேன்''

''சேச்சே—''

''எசமான் உண்மையா சொல்றேன்; எனக்கொண்ணுமே தெரியாது. இந்த எல்லையிலே, இன்னிக்குத்தான் சத்தியமா விளக்கு வேளைக்கு காலெடுத்து வெச்சேன்—''

''அப்பா!''

''உஷ்—சாமியாரே; பையன் உங்களை அளைக்கிறான். வாயே பேசாதவன் இன்னிக்கி 'அப்பா'ன்னு அளைக்கிறான். வாங்க, வாங்க உள்ளே வாங்க; பயம் விட்டு வாங்க''

ஐயோ உபசரிக்கிறாங்களா குழி பறிக்கிறாங்களா தெரியல்லியே! முருவா, கண்டுக்க காட்டிக் கொடேன்!

தாழ்வாரத்திலே திருநீறு பல்லா ஆடி ஆடி என்னை விளிக்குது.

'ஏ பண்டாரம்! வவுத்து நினைப்பிலே வேஷத்தை மறந்துடாதே!' என் மனசு எச்சரிக்கை காட்டுது.

நடு வாசல்லே இலை போட்டிருக்காங்க; எனக்கு இலை அவங்களுக்குக் கிண்ணி.

தாழ்வாரத்துலே சுவத்தோரமா ரெண்டு பொம்புள்ளேங்க ஒட்டிக்கிட்டு காத்திட்டிருக்காங்க.

இலைக்குப் பக்கத்துலே மணைமேலே பையன் குந்திக்கிட்டு குள்ள வாத்து ரெக்கை அடிச்சுக்கற மாதிரி, ரெண்டு முழங் கையையும் விலாவுலே அடிச்சுக்கிட்டு, குந்தினபடியே என்னைப் பார்த்துக் கொம்மாளம் போட்டு குதிக்கறான். இவனைப் பார்த்தான்தான் ரொம்ப அச்சமா யிருக்குது. மறை லூஸா? ஆனால் அவங்கல்லாம் அவனைப் பாக்கறப் போல்லாம் அவங்க உசிரே அவங்க கண்ணுலே விளையாடுது. வீட்டு விசையே பையன்கிட்டத்தான் போல் இருக்குது.

பக்கத்திலே பையன்; அண்ணனும் தம்பியும் எதிரே. பெரியவர் உறுமினதும் பதார்த்தம் வெக்க ஆரம்பிச்சுட்டாங்க. தாழ்வாரத்தில் இரும்புக் கம்பியிலிருந்து சிம்னி விளக்கு தொங்குது, என் முகத்திலே மாத்திரம் அடிக்குது.

எல்லாம் ஏற்பாடாத்தான் நடக்குது. ஆனால் நான் என்ன செய்ய முடியும்? நான் என்ன செஞ்சேன்?

தலைக்கு மேலே முழு மைதானத்துலே முக்கா நிலவு நடுவுலே நின்னிட்டு என்னைப் பார்த்துச் சிரிக்கிறான். "ஏலே பண்டாரம்! இன்னிக்கு உனக்கு என்ன வாழ்வு வந்திருக்குது? தண்ணியும் சோறும் விரலிடுக்குலே வளிஞ்சு போவுதேன்னு உஸ்உஸ்ஸுனு அவசர அவசரமா உறிஞ்சி உறிஞ்சி அரையும் முளுசுமா உள்ளே தள்ள கிடைச்சாலே சொர்க்கம் உனக்கு. இன்னிக்கி எல்லாருக்கும் சரியா இலை, மனை, பக்கத்துலே லோட்டாவுலே தண்ணி, விருந்து, ஊம்ஊம் நடத்து ஏக் தின்கா சுல்தான்! ஆனால் ஒரு நாள் ஒருவேளை முழு வவுறு நிறையப்போகும் சொகத்துலே நாய்க்கு வெக்க மறந்துடாதே. இலையைப் புரட்டி ஒண்ணும் காணாமே அது வவுறெரிஞ்சு நடு ராவுலே தலை தூக்கி என்னைப் பார்த்து ஊளையிட்டா, உன் வவுத்துலே பத்து நாளைக்கு மண்ணு! ஆமா சொல்லிட்டேன், இன்னிக்கி உன் சோறுக்கு நான் சாக்ஷி—" கிலியிலே தலையை ஆட்டறேன்.

நிலவின் அழகை எல்லாரும் புகழாறாங்க. ஆனா எனக்கு அவன் அழகா பட்டதில்லே. முகத்தில் கிழவனாட்டம் எத்தினி வடு! மத்த நாளைக்கு தேஞ்சு தேஞ்சு ஓஞ்சு ஒருநாள் மாஞ்சே போறான். பசிச்ச வயிறோடு ராவுலே மானம் பார்த்து படுக்கற முகம் உலகத்திலே எத்தினி எத்தினியோ? பார்த்துப் பார்த்து அந்தப் பாவமே அவனை ரோகமா வாட்டுது.

சூரியன் விசயம் கேக்கவே தேவையில்லே; பகலிலேயே எரியற வயிறு கோடி கோடி கண்டு கண்டு, அவன் கொதிப்பு கூடிக்கிட்டே போவுது.

இலையிலே பதார்த்தம் நிறைஞ்சுபோச்சு.

மசாலா பொரியல்.

துவையல்.

சோத்து வத்தல்

வறுத்த முளகா

அப்பளப்பூ

கிச்சிலிக்கா ஊறுகா

இன்னும் ஒண்ணு ரெண்டு பேர் தெரியாது; இதுவரை கண்ணால் கண்டதுகூட இல்லை.

இன்னிக்கு ஏதாச்சும் விசேடமா? தினத்திக்கே இவங்க இப்படித்தின்னா கட்டுபடி ஆவுமா? வவுறு ஜரிக்குமா? இல்லே இதெல்லாம் எனக்காவா?

மல்லிப்பூவாட்டம் சோறு இலையிலே புலுபுலுன்னு ஆவி பறக்குது. பரபரன்னு—அண்ணின்னு எண்ணறேன் விசிறியெடுத்தாந்து விசிர்றாங்க எனக்குக் கண்ணுலே சதை பிடுங்கிக்குது.

இம்மாம் பொருட்டா நான்?

ஏன் இங்கே வந்தேன்?

இவங்க ஏன் இப்படி என்னை வதைக்கறாங்க?

கண் கசக்கவுமுடியல்லே முளிக்கவுமுடியல்லே. முழி நீஞ்சுது. பாத்துடுவாங்களோ? மூக்கு உறிஞ்சுது.

மேலேருந்து அவன் சிரிக்கிறான். மேலே இளக்கம் கண்டிருக்குது. இளநீரிலே வளுக்கைத் தேங்காய்த் தேசலாட்டம் நிலவு மிதக்குது.

''அப்பவே சொன்னேனே கிணத்துத் தண்ணி ஜீதளம். ஜளிப்பு எப்படிப் புடிச்சிக்கிட்டுது பார்த்தீங்களா?''

சின்னவர் வேறே நெஞ்சுலே தூண்டிலை மாட்டி இழுக்கிறாரு.

இலையை இப்படி நிறையக் கண்டாலே வவுறு அடைச்சுப் போவுது. மேலும் இவங்க மேலும் மேலும்

நெஞ்சை வேறே நிரப்பறாங்க, உடம்பு கிடுகிடுன்னு ஆடுது. அண்டாவானாலும் கொண்டவரைக்கும் தானே!

வெறுப்பிலேயிருந்து தப்பிடலாம்.

எமன் கிட்டக்கூட ஒரு சமயம் இல்லாட்டி ஒரு சமயம்.

ஆனால் அன்பிலேருந்து, ஓடி ஒளிய திக்கில்லியா?

''என்னா சும்மா குந்திட்டிருக்கீங்க?''

பையன் என்மேலே வெச்ச முழிமாறவே யில்ல. என்ன அப்படிப் பார்த்துக்கிட்டிருக்கான்? லாந்தர்லே கண் சீதாப் பளி விரையாட்டம் பளபளக்குது.

சோறுமேலே சாம்பாரு சரிஞ்ச இடத்துலே, நெய் மினுக் கற பக்கம் பேத்து அப்படியே உருட்டி, அதுலே உருளைக் கிழங்கு பத்தை ஒண்ணு புதைச்சு பையன் கையிலே வெச்சேன். நமசிவாயம்.

பையன் மூவத்துலே சந்தோசம் கண்ணுலே வழிஞ்சு, கன்னத்திலே குழிஞ்சு, உதட்டோரம் ஒளிஞ்சு விளையாடு தைப் பார்க்கணுமே! பெரியவங்க ஒத்தரை யொத்தர் பார்த்துக்கறாங்க. அவங்க பார்த்துக்கிற அர்த்தம் என்ன? என்னாச்சும் இருந்தாட்டுப் போவட்டும். எனக்கு இனி வவுறு நோவாது இல்லியா?

ஆனால் ஒரு கவளம் காஞ்ச வவுத்துலே விளுந்ததுமே விக்கல் எடுத்துக்கிட்டுது. தொப்புள் சதை கொத்தோடு பிடுங்கிட்டு தொண்டைவரை வந்ததும் முழி மானத்தை முட்டுது. நொடியிலே மூச்சு மலையேறிப்போச்சு. மூக்குக்குக் குறுக்கே ஒரு பருக்கை தளமாட்டம் விளுந்தாட்டுது. பாம் பாட்டம் இருள் பின்னிக்கிட்டுது. அவங்க உரு அடையாளம் அழிஞ்சு குரங்காட்டம் மேலும் கீழும் குதிக்கிது.

''அப்பா! அப்பா!! அப்பா!!!'' பையன்தான் துடிச்சுப் போயிட்டான். யாரோ தண்ணியை உதட்டண்டை ஏந்த றாங்க.

''குடிங்க குடிங்க! மயங்காதீங்க! கடிச்சுக்கிட்டே குடியுங்க!!

தண்ணி உள்ளே போனதும் முழியும் கீழேயிறங்கி மூச்சும் மேலே திரும்பி—அம்மாடி; திரும்பாத பயணத்துக்கு பணம் கட்டாத டிக்கட் பருக்கை சோறே பத்தும் போல இருக்குதே!

பையன்தான் தலையை அறுத்த கோழியாட்டம் என்னைச் சுத்தி சுத்தி வர்ரான். பிடிச்சு இழுத்துப் பக்கத்துலே குந்த வெச்ச பிறகுதான் மேலே சோறுண்ண விட்டான்.

பதார்த்தம் பக்குவத்துலே ஒண்ணையொண்ணு மிஞ்சுது, நாக்குலே மணம்தான் தக்குது; அது நிக்கல்லே, அப்படிக் கரையுது. அதுதான் கரையுதோ அல்ல அதை ஆக்கின சுகத்தைக் காட்டிலும் அவங்க அதை வெக்கற அன்பிலே என் மனம்தான் கரைஞ்சு போவுதோ?

இவ்வளவு என்னால் தாங்கமுடியாதப்பா. கைகளுவ எழுந்திருக்கும் வரைக்கும் இருப்பேனோ உருகி ஓடிப் போவேனோ?

ஏன்னு கேட்டால்:

ஆண்டிக் கலயத்தில் வேண்டாப் பொருள்தானே பிச்சையா விளுது!

ஊசிப்போன ரசம்.

காடிப் பழையது.

அடிப் பிடிச்ச சுடயது.

கொளந்தைங்களோ பெரியவங்களோ அசிங்கமா கொந்திக் கிளறின எச்சில் பண்டம்.

''இந்தா, பண்டாரம் எங்கே பிச்சுட்டு ஓடறே?

இந்தா தோசைப் புள்ளல் சரியாப் பிடி.

இந்தா இப்பவே சொல்லிட்டேன்.

இந்தப் பக்கம் இன்னும் எட்டு நாளைக்குத் தலை காட்டக் கூடாது—''

ஏழைங்களைக் காட்டிலும் இருக்கப்பட்டவங்களுக்குக் கரிசனம் கூட; நல்லது எப்பவும் தங்களுக்கு. அதிகத்தை வித்து லாபம் பண்ணிடுவாங்க, கெட்டுப்போனதைப் பிச்சை யிட்டு புண்ணியம் பண்ணிடறாங்க. இருக்கப்பட்டவங்கிட்ட எந்தப் பொருளும் வீணாவதில்லே.

''ஏன் சாமியாரே, பாதிப்பசி அடங்கிச்சா? இப்ப சொல்லுங்க உங்களுக்கு விரதம், ஏதாச்சும் உண்டா?''

இவர் என்ன கேக்கறாரு? மனுசன் வாயைத் திறந் தாலே என்ன புறப்படுதோன்னு அச்சமாயிருக்குதே!

''சோத்து சமயம் மவுனம் பளக்கமா? நேரம் வாய்க்கும் கைக்கும்தான்; பேசி வீணாக்க இல்லேன்னு எண்ணமா?''

தம்பி முகம் நிழல் தட்டினமாதிரி மாறிட்டுது.

''என்னண்ணா இது? விருந்தாளி இலையிலே சோத்தை வெச்சிட்டு கிண்டல்? இது தருமமில்லே அடுக்காது—''

''சரிதாண்டா நிறுத்து! நீ பெரிய தருமராசா! தெரி யுமே! நாயம் சொல்ல வந்துட்டான். 'இதுதாண்டா சமயம் இலையில் குந்தினதிலிருந்து எளுந்திருக்கும் வரை சாப்பிட றவன் மாட்டிக்கிட்ட ஆள்தானே! சாமியாரே இதைக் கேளுங்க. என் அப்பன் எனக்குப் புத்தி சொல்ற நேரம் சாப்பாடு நேரம் தான். 'என்னடா பெரிய பையா எங்கே போனே? ஏன் போனே; அங்கே ஏன் நின்னே, இங்கே ஏன் குந்தினே? கிளக்கே நின்னியா மேற்கே திரும்பினியா, கண் ணாலமாகி ரெண்டு குட்டிக்கு தகப்பனா பொறுப்பா யிருக் கையா?' வாயிலே வெச்ச சோறு தாக்குத் தாண்டாமலே விஷம்—அடசட் சோறா இது? ஒருநாள் கையை உதறிக் கிட்டு எளுந்தேன். அப்புறம் எட்டு நாளைக்கு நான் பட்ட பாடு அபே யப்பா!''

''அவர் என்னடா! சொல்லு பொறுக்கமாட்டார்; சொந்த வீட்டிலே இருக்கிறதாவா எண்ணம்? மாமனார்

ஆட்டுலே மருமவப்பிள்ளை விருந்துக்கு வந்திருக்கார் அல்ல? அப்பன்கிட்டப் பேச்சு கேட்கலாமா?''

சின்னவர் முகம் குருத்தா சுருங்குது. மூணா மனுசன் பிச்சைக்காரன் கிட்ட, வீட்டு மானத்தை கொட்டியாவது கண் ஜாடை காட்டறாரு; கையை ஏதோ ஆட்டறாரு; அண்ணன் கடகடன்னு சிரிக்கறாரு.

''அட நிறுத்தப்பா நாட்டியத்தை! ஆடமாட்டியா? அப்பனுக்கு நீ செல்லம். சின்னதிலிருந்தே சீக்குன்னு உனக்கு நல்ல சாக்காச்சு. அப்பன் தன் கையாலேயே தைலத்தை உன் தலையிலே வெக்கறதும் ஆத்தா உன் முதுகு தேக்கறதும் —ஹூ—! கலத்திலே உன் கைவழிய நெய்யைக் கண்டு கண்டே நெய்யைக் கண்டாலே எனக்கு 'உவ்வே' ஆயுட்டுது. நானும் கண்டுட்டேன், ஒரு ஆள் தலைநிமிர்ந்து நடந்தாலே வயதிலே பெரிய தலை சொன்னதுக்கெல்லாம் 'ஆமாம்' தலையாட்டாமல் எப்பாச்சனேும் 'ஏன்'னு கேட்டாலே வீட்டிலேயே அவன் ஆவாதவன்தான்—''

இதெல்லாம் எனக்கென்னத்துக்கு? இதெல்லாம் எனக்கா?

சின்னவர் தலை பூட்டுவிட்டுட்டுது.

'சாமியாரே உங்களையும் சாட்சி வெச்சுத்தான் பேசறேன். உங்க முகஜாடை எனக்கென்னவோ பளசெல்லாம் நினைப்பு உடைப் பெடுத்துக்கிட்டுது. அப்பன் திண்ணையிலிருந்தா நான் புழக்கடை; அவர் அங்கே வந்தால், நான் புங்க மரத்தடி புள்ளையாரண்டை. ஆனால் ஒண்ணு. அப்பனும் நானும் எலியும் பூனையுமா—அவர் இருக்கற சமயம் வளையிலிருந்து தலையை நீட்டறது; இல்லாத சமயம் அவர் தலையை உருட்டறது—இப்படி வளைய வந்தோமே, இந்தப் பகைக்கு திடமான காரணம் கேட்டா எனக்குத் தெரியாது. பெரியவங்க தங்கள் மரியாதையைக் காப்பாத்தற முறையோ என்னவோ? பெத்தமவனிடம்

பரிவா ரெண்டு வார்த்தை பேசிட்டா தங்கள் சிகரம் இறங்கிடுமோன்னு பயம்!

"பெண்டுங்க என்ன வேடிக்கை பார்க்கறீங்க?—" சின்னவர் எரிஞ்சு விழறாரு.

"கலத்தைப்பார்த்து வெக்கறதில்லியா? மாட்டுக்கு வெக்கவா ஆக்கியிருக்கிங்க?"

பொரியலும் சாம்பாரும் இலையிலே பரிவா சாயுது. போதும் போதும், அதிகம் அதிகம்! இலை மேலே அணைச்ச கைமேலே பதார்த்தம் விளுது. இந்த வீட்டுப் பெண்டுக பேசாமடந்தைங்க, அவங்க கைதான் அவங்க வாய்.

"எங்க வீட்டுப் பெரியவர் தன்மை இதல்ல. இன்னிக்கு இவர் நெஞ்சிலே ரத்தம் வடியுது. பேச்சில் கொட்டுது. சமயம் சாப்பாட்டு வேளையாப் போச்சு. மன்னிச்சிடுங்க, மன்னிச்சிடுங்க."

இப்படி அவங்க கையில் சிப்பலின் உதறல், ஆப்பையின் நடுக்கம் எனக்கு சொல்லுது; கெஞ்சி கேக்குது. அண்ணி புறங்கையில் ஒரு பச்சைத் தேள் கொடுக்கைத் தூக்கிட்டு நிக்குது.

மேலே மலையா கருக்கல் திரளுது; கண்டு மிரண்டு நிலவு கலங்கி நிக்குது.

"அப்பனுக்குத்தான் பிள்ளை விஷம்; ஆனால் பிள்ளை மகன் மிட்டாய்க்கடைப் பொட்டலம்; இதென்ன புதிருங்க? பாட்டனும் பிள்ளையும் இழையறது பாக்கணுமே! சீழோடு சீழாட்டம்னு கேலி பண்ணுவேன். ஒருகணம் பிரியமாட் டாங்க. சதையா ஒட்டிக்கிட்டிருப்பாங்க. தாத்தாவைப் பேரன் 'அப்பா'ன்னு அழைப்பான். அவர் இவனை 'இரணியன் வவுத்திலே பிரகலாதன்' என்பாரு. இவன் எச்சிலை அவர் உண்றதும் அவர் எச்சிலுக்கு இவன் குருவி யாட்டம் 'ஜெவஜெவ'ன்னு வாயைத் திறந்துட்டு இவன் வாயிலே அவர் ஊட்டறதும்—சீ! என் மவன்தான் ஆனால்

எச்சில் எனக்குப் பளக்கமில்லையப்பா!' இவன் என்கிட்ட ஒட்டல்லே. இவன்தான் பாட்டன் தலைமேலே குந்திட்டிருக்கானே? அவனை நான் அண்ணாந்து பாத்திட்டிருக்கேனே!''

ஆனால் என் மவன் அண்ணாந்து பார்க்கத் தகுதியான ஆள்தான். இப்போ வாயடைச்சுப் போச்சு; மனம் நம்ப மறுக்குது; மனம் சமானமாவல்லே. இப்படியா என் மவன் இருந்தான்! ஏத்தச்சாலை சாச்சாப்போல் குளுகுளு கிளுகிளுன்னு எப்படிக் குரல்! என்ன வாக்கு! ஒருநாள் ஐயாவும் பேரனும் குலாவிட்டிருக்காங்க; கேட்டுக்கிட்டே வந்துட்டேன்.

''ஏம்பா, பிறந்தால் செத்துப் போறாங்களே—''

''எவண்டா சொன்னது? சாவைப்பத்தி இப்பவே உனக்கென்ன?''

''அட என்னப்பா நீ ஒண்ணு! இல்லாத்தையா சொல்றேன்! எதிர் வூட்டு ஆயா முந்தாநேத்து இறந்துடலே! தூக்கிட்டுப் போறப்போ என்னதான் என் மூஞ்சியை நீ மறைச்சாலும் எனக்குத் தெரியாதா? இன்னிக்குக்கூட இந்த வழிதானே ஏணையிலே ஒண்ணு எடுத்துட்டுப் போனாங்களே! சின்னதோ பெரிசோ பிறந்தூட்டாத்தானே சாவறாங்க? முன்னாலே ஏன் பிறக்கணும்?''

பையனை அப்படியே வாரிக்கிட்டாரு. நான் மூக்கிலே விரலை வெச்சேன். அஞ்சு வயசுப்பேச்சா இது? என் பையன் அம்ஷங்க அம்ஷம்!—''

நிழலடிக்குது, முகம் தெரியல்லே, தண்ணி மேலே ஊதினாப்போல குரல் நடுங்குது; அது தெரியுது.

பையன் சாப்பிடறான். என் மடியில ஒருகை. அதிலே அவனுக்கென்ன தைரியமோ தெரியல்லே.

கருக்கல்லே நிலவு புதைஞ்சுட்டுது,

—"இப்படி என் மவனோடு இருந்துட்டு என் அப்பன் என் மவனை விட்டுட்டு ஓடிட்டான்ய்யா!"

தன்னை பட்டையுரிச்ச மாதிரி திடீர்னு அலறல்! எனக்குப் பூமி கிடுகிடுத்துப் போச்சு. கருக்கல்லே விரிச லாட்டம் மின்னல் கிளைபிரிஞ்சு ஓடுது. வானத்தின் கொசு வாட்டம் தூறல் ஒண்ணு ரெண்டு உதிருது.

இந்த மனுசன் நெஞ்சில் இருள்; ரொம்ப இருள்; ரொம்ப பெரிசு; ரொம்ப பளசு. நெஞ்சின் இளசை நெஞ்சின் இருளில் மறைச்சு தன்னை மறக்கத்தானே மறைஞ்சுட் டான். நிழலாட்டம் முகம் தெரியல்லே. ஆனால் அவன் நெருப்பு என்னைத் தொட்டு உடல்பூரா சுட்டெரிக்குது. மூச்சு ஓடிவந்த மாதிரி இரைக்குது.

"ஒருநாள் உன் மாதிரித்தான் ஒரு பண்டாரம்- உன் மாதிரியில்லே, காவிகட்டி மொட்டைசாமி- ஒருநாள் வந்து ராத்தங்கி மறுநாள் காலைபோனது தெரியாது. அப்பவே இது வீடில்லை; ஆண்டிமடம்; சோத்து சத்ரம். ஆனால் வந்த சாமி என்ன கெஞ்சியும் பருக்கை தொடல்லே. பேசக் கூட இல்லே. கைகால் கழுவிவந்ததும் நெற்றியிலே கையை ஓட்டி ஜாடை காட்டி விபூதி கேட்டான். திருநீறு பல்லாவை அப்பன் கொண்டு வந்து நீட்டினாரு. அதைப் பிடுங்கிக்கிட்டு சோறாட்டம் அள்ளி அள்ளி வாயில் போட்டுக்கிட்டான் பாரு, நாங்க அசந்துட்டோம். சிரிச்சுட்டே நீறைஅள்ளி அசப்பிலே அப்பன் முகத்திலே 'பூ'ன்னு ஊதினான். அப்பன் இருமி கண்ணைக் கசக்கி முளிச்சுப் பார்த்தாரு. அப்போ விருந்தே அப்பனுக்கு பழைய பார்வை போயிட்டுது. நான் சொல்றது கண் போவல்லே; கண் மாறிட்டுது. பார்வை வேறாயிட்டுது. ஆள் சுயத்திலே இல்லை. சரியா இரை யெடுக்கல்லே. கண்ணுக்குக் கண் பேரன்மேலே கூட கவன மில்லே.

"ஏம்பா, நான் இங்கே இருக்கேனே நீ எங்கே பார்க்க றேன்னு?" ஆத்திரத்திலே பையன் ஐயா கையைக்கூடக்

கடிச்சுட்டான். உதிரம் கொட்டுது ஐயாவுக்குத் தெரி யல்லே. என்ன சொல்றது?

''சாமி வந்துபோன மூணாம்நாள் காலை குருவிங்க கீச்மூச்சுன்னு வம்படிக்கிற வேளைக்கு, ஐயா கால்வாய்க் கரைக்குப் போனாரு. கூடவே, பையன் பாட்டன் கையிலே ஆறாம் விரலாத் தொங்கிட்டே போனதைப் பார்த்தேன்.

போனாங்க போனாங்க வெய்யில் மஞ்சள் மாறிப் போச்சு; போனவங்க வல்லே, கால்வாய் தாண்டி கழனிக் கட்டிலே ஏத்தக்கேணி கட்டடம் கரைஞ்சுவருது நினைப்பு வந்துட்டுது! வவுறு குபீர்—

கால்வாய்த் தண்ணி காலில் கல்லைக் கட்டி இழுக்குது. கரை தாண்டி வரப்பிலே விழுந்தடிச்சு ஓடினேன். வானம் வாயைத் திறந்துகிட்டு பூமியைக் கவ்வுது. நடுவுலே மாட்டிக் கிட்டு கிணத்தோரம் பையன் கரைமேட்டில் தனியா குந்திருக்கான். என் வவுறு துண்டாச்சு. எட்டிப் பார்த்தேன் அப்பா மிதக்கல்லே. எனக்குத் தெரியும் மிதக்க மாட்டாரு. நீச்சல்லே சூரன். மூணு தென்னைமரம் ஆழம் முழுகி, போட்ட ஊசியை ஒரே மூச்சிலே எடுத்து வருவார்; எனக்குத் தெரியும்.

''அப்பா எங்கே?'' தோளைப் புடிச்சுக் குலுக்கினேன். பையன் தன் நினைப்பில்லே; தூக்கிக்கிட்டேன். எப்பவுமே நெட்டி. இப்போ கோழிரக்கையாட்டம் கைக்குத் தூக்கினதே தெரியல்லே. என்னவோ அவன் சத்து அத்தினி யும் அவன் கிட்டேருந்து போயிட்ட மாதிரி; பேயறைஞ் சுட்ட மாதிரி.

''அப்பா எங்கே?''

வாய் சிமிழாட்டம் திறந்து மூடுது; ஆனால் அதில் பேச்சு ஓடிப்போச்சு.

''ஐயா எங்கே?''

வெள்ளை முழியிலே பாப்பா தெறிக்குது. ஆனால் கண் ணிலே குறிப்பில்லே. ஒன்பதேகால் அரக்கோணம் 'பெஸல்'

பத்திகிட்ட திரியாட்டம் 'சுர்ர்'னு ஏரிக்கரை மேலே சீறி வருது பார்க்கப் பார்க்கப் பையனுக்கு அலுக்காது. ஆனால் இப்போ முகத்தில் அடையாளமே இல்லே.

ஆளை அப்பன் தன்னோடு தூக்கிட்டுப் போயிட்டான், உசிர்மட்டும் இருக்கேன்னு பெத்த வவுறைப் புரளிப் பண்ணுது. கார்த்திக்குக் கார்த்தி சரியா வருசம் ரெண்டாச்சு. இப்படியேதான் இருக்கான். இதிலிருந்து என் மவனே உனக்கு விடுதலையில்லையா? என் கண்ணு கடைசி வரை இப்படித்தானா?''

கழுத்து தொங்கிட்டுது; தோள் குலுங்குது. சின்னவர் காத்திலிருந்து எழுந்து வந்து இடது கையாலே அண்ணனை அணைச்சுகிட்டாரு. நான் திருடனாட்டம் இலையிலிருந்து எழுந்துட்டேன். கூடவே பையனும். அவனுக்கும் கைகழுவி முகம் துடைச்சு கால் துடைச்சு நான் திண்ணையில் வந்து குந்திட்டேன்.

ஆண் அழுதா பெண்டுங்க அழுவற மாதிரியில்லே. ஒரு ஆண் வாய்விட்டு அழும்படி ஒரு கஸ்டம் இருந்தால் அது உலகத்துக்கே நல்லதில்லே. ஆண்டவனே அழுதா பூமிக்குத் திக்கேது? இங்கே ஏன் வந்தேன்? இதுதாங்க, இன்னும் பத்து நாள் பட்டினி தாங்கலாம். இந்தப் பிச்சைப் பிழைப்பிலே பட்டினி பழக்கமில்லாப் பழக்கமா?

அள்ளிச் சொருவின கொண்டையாட்டம் கருக்கல் திரண்டு தன் உள்ளுக்கே உளையுது. அதிலே திருகு பில்லையாட்டம் நிலவு சின்னதா பதியுது.

உள்ளே பையன் குரல் கேக்குது. விக்கி விக்கி அழுவறான். அண்ணி அண்ணன் தம்பி எல்லாம் சேர்ந்து கிசுகிசுன்னு பேசுறாங்க.

''உஷ்-உஷ்''

''ஊஹூம்''

''நான் மாட்டேன்.''

''சே, சே.''

''வேணாம்.''

''பூ...?''

பையனைத் தூக்கிட்டு சிரிச்சுட்டே சின்னவர் வெளியில் வந்தார்.

''சாமியாரே, பையனுக்கு உங்ககிட்டே படுக்கணுமாம். புள்ளே பிடிப்பான்னு அண்ணி பயப்படுது. என்ன சொல்றீங்க?''

பதிலுக்கு நேரமில்லே. பையன் என்னண்டை தாவிட்டான்.

என்னிடம் வந்தாலும் அவன் வெகு நேரம் தூங்கல்லே. என் கழுத்தைக் கட்டி நெறிக்கறதும் முகத்தோடு முகம் வெக்கறதும் என் கையை இழுத்து இழுத்துத் தன் மார் மேலே வெச்சிக்கிறதுமா, பாம்பின் சுருள் பதுங்கலில் பாஞ்சு கடிச்சுட்ட ஏதோ பழம் நினைப்பில் தவியாத் தவிக்கிறான். தான் நினைச்சது நானில்லே தனக்குத் தெரியுது. ஆனால் நினைச்சது கிடைச்ச மாதிரி நினைச்சுப் பாத்துக்கறான். அப்படியே தேடித்தேடி ஓஞ்சு கண்ணசந்துட்டான். பாலன் களை முகத்தில் களைப்புப் பார்த்து நெஞ்சடைக்குது. இவனால்தானே இந்த வீட்டில் எனக்கு இவ்வளவு கவனம்! அவன் காலை எடுத்துக் கண்ணில் ஒத்திக்கிறேன். என்னை வெள்ளம் அடிச்சுட்டுப் போவுது. என் நினைப்பு ஒரு நொடி என்னண்டையில்லே. இல்லாமலே போயிட்டா எவ்வளவு நல்லாயிருக்கும்!

ஆனால் காலை யாரோ என்னிடமிருந்து பிடுங்கறாங்க திடுக்குனு முழிச்சுக்கிட்டேன். அவள் தாய், மவனை என்னிடமிருந்துவாரிக்கிட்டாங்கா. பையன் தூக்கத்தில் 'அப்பா'ன்னு முனகினான். அவங்க உள்ளே போறப்போ அவங்க புடவைத் தலைப்பு என் முகத்தில் பட்டுது. எனக்குக் கால்கட்டை விரலிலிருந்து உச்சி மண்டை வரை உடம்பு 'ஜிவ்'விட்டுப்

போச்சு; அம்மன் சன்னதிலே கற்பூர ஆரத்தி கண்டாப் போல். மேலே நட்சத்திரம் பூக்கொட்டுது. அவசரமா தான் போற போக்கில் ஏதோ விசை என்னைத் தொட்டுட்டுப் போவுது. என்னையும் நட்சத்திரமாக்கி எங்கோ மிதந்து போறேன்.

மரங்கொத்தி 'டொக்டொக்'.

காடையும் மைனாவும் குருவியும் விடிஞ்சு போச்சுன்னு உரக்க ஓதுது. ஆனால் யாருக்கு விடிஞ்சுது? கால், தான் போனவழி என்னைக் கொண்டு போவுது. இனி இங்கே எனக்கென்ன வேலை?

கால்வாயிலே தண்ணி காலில் கல்லைக்கட்டி இழுக்குது. கால்வாய் தாண்டி கழனிக் கட்டிலே அம்மாடி—என்ன பனி! உள்ளே பூந்துட்டேன். என் கை எனக்குத் தெரியல்லே. காலடியில் பூமி தெரியல்லே. உலகத்தின் ஆவியெல்லாம் மந்தையா இங்கேதான் மடக்கிப் போட்டாப் போல பனி புழுங்குது. ஆண்டவனின் பட்டறை இங்கேதான். ஒருஒரு ஆவியா அதனதன் பிறப்பிலே அவன் புடிச்சுப்போடற இடம் இதுதான்.

''இந்தா—உன் ஆயி அப்பன் யாருன்னு தெரியாமே, உன்னை எவள் பெத்துப் போட்டாளோ அந்த இடத்திலிருந்து உன்னை எடுத்து வளர்த்தது யாருன்னு தெரியாமே வளந்து, ஆயுசுக்கும் பிச்சை எடுத்தே. இதுவும் ஒரு புளைப்பா புளைச்சுகிட்டு இப்படியே புழுத்துப் போ''ன்னு ஒரு பிறப்பு.

''எல்லாமிருந்தும் எவனோ வந்தான், வந்து அருள் தந்தான், அந்த மருளில் கைப்பொருளை விட்டுட்டுக் காணாததைத் தேடிப்போய், நீ போனவிடம் உனக்கே தெரியாமே போயிட்டிரு''ன்னு இன்னொரு பிறப்பு.

''கடவுளே! இப்படியெல்லாம் உன் மக்களை ஏன் சோதிக்கறே?'ன்னு கேட்டால் ஆண்டவன் ஊமைன்னு அவனுக்காப் பேசறவங்க படிச்சவங்க பானை வவுத்திலே

சந்தனத்தைப் பூசிக்கிட்டு திண்ணையில் ஏடு படிச்சு விளக்கம் சொல்லி வக்காலத்து:

''உன் கஸ்டம் உன் வினை என் இஸ்டம். எல்லாம் நான் பிறப்பிச்சுது. என் பங்கு, என் விளையாட்டு, நண்டுக் குத் திண்டாட்டம் நரிக்குக் கொண்டாட்டம்தான் நியாயம். இந்த உண்மையை நீ உணர்ந்து, உன் எலும்பு உன்க ஸ்டத் துக்குக் கெட்டிப்படும் வரை நீ திண்டாடிக்கிட்டேயிருக்க வேண்டியதுதான்! அன்னன்னிக்கு அன்னன்னிப் பொழுதா தினம் ஒரு புளைப்பாய், இது பிறப்பா, இல்லை இறப் பான்னு என் பாவம் என் மலைப்பு. என்னை இப்போ மலையா பனிமூடுது. திகில் பிடிச்சு நின்ன இடத்திலேயே 'திக்'னு நின்னுட்டேன்—

—அப்போ அவுத்துவிட்ட கன்னுக்குட்டியாட்டம் ஓடி வந்து ஒரு தலை என் மடியில் முட்டிச்சு. நான் மூழ்கிப் போவாமே பையனை கெட்டியா கட்டிக்கிட்டேன். பனி கலைஞ்சுது. அவன் முகம்தான் என் சூரியன். பின்னால் அவன் அப்பன் வாயடைச்சு கண் கலங்கி நிக்கிறான்.

எட்டடி எட்ட திடுதிடுன்னு திடீர்னு பூமி கிடுகிடுக்குது. பனி கலைஞ்சு ஏத்தக் கேணி உள்சரிஞ்சு தண்ணி நுரை கக்கிட்டு மேல் எழும்புது. ஆனால் உள் சரிஞ்சு இப்போ பொங்கி வழியுது கேணியா?

நானா?

□□□

# வித்தும் வேரும்

ரமணியின் நிர்த்தூளி நாலு நாளாய்த் தாங்க முடிய வில்லை. ஏற்கெனவே துருதுரு. அதுவும் நாலு நாளாய் வீடு த்வம்ஸம். சுவாமி விளையாட்டாம். எதிர், அண்டைவீட்டு வாண்டுகளை ஜமா சேர்த்துக்கொண்டு ஜாலரா கொட்டுவ தும் எட்டுக் குரலில் பஜனை பண்ணுவதும், மரப்பாச்சியைச் சப்பரம் கட்டித் தூக்குவதும், அவன் அத்தை என் வேட்டி யைப் பட்டை தீட்டி. ஆசையாய் அவனுக்குப் பஞ்சகக்சம் வைத்துக் கட்டி, விபூதியைக் கட்டுக் கட்டாய் இட்டு, அவன் உத்ஸவரின் அர்ச்சகனாய், வீட்டுக்கு வீடு தன் படை யைப் பல்லக்குடன் நிறுத்தி, கற்பூரத்தைக் கட்டாயமாய் வாங்கிக் கொளுத்தி. தன்னைக் கொளுத்திக்காமல் இருக் கணும்மேன்னு அவன் பாட்டி வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு கத்தி (''இரு பாட்டி! போ, பாட்டி!!'') மாலை நான் வந்ததும் என்னிடம் கேஸ் (''இன்னிக்கு உன் பிள்ளை என்ன பண்ணினான்னு கேள், அவனையே கேள்! இவன் காலை முறிச்சிப் போட்டால்தான் கழுத்து மிஞ்சும். அலாதி யாய் உனக்குன்னு வீடு அகப்பட்டு, எங்களைக் கொண்டு வந்து வெச்சிருக்கையே இந்த அத்வானத்திலே! ஒரு கருவேப்பலைக் கொத்துக்கு சைக்கிளைப் போட்டுண்டு ஓட வேண்டியிருக்கு. ஆனால் லாரியும் மோட்டாரும் நிமிஷத் துக்கொண்ணா திக்குத் திக்கு—என் வயிறு திக்திக்—பறக்கற துலே குறைச்சலில்லே. ஏண்டா உனக்கெங்கேடா இப்படி நின்னவிடத்தில் நிக்காமல் தேளாய் பிறந்தது?'' 'உனக்'கை அழுத்தி அதில் எனக்கு ஒரு 'ஷொட்டு,] நான் காரணம்

வாங்கிக்கொள்ளாமலே என் ஆத்திரங்களை எத்தனை எத்தனையோ அத்தனைக்கும் வடிகாலாய் அவனை மொத்தி, அவன் வலிமீறிய ரோசத்தில் வீடு கிடுகிடுக்கப் பாட்டு வைத்து. அடுத்த நிமிடமே, கன்னத்தில் கண்ணீர் கறை காயுமுன்னரே, அலமாரியில் தொத்தி ஏறி, மேல் தட்டில் பம்பரம் தேடி, என் 'ப்ளாஸ்கை' இடறி 'ப்ளாஸ்கு' டூமீல்—

''ஏண்டா பாவி ஏற்கெனவே ஆறாம் வயசு மிலாறாய்ப் போயாச்சு. அத்தோடு வரவா போறவா எல்லார் வாயிலும் புகுந்து புறப்பட்டு தேஞ்சு மாஞ்சு சாகறே? என் வயிறு கொதிக்கறதே சண்டாளா!''

''ஏன் நீ மாத்திரம் அடிக்கல்லியோ! இப்பக்கூட சாப்பிடறப்போ தண்ணியைக் கொட்டினேன்னு முதுகிலே வெச்சயே!''

''பாவி! அவள் இடது கை வாகை குழந்தை முதுகிலும் காட்டினாளா? இங்கே வாடி என் செல்வமே—ஐயோ அஞ்சு விரல் கிண்டும் அறுத்துத்தான் எடுக்கணும்போல் எழும்பிப் போச்சே! நானும் என் பிள்ளையும் உன் அம்மாவுக்கு வரவா போற வாடா!''

''இல்லே பாட்டி நீ எங்க பாட்டி! அப்பா எங்கப்பா!!''

''சொல்லு சொல்லு இன்னொரு தடவை, என் வயிறு குளிரச் சொல்லு! என்னதான் தயிராத் திரிச்சாலும் பேசறது இன்னி ரத்தமா நேற்றைய ரத்தமா? தலைமுறை ரத்தம்னா பேசறது?''

கழுத்தைக் கட்டிக்கொண்டு, சிறிதும் வெட்கமற்று கன்னங்களில் மாறி மாறி முத்தமிடுகையில், நெஞ்சில் மூச்சு பந்து பந்தாய் அடைக்கிறது.

''ஏண்டா, இப்போதானே என்கிட்ட அடிதின்னே, ஏன் என்னைக் கட்டிக்கறே?''

''அடே போப்பா நீ—அது அத்தோடு போச்சு.''

''நீ ஏன் என்மேல் பிரியமாயிருக்கே?''

''எனக்கே தெரியல்லியே, ஆசையா வரதேப்பா!''

என்னை மீறி எழும் கேவலின் குமுறலில், என் உடல் அதிர்கையில், என் காலடியில் என் பூமி கிடுகிடுக்கிறது.

இப்போது மாடி அறையிலிருந்து நான் கவனிக்கையில் கீழே, எதிர் சாரி வீடுகளின் சுவரோரமாய், குனிமுகத்தில், தன் யோசனையில் தன்னையிழந்து தத்தித் தத்தி அவன் ஓடி வருகையில் (அல்ல போகையிலா?) அந்தச் சிறு கூடான உடம்பு, மேயும் கீரிப் பிள்ளையை நினைவூட்டுகிறது. அவனே தன்னுள் ஏதோ பாவனையில் தானிருக்கிறான்.

பின்னால் பெருமூச்சுக் கேட்டுத் திரும்புகிறேன். கையைப் பிசைந்துகொண்டு ஸைந்தவி நிற்கிறாள்.

ஸைந்தவி என்று ராகத்தின் பேராமே?

யாருக்குத் தெரியும்? யார் கேட்கிறார்கள்? யார் பாடுகிறார்கள்?

பாடினால்தானே கேட்க முடியும்?

ஸைந்தவிக்கே தெரியாது.

ஸைந்தவி, ஸைந்தவி பாடுவது இருக்கட்டும். ஸைந்தவிக்குப் பாட்டே சுட்டுப் போட்டாலும் வராது.

இத்தனைக்கும் அவள் தகப்பனார் பாட்டு வாத்தியார். அவர் பெண்கள் அத்தனை பேருக்கும் ராகங்களின் பெயர் தான்.

''இந்தப் பேர் என்று ஒன்று இருக்கிறதேப்பா அது பொல்லாத போலியப்பா!''

அம்மாவின் உடுக்கடி பாஷை ஒரு சமயம் சிரிப்பு வந்தாலும் ஒரு சமயம் 'சுருக்',

ஸைந்தவி கண்களினின்று புலுபுலுவென உதிர்வன அத்தனையும் முத்தானால், அதுவும் அவள் தொட்டால் சிணுங்கியாயிருப்பதற்கு, இந்த வீட்டில் புகுந்ததிலிருந்து

இதுவரை அவள் அழுதிருக்கும் அழுகைகளுக்கு நான் எவ்வளவோ பணக்காரனாயிருப்பேன். எங்கள் வீட்டுக் கொல்லைக் கதவிற்குத் தங்கத் தாழ்ப்பாளே பிணைத்திருப்போம், வாடகை வீடானாலும். சைந்தவிக்குச் சிரிக்கவே இடம் கொடுத்திருக்க மாட்டோம்.

[''இங்கே நான் சிரிக்கறேனா? சிரிப்பான்னா சிரிக்கறேன்!'']

இதோ இப்பவே அவள் விழிகள் அழத் தயாராயிருக்கின்றன. விழிமேட்டில் செந்நரம்புக் கொடிகளின் முறுக்கோட்டம் என் கழுத்தைப் பின்னி லேசாய் மூச்சுக் குழாயையிறுத்துகிறது.

என் விழிகளின் வினாவிற்குப் பதிலான மறுப்பில் தலையை ஆட்டுகிறாள். கீழுதடு பிதுங்குகிறது.

அவளைப் பிரிந்த பெருமூச்சு என்னைத் தொத்திக் கொள்கிறது. ஆனால் என்னிலும் தங்க இடமிலாது என்னின்று எழுகையில், அதன் எரிபாதையில் என் எண்ணங்கள், ஆசைகள், எதிர்காலத் திட்டங்கள் யாவும் கருகுவதை உணர்கிறேன்.

''என்ன சிரிக்கிறேன்?'' அவள் புருவங்கள் நெரிகின்றன. ''சிரித்தேனா என்ன?'' எனக்கே தெரியவில்லை, ''ஆனால் சைந்தவி, உன் கோபம் உனக்கு நகை போட்டாற் போலிருக்கிறது.''

''வேறென்ன நகை போடுவேள் நீங்கள்!''

இப்போது எனக்குத் தெரிந்தே எனக்குச் சிரிப்பு வருகிறது.

''உங்களுக்கு எல்லாம் சிரிப்புத்தான். உங்களுக்கென்ன?''

ஆமாம் எனக்கென்ன? ஒரு குறைச்சலுமில்லை. ஆபீஸில் என்னவோ அள்ளித்தான் கொடுக்கிறான். ஆனால் விரலிடுக்கில் அத்தனையும் எப்படி வழிந்து போகிறது?

வாங்குகையிலேயே எத்தனையோ பிடிப்புகள்.

வரும் வழியிலேயே அதற்குமேல் பட்டுவாடா.

அத்தோடு, தங்கை கலியாணத்துக்கு வாங்கின கடனுக்கு வட்டியைச் செலுத்திவிட்டு— கடனடையு முன்னரே தங்கை வீடு திரும்பியாச்சு—மிச்சத்தை அம்மா விடம் கொண்டு போய்க் கொடுத்தால், ''நீயே வெச்சுண்டு இந்த மாசம் நடத்து, எனக்கென்னடா, ஒரு வேளை சோறு. கிருத்திகையும் ஏகாதசியும் வந்தால் அதுவும் போச்சு!'' என்கிறாள்.

ஜயராமின் படிப்பு, முக்கியமாய் கணக்கு—எப்பவும் அவசர சிகிச்சையிலேயே நிற்கிறது. டியூஷன் வாத்தியார் சொல்கிறார்: ''நான் வெளிச்சமாகவே சொல்கிறேன். இந்த வருஷம் கேள்வித்தாளைக் குறிக்கும் சான்ஸ் எனக்கு வந்தால் உங்கள் பையனுக்கு மாத்திரம் 'அவுட்' பண்ணி விடுகிறேன். ஆனால் அப்படியாவது அவன் எழுதுவானோ? எனக்கே கேள்வியாயிருக்கிறது. நீங்கள் என்ன சொல் கிறீர்?''

இந்து (ஓ sorry, மிஸ் இந்துமதி) கான்வெண்டில் படிக் கிறாள். வகுப்பு என்னவோ சின்னதுதான். ஆனால், மாதம் ஒரு உடை, உடைக்கேற்றபடி செருப்பு மாறிக் கொண்டேயிருக்கிறது. பள்ளிவிட்டு 'டக்டக்'கென்று மாடியேறி வரும் சப்தம் கேட்கப் பெருமையாத்தானி ருக்கிறது.

ஆனால் கட்டுபடிதான் ஆகவில்லை.

ரமணி ஒரு நோஞ்சான்,

போன வருடம் சங்கராந்தியன்று இஸபெல்லா ஆஸ்பத் திரியில் மூக்கில் குழாயுடன் படுத்திருக்கிறான். ஸிஸ்டர் தெரிஸ்ஸா, கரண்டியில் மருந்தைக் கரைத்துக் குழந்தைக்கு ஊட்டுகிறாள்.

''My darling!''

அவள் விழிகள் வழிகின்றன. தலையிலிருந்து கால்வரை மூடித் தரை புரளும் அவ்வெண் ஆடையினின்று அவளுடைய தெனத் தெரிவன அவள் முகமும் கைகளும்தான். பீங்கான் பொம்மை போன்ற அக் கன்னங்களின் வழுவழுப்பைத் தொட்டுப் பார்த்தால் எப்படியிருக்கும்?

எங்கள் மேல் நிமிர்ந்த முகம் கடுகடுக்கின்றது.

"'படித்த மனுசனாம்! படித்த மனுசன்!!''

தமிழில்தான் சொல்கிறாள்.

நான் என்ன கண்டேன்? சித்தரத்தையிலும் அதிமதுரத்திலும், அம்மாவின் கைராசியிலும் சளி கரைந்து விடாதா என்றுதான் நினைத்தேன். ஏழைக்கபம், எங்கள் கபம் எல்லாம் அப்படித்தானே கரைந்தது? ஸைந்தவியின் கழுத்துச் சங்கிலியை வாங்கிக் கொண்டு அத்தோடுதான் கரையும் என்றா கண்டோம்?

அதற்கு முந்திய வருடக் கணக்குக் கக்குவான்.

'புக் புக்' என்று புகைந்த மூச்சு தொப்புள் வரை யிறங்கி, இன்னும் தாழ என்று உண்டானால் அங்கும் 'லொக்கு லொக்கி'க் கொண்டே முழங்குகையில், அத்துடன் நானும் என் நெஞ்சின் பாதாளத்தின் இருள் கிடங்குகளில் மூழ்குகிறேன். என்மேல் இருள் அலைகள் இடிந்து சரி கின்றன. ஆனால் இன்னமும் அதன் தரை தட்டாது சுழன்று கொண்டே செல்லும் குழந்தையின் மூச்சில் தொத்திக் கொண்டு, அந்தரத்தில், மையிருளில் தொங்குகிறேன். நூல் அறுந்தால் நான் 'கோவிந்தா'. ஆனால் நூல் அறவில்லை. தனி சீற்றத்துடன், தாங்காமல் சேத்துப்பட்டைத் தாண்டிச் செல்லும் புகைவண்டியின் ஊதல்போல், பூமியின் அடி வயிற்றினின்று, அதன் வேர்களைப் பிடுங்கிக்கொண்டு மேனோக்கி, என் நெஞ்சை ஆணியால் கிழித்துக்கொண்டே எழும்பிவரும் மூச்சின் 'க்றீச்'சைத் தாங்கமுடியாமல் செவி களைப் பொத்திக்கொள்கிறேன். சதையின் கீழ் வெடித்து

விடும்போல் உப்பும் குழந்தை முகத்தைக் காணச் சகிக்காது, என் கண்கள் தாமே மூடிக்கொள்கின்றன.

கண்ணைத் திறந்தால் டாக்டரின் பையன் கிங்கரன். எதிரே நிற்கிறான். [அவன் பெயர் சங்கரன்.]

டாக்டரின் பையன் — அவனேதான் அவருடைய பையன்.

க்ளீனர்;

தோட்டக்காரன்;

கம்பவுண்டர்;

பில் கலெக்டர்.

டாக்டர் நல்லவர்.

பையன் பொல்லாதவன்.

அதனால்தான் டாக்டர் பையனை அனுப்புகிறார்.

பாக்கியைக் கேட்பவன் பொல்லாதவனானால், டாக்டரின் பையன் ரொம்ப ரொம்பப் பொல்லாதவன்.

ஏனெனில் நான் ரொம்ப ரொம்ப ரொம்பப் பாக்கி!

ரமணியைப் பெற்ற பாக்கியை அவர் பையன்மூலம் கேட்டுக் கேட்டு விட்டொழித்தாரே ஒழிய, நான் கொடுத்து ஒழிக்கவில்லை.

ரமணியைப் பெற்றபோது ஸைந்தவி புதுப் பிறப்பாய்த் தான் மீண்டாள். சமயத்தில் ஏதேதோ கோளாறு.

ஆஸ்பத்திரியில் மறுநாள்தான் என்னைப் பார்க்கவிட்டார்கள். குஹை விழுந்து சப்பிப்போன அவ்வுடலையும், மூடிய இமைகளின்மேல் பஞ்சு படர்ந்திருந்த லோக அசதியையும் பார்க்கப் 'பகீரெ'ன்றது.

''ஸைந்தவீ!'' (என் குரல்தானா?)

இளைத்து, சீவனற்று, போர்வைக்கு வெளியே கிடந்த கைமேல் என் கையைப் பொத்தினேன்.

கண் திறக்கவில்லை. இரு கண்ணீர்த்துளிகள் விழியோரங்களில் நடுங்கின.

''ஸைந்தவீ, என்னை மன்னித்துவிடு!''

வெளுத்த உதடுகள் லேசாய் நடுங்கி, பிறகு புன்னகையில் இளகிச் சிவப்பு கட்டின, காய்மீது படரும் தளிரொளி போல், கண்ணைத் திறவாமலே, கால்மாட்டில் கட்டிலோடு கட்டிய தொட்டிலைச் சுட்டிக் காட்டினாள்.

அப்போது குழந்தையை நான் பார்க்கவில்லை. அது பிறந்தது என் தவறு. உறங்கட்டும். என் தவறைத் தட்டியெழுப்ப வேண்டாம்.

ரமணி எங்கள் தவறு என இருவரும் ஒரு மனதாய் நிச்சயித்தோம்; ஒரு மனதாய் நேர்ந்தவனை.

ஆனால் அப்படி நாங்கள் நினைத்தது தவறு என்று எங்களுக்கு உறுத்துவது போன்று, பரம்பரையின் வாக்காய் அவ்வப்போது அவனின்று வெளிப்படும் பேச்சாலும் செய்கையாலும் எங்கள் இருண்ட நேரங்களைத் திடீர் திடீரென ஒளிமயமாக்குகிறான்.

''அப்பா! அப்பா!!''

இதோ மேலே ஓடி வருகிறான்.

அவனுக்கு மூச்சு இறைக்கிறது. எங்களை மாறி மாறிப் பார்க்கிறான். மூக்கு நுனியில் திட்டாய் அழுக்கு.

''அப்பா! இன்னிக்கு ஒரு புது 'ப்ரண்டு' புடிச்சிருக்கேன்!''

''உனக்கென்னப்பா குறைச்சல்?''

''புது 'ப்ரண்டு'ன்னால் புது வால்!'' அவன் அம்மை முகம் சுளிக்கிறாள். ''குப்பையும் கோஷ்டமும் இன்னும் ஒரு பங்குகூட!''

''இந்த வால் என் வால் இல்லேம்மா! நிஜ வால்!''

''உன்னதெல்லாம் பின்னே என்ன பொய் வாலா?''

''இல்லேம்மா இது அப்பாவின் தர்மா ப்ளாக்கின் 'ப்ரஷ்' மாதிரி.

''என்னடா உளர்றே?''

"அணில்ப்பா அணில்!"

"காதண்டை வந்து கத்தாதே நான் செவிடில்லை."

"சொல்றது புரியாட்டா, புரிஞ்சுக்கற வரைக்கும் புரிஞ்சுக்காதவாள்கூட செவிடுதான்."

இதற்குப் பதில் என்னிடம் இல்லை.

இதற்குப் பதில் உண்டோ?

அவன் விழிகள் பளீரிடுகின்றன.

"நீகூட கதை சொன்னையே, ராமர் தடவிக் கொடுத்தார்னு அதே அணில்ப்பா, முதுகிலே நாமம் பளிச்சினு! இன்னும் கொஞ்ச நாளில் என்னைத் தொடவிடும். இப்பவே ரொம்பக் கிட்ட வரது. வேர்க்கடலையை என் கையிலிருந்து வாங்கிண்டிதப்பா! நிஜம்மா! சத்தியமா!"

"சீ—!"

"சரி இனிமேல்லேப்பா! பின்னே நீ நம்பமாட்டேன் கிறியே? ஒரு நாளைக்குப் பாரு, என் நிஜார்ப் பையிலேயே போட்டுண்டு வரேன். அப்பத்தான் நம்புவே. என் தட்டி லிருந்தே சாதம் எடுத்துக் கொடுப்பேன், தின்கறதா இல்லையா பாரு!"

"சீ! கண்றாவி அதையெல்லாம் வீட்டுக்குள்ளே கொண்டு வந்தையோ கொலை பண்ணிடுவேன் ஜாக்கிரதை!"

"சே இதென்னப்பா அம்மா இப்படி அசிங்கப்படறா? ராமரே தடவிக் கொடுத்தாரே, நம்ம தொடக்கூடாதா? அப்பா, அணிலுக்குள்ளே ராமர் இருக்காரோன்னா?"

"......"

"ஏம்பா முழிக்கறே? ராமர் கதைக்கு முன்னால் ப்ரகலாதன் கதை சொன்னையே, சாமி தூணிலும் இருக்கார் துரும்பிலும் இருக்கார்னு. ப்ரஹ்லாதன் சாமியும் விஷ்ணு, ராமரும் விஷ்ணுதானே! அப்போ ராமர்கிட்ட விஷ்ணு இருந்தால், அணிலில் ராமர் இருக்கமாட்டாரா? இல்லாட்டா அந்த விஷ்ணு நாமம் எப்படி அதன் முதுகில்

அப்படி விழும். அப்புறம் பிட்டுக்கு சாமி மண் சுமந்தப்போ அவர்மேல்பட்ட அடி, உலகத்தின் முதுகிலேயே விழுந்த துன்னையே? அப்புறம் அரியும் சிவனும் ஒண்ணு அறியா தவர் வாயிலே மண்ணுன்னே! எல்லாம் நீயே சொல்லிட்டு நீயே முழிக்கறையேப்பா!''

நல்லவேளை என் பதிலுக்கு அவன் காத்திருக்கவில்லை. ''நான் போறேம்பா, என் ப்ரண்டைப் பார்க்கணும்னு ஆசை வந்துடுத்து!!''

கூவிக்கொண்டே கீழே ஓடிப்போய் விட்டான்.

ஸைந்தவி, தான் வாய்விட்டுக் கேளாத கேள்விக்கு, என்னிடம் இல்லாத பதிலுக்குக் காத்திருக்கிறாள். அவள் கண்கள் குற்றம் சிந்துகின்றன. கண்கள் கேட்கின்றன.

ஜாக்கிரதை, ஜாக்கிரதை என்றீர்களே, அன்னிக்கு மன்னிச்சுக்கோ என்றீர்களே, உங்கள் ஜாக்கிரதையும் கேட்ட மன்னிப்பும் என்னவாச்சு? நீங்கள் மன்னிப்பு கேட்டு நான் மன்னித்து விட்டதோடு தீர்ந்து போச்சா?

''ஸைந்தவீ, மன்னிப்பு என்பது ஒரு புழுகு; மறதியை வளர்க்க மனம் கண்ட மார்க்கம். சுரணையை ஒடுக்கி, ஒரு வேதனையிலிருந்து இன்னொரு வேதனைக்கு நழுவி உழலும் வழி''—

என்று சொல்லத் தோன்றுகிறது. ஆனால் நாவில் எழுவது?

''ஸைந்தவீ என்னை மன்னித்துவிடு!''

ஆனால் அதையும் நான் சொல்லவில்லை. விழுங்கி விடுகிறேன். சொல்லி ஆவது என்ன? பொய்யைத்தான் மறுபடியும் நிறுவுகிறேன், என் வித்தை மறுக்கிறேன்.

ஸைந்தவீ, உனக்குப் பதில் என்னிடம் இல்லை. என்னை கையும் களவுமாய்ப் பிடிபட்ட குற்றவாளியாக்கப் பார்க்கிறாய். நான் குற்றவாளியில்லை. ஆனால் மன்னிப்புக் கேட்கிறேன், நான் குற்றவாளியில்லையென்று உன்னிடம்

நேருக்கு நேர் சொல்வதால், சொல்வது சமாதானமாகி விடுகிறது. என்னிடம் சமாதானம் இல்லை. சொன்னால் சமாதானம், சொல்லாமல் உள்ளுக்கே இருந்தால் உண்மை. உண்மையின் தன்மைக்கு நான் என்ன செய்ய?

ஆனால், வெளியிட முடியாவிட்டாலும், மனதிலாயினும் உனக்கு நாவில் வராத பாஷையில் நான் தெரிவித்தாகனும்.

நான் குற்றவாளியில்லை.

நான் களவாடவில்லை.

நான் களவு போனேன்.

அன்று மாலை, ஆபீஸிலிருந்து வந்ததும் நேரே மாடியேறி கட்டிலில் வீழ்ந்தபோது, நான் வேலையால் மாத்திரம் களைத்திருக்கவில்லை; துரையிடம் சொல்லடிப்பட்டு சோர்ந்திருந்தேன்.

அப்போது, என்னைத் தேடி நீ வருகையில், படிக்குப் படி கேட்டமெட்டியில், நான் உணர்ந்தது, என் மனதின் நோவிற்கு மனதின்மேல் ஒலியின் ஒத்தடம்.

குறிப்பிட்ட வேளையில், அலை முகட்டிற்கு வந்து, வாய் திறந்து மழைத் துளிக்குக் காத்திருக்கும் சிப்பிகள் அதே போல் இன்னொரு வேளையில் ஒன்றன்பின் ஒன்றாய் தாமே தம் வயிறு திறந்துகொண்டாற்போல், ஓசை பங்கு பிரிந்து, ஒவ்வொரு ஸ்வரமும் தன்னிடத்தில்தான் மலர்ந்தாற்போல்—

''ணக் ணக் ணக்.''

என் நெஞ்சில் தெறித்தது வேளையின் முத்து.

என்மேல் கமழ்ந்தது வேளையின் மலர்ச்சி.

இது என் பாஷையில்லை. எனக்கே தெரிகின்றது. ஆனால் கவிதையே வேளை தன் முழுமை கண்டதன் விளைவுதானே!

வந்து என் நெற்றிமேல் கைவைத்தாய்.

மாலையின் மங்கலில், தோரணம் தோரணமாய் இறங்கும் இரவின் நிழலில், கண் திறந்ததும் தெரிந்தது உன் நெற்றி மையத்தினின்று சரிந்த இருள் வீழ்ச்சிகள், சட்டமிட்ட முகத்தில் ஏற்றிவைத்த சிமிழ் விளக்குகள். உன் விழிகளின் ஒளியில், உன் நெற்றியில், உன் வெற்றியின் வர்ணக் கொடிபோல், ஒன்றன்கீழ் ஒன்றாய், தகடு தகடாய்,

குங்குமம்

விபூதி

மை

என் முகத்தில் உன் மூச்சு.

''மை நன்னாயிருக்கா? ஒத்தருக்கும் தெரியாமல் புதுசா வெச்சேன்.''

(அப்போ கள்ளி நீயா நானா?)

தந்திகளின் தன் மீட்டல் போலும் உன் வார்த்தைகள் இருளில் எங்கிருந்தோ மிதந்து வந்தன.

உன் குங்குமத்தின் சிவப்பில் தழலானேன்.

உதிரி விபூதியின் வெண்மையில் நீறானேன்.

உன் மை வைத்த இருளுடன் இரவின் கலவையில் இருவரும் நம்மையிழந்தோம். வேளையின் புன்னகையில், சமயத்தின் சிறப்பிற்கு இருவரும் சரணமானோம்.

இத்தனையும் உன்னிடம் சொல்லப் போனால் உனக்கு எவ்வளவு புரியும்? எனக்கேதான் எவ்வளவு புரியும்? நாமே புரியவா இருக்கிறோம்? புரிந்துவிட்டால் பிறகு சொல்லவே தான் என்ன இருக்கிறது? சொன்னால், சொல்லின் சிதைவு பட்டு, உண்மை பொய்யாகி விடுகிறது. ஆகையால், புரிந்ததுடன் புரியாததையும் ஏற்றுக்கொண்டு, அத்தனையும் உள்ளேயே வைத்துக்கொண்டு எல்லோரிடமும் இடிபட்டுக்—

திடீரென ப்ரேக்குகளின் ''க்றீச்'' முரட்டுத்தனமாய் என் சிந்தனையினின்று என்னை உலுப்பிற்று. தெருவில் ஒரே ஆரவாரம்.

"'D——n'' யார் பையன் இது?''

எங்கள் இருவருக்கும் ஒரே சமயத்தில் எழுந்த ஒரே எண்ணம் பொரிந்த ஒரே அலறலாய் இருவரும் ஒரு வாயில்:

''ரமணீ!''

எனக்கு உடல் வெலவெலத்துவிட்டது. நாற்காலியிலிருந்து நான் எழ எழத் திரும்பத் திரும்பக் கீழே தள்ளிற்று. கண்கள் இருண்டுவிட்டன.

மாடிப்படியில் 'திடுதிடு.'

''அப்பா! அப்பா!''

என் மடியில் பொத்தென்று ஏதோ விழுந்தது. பிறகு தான் உடலில் சுரணை மீண்டது. இன்னும் முற்றிலும் தெளியாத பார்வையில், என் கைகள் அவன் உடலில் இடமெல்லாம் தொட்டுத் தேடித் தவித்தன.

''அப்பா!''

மாரே வெடித்துவிடும்போல் குழந்தை விக்கி அழுகிறான்.

''ஐயோ ஐயோ! இதோ பாருங்களேன்!''

அவள் குரல் திடீரென ஏறிவிட்ட உச்சத்தில் தவித்து நூறு சுக்கல்களாய் உடைந்தது. ரமணியின் நிஜாரில் பட்டை பட்டையாய் ரத்தக் கறை. இன்னும் காயக்கூட இல்லை. நிஜார்ப் பையிலிருந்து தர்மாஸ ப்ளாஸ்க் ப்ரஷ் அடர்த்தியாய், ஒரு வால் எட்டிப் பார்த்தது.

''ஐயோ! அம்மாடி!!''

இடுப்பைப் பிடித்துக்கொண்டு, குன்றினாற்போல் தரையில் உட்கார்ந்துவிட்டாள். அவள் விழிகள் பிதுங்கி, ஒரேயடியாய் விரிந்தன. முகத்தில் வேர்வை கொட்டிற்று.

சுடரின் சீறல்போல், வலியில் புத்தொளி பெற்றுப் பொலிந்தாள்.

அம்மாவின் குரல் கீழிருந்து மேலே எட்டிற்று. பாவம்! அசதி. நேற்றுப் பிற்பகல் கெடுபிடியிலிருந்து அவளுக்கு ஓயாத அலைச்சல், கவலை, காரியம்.

ரமணி தன் நினைவிலாது படுக்கையில் ஓயாமல் புரள்கிறான். ஜ்வரத்தில் குழந்தை நெருப்பாய் ஜ்வலிக்கிறான். இப்போது தான் சற்று நேரமாய் அயட்டல் சற்று அடங்கியிருக்கிறது.

ஒரு இலைகூட அசையவில்லை. எனக்கு மூச்சு திணறிற்று, மூச்சுக்குக்கூடக் காற்று இல்லை. எழுந்து சென்று அறைக்குப் பின் இருக்கும் மொட்டைமாடியில் நின்றேன். பக்கத்துக் கொல்லையிலிருந்து. எங்கள் வீட்டுப் பக்கமாய்ச் சாய்ந்த தென்னையில் மட்டைகள், இரைக்குக் காத்திருக்கும் ஒரு ராக்ஷஸ எட்டுக்கால் அல்ல எத்தனையோ கால் பூச்சிபோல் கவிந்தன.

தூக்கமில்மாமல் எனக்குக் கண்கள், மிளகாய் இழைத்தாற்போல் எரிந்தன. இமைகள் தாமே மூடிக்கொண்டன.

ஸைந்தவி ஆஸ்பத்திரியிலிருந்து வர இன்னும் மூணு நாள் செல்லும். பிறகு உடம்பு உடம்பாவதற்கு ஒரு மாதமேனும் ஆகும்.

[டாக்டர்: "அந்த மட்டுக்கும் போச்சேன்னு கடவுளுக்கு வந்தனம் செலுத்துங்கோ சார், அவங்களுக்குத் திடீர்னு 'ஷாக்'கில், வேறே 'காம்ப்ளிகேஷன்' இல்லாமல்!"]

"அப்பா!"

அவன் குரலின் அமைதியே குடலைக் குழப்புகின்றது. விழுந்தடித்துக்கொண்டு உள்ளே நுழைகிறேன்.

"அப்பா!"

"என்னடா கண்ணு?"

மலா மலர விழிக்கிறான். ஆனால் இப்போது ஜ்வரத்தினால் அல்ல.

''அப்பா, சாமி இருக்காரா அப்பா?''

''ஏன் அப்படிக் கேட்கிறாய்?''

''சாமியிருந்தால் என் அணிலைச் செத்துப்போக விட்டிருப்பாரா?''

நான் குனிகிறேன்.

அவன் விழிகளின் புழுக்கம் என்னென்று புரிகின்றது. குழந்தையின் முதல் துயரத்தில் நம்பிக்கை தன் வேர்கள் கழன்று, ஆட்டம் கொடுத்துவிட்ட கிடுகிடுப்பு.

''துரும்பிலு மிருப்பார்னு சொன்னையேப்பா, சொல் லேன்!''

என்னிடம் பதில் இல்லை.

மொட்டை மாடியில் தென்னை மட்டையில் ஏதோ 'கொல்'லென்று அலறிற்று.

அந்தப் பிரம்மாண்டமான எத்தனையோ கால் பூச்சி யிடம் அகப்பட்டுக்கொண்ட இரையா? இல்லை, நடுநிசி யில் உலகம் தன் தனிமையைக் கண்டு தானே மிரண்ட வீறலா?

□□□

# சோம சன்மா

சோம சன்மா என்னும் 'பிரம்மன்' பாறைமீது கால்களை அழுந்த ஊன்றிக் கொண்டு, இளந்தாடி காற்றில் அலைய, கீழே பசிய மரஞ்செடிகள் அடர்ந்திருக்கும் பிரதேசத்தைக் கண்டு அதிசயித்து நின்றான்.

குருகுல வாசத்திலில்லாது, நேரே யோக சித்தியினின்று விழித்தெழுந்த பால சன்யாசியாதலின், அவன் மண்டையிலும் முகத்திலும் உடலிலும் மயிர் வெட்டாது அடர்ந்து வளர்ந்திருந்தது. மண்டையில் ஊறியிருக்கும் ஞான வெறியோ என்னவோ! சற்று மஞ்சள் பூத்த கண்கள், வீக்ஷண்யமாய்ப் பிரகாசித்தன. சமாதியினின்று திடுக்கென்று விழித்தெழுந்ததாலோ என்னவோ, சதா அழிந்து கொண்டும் மறுபடி மலர்ந்து கொண்டுமிருக்கும் இந்தப் பூவுலகின் அழகு, அவனை அப்போதுதான் வயிற்றிலிருந்து விழுந்த குழந்தை போல் பிரமிக்க அடித்தது.

பூமாதேவி, இளவேனிலில் குளித்து, குளித்த சுறுக்கில் பச்சைப் பட்டாடையை உடல்மேல் போர்த்திக் கொண்டிருந்தாள். அவளுடைய அவயவங்களின் வளத்தை எடுத்துக்காட்டி, மரமும் செடியும் கொடியும் பூவும் புதரும் அங்கங்கே பொங்கிப் புளகித்துப் பூத்திருந்தன. வெள்ளிச் சரிகை போல் ஓர் அருவி, பாறைகளினின்று சரிந்து, காட்டினுள் ஊடுருவிச் சென்றது. ஜலத்தடியில் வெள்ளைக் கூழாங் கற்களும் மணலும் பூமாதேவியின் அடிவயிறும்

பிரகாசித்தன. எவ்வளவு தின்றும் குன்றா வானவெளி யின் நீலத்தை, வெண் மேகங்கள் நிதானமாய் மேய்ந்து கொண்டு சென்றன. புள்ளினங்கள் காலையிலெழுந்து. குதூகலத்துடன் ஒன்றையென்று கூப்பிட்டுக் குசலம் விசாரித்துக் கொண்டிருந்தன,

சோம சன்மா கீழேயிறங்கிக் காட்டினுள் புகுந்தான். தாவர வர்க்கங்கள் தலை குனிந்து, அந்தப் பிராம்மணோத் தமனை வரவேற்றன. காயும் பழமும் இலையும், கைக்கு மாத்திரம் அல்ல, நேரே வாய்க்கே எட்டும் உயரத்தில் கனத்துத் தொங்கின. தரையில் ஜமக்காளம் விரித்தது போல் பச்சைப் புல். அகத்துள் வீற்றிருக்கும் பெம்மானை அர்ச்சிக்கும் பூக்கள், பக்குவ மலர்ச்சியில் பறிக்கத்தான் காத்துக் கொண்டிருந்தன. தவத்துக்கும் சிந்தனைக்கும் இதைவிடச் செளக்கியமான இடம் ஏது?

இவ்வெண்ணம் மனதில் பாய்கையிலேயே, பின்னால் 'வீல்' என்று ஓர் அலறல்! சோம சன்மா திடுக்கிட்டுத் திரும் பினான். இரு புதர்களினிடையில் ஒரு பெண்ணின் உருவம் கரிமின்னல் போல் கண்ணில்பட்டு மறைந்தது. பின்னா லேயே அதைத் துரத்திக் கொண்டு ஒரு ஜந்து ஓடி வந்து, சோம சன்மனைப் பார்த்ததும் திகைத்து நின்றது.

சிக்குப் பிடித்துச் சடைசடையாய்த் தொங்கும் மயிர். அதைச் சுற்றிலும் குடலைக் குழப்பும் ஒரு துர்நாற்றம். தடித்துத் தொங்கும் உதடு. அதைத் தள்ளிக்கொண்டு கோர மாய் இளிக்கும் பற்கள். தீராத வேட்கையின் மங்கிய சுடர் விட்டெறியும் கண்கள். மூச்சில் உலையனல் வீசிற்று. அதன் முற்றிய மூர்க்கத்தின் அடையாளமாய், நெற்றியில் இரு கொம்புகள் கொடி முடிச்சாய் முறுக்கிக் கொண்டிருந்தன. இதென்ன, மிருகமா அல்லது மிருக வேஷமெடுத்த அரக்கனா?

தவத்தைக் கலைக்க இம்மாதிரி ராக்ஷசர்கள் வருவது வழக்கமாயிற்றே! சோம சன்மனுக்குக் கோபத்தில் கண்கள்

சிவந்தன. ஹுங்காரம் பண்ணிக் கொண்டு, அவ்வரக்கன் மீது பாய்ந்தான். ஊளையிட்டுக் கொண்டு, அந்த மிருகம் புறமுதுகிட்டு ஓடியது. 'பிராம்மண' கோபத்தின் முன் எது தான் நிற்க முடியும்.........?

அந்தப் பெண் அடர்ந்து வளர்ந்த புதர்களினின்று வெளிப்பட்டு, அவனை வணங்கிய பொழுதுதான், அவனுக்கு அவள் நினைவு வந்தது. தாழ்ந்த குலத்தினள் தான். கன்னங்கறுத்த மேனி. ஆயினும், என்ன வனப்பு! அப்பெரும் விழிகளில் எவ்வளவு மருட்சி! மேனி பட்டுப்போல் மின்னியது. அச்சாய் அமைந்த அவயவங்களின் மனத்தில் எழுந்த ஆசையும், கண்ணை மறைத்தன.

'பெண்ணே நீ யார்?' என்னும் கேள்வி, தொண்டையில் எழுந்ததேயன்றி வாயில் கிளம்பவில்லை. ஆம், வாய்ச் சொல்லில் என்ன பயன்? அவள் நிற்கும் நிலையும் பார்க்கும் பார்வையும், அவள் மனத்தில் உள்ளதை வெட்ட வெளிச்சமாய் திறந்து காண்பித்தன. அவள் யாராயிருந்தால் என்ன? இவளை ஏற்றுக் கொண்டால் என்ன? காசியபப் பிரம்மா, மாயையைக் கூடவில்லையா? பராசரர், மச்சகந்தியை இச்சிக்கவில்லையா? ஸுப்ரஹ்மண்யன் வள்ளியைக் கொள்ளவில்லையா? பகவன் என்னும் பிராம்மணன் ஆதி யென்னும் பறைச்சியை அங்கீகரிக்கவில்லையா? முற்றிலும் கடந்தவனுக்கு குலமேது, கோத்திரமேது, வரம்பு ஏது?

அவள் கண்களால் சிரித்துக் கொண்டே, ஊடலாய்ப் பின்னிடைந்து ஓட ஆரம்பித்தாள். அவன் பின் தொடர்ந்தான். பாறைக்குப் பாறை மேட்டுக்கு மேடு தாவி, குன்றின் உச்சியை நாடி அவள் ஓடுகையில், அவள் உடல் கட்டின் விறுவிறுப்பும், சந்தனக் கட்டைபோல் வழுவழுத்த வளமான தொடைகளின் மிடுக்கான ஓடிப்பும், அவனைத் திணற அடித்து, மூளையில் வெறியை உண்டாக்கியது. வெகு வேகமாய்க் குன்றைச் சுற்றிக் கொண்டு போய், உச்சியில் திடீரென்று எதிரில் தோன்றினான்.

அவள் தப்பியோட வழியில்லை. முன்னும்பின்னும் பக்கங்களிலும், பாறைகள் மதில்கள் போல் எழும்பித் தடுத்தன. விலக்க முடியா விதியை ஏற்கும் விரக்தியுடன், பயத்தின் குளிர்விட்டு, அவனது ஆண்மையின் சீறலை எதிர் பார்த்துக் கொண்டு அவள் நிற்பதை, அவன் கண்டான். அவன் கண்களில் ஜ்வாலைகள் கிளம்பின. பிடறி விசிறி போல் சிலிர்த்தது. அவளிடம் தாவுகையில் அவளே ஆகாயத்தில் பறப்பது போலிருந்தது.

*　　　*　　　*

இளவேனில் கோடையாய் முதிர்ந்தது. நாளடைவில் வேகமும் விறுவிறுப்பும் குறைந்து, நடை தளர்ந்து, உடல் கனத்து, அவள் பாதம் பூமியில் பதிவதைக் கண்டான். ஆயினும் இந்த அயர்ச்சியிலும் ஒரு கவர்ச்சி. இந்தக் கனத்திலும் ஒரு மினுமினுப்பு, இந்த மெதுவிலும் ஒரு திமிர். அவனை அவள் இப்பொழுது நாடவுமில்லை. விரும்பவுமில்லை. தன்னில் தானே நிறைந்திருந்தாள். அவனை வேணுமென்றே ஒதுங்கியும் நின்றாள்.

பிறகு, ஒருநாள் மாலை அலைந்து திரிந்துவிட்டு வாழுமிடம் திரும்புகையில், அவள் மடியில் ஒரு சிசு, பால் குடிப்பதைக் கண்டான். அவன் நெஞ்சு நைந்தது. என்னதான் உயர் குலமாயினும் பெற்ற மனந்தானே! ஆனால் அவளுடைய மூர்க்கம் புரியவில்லை. குழந்தையினிடமிருந்து விடுவித்துக் கொண்டு ஓடிவந்து, அவனை முட்டியுதைத்து வீழ்த்தினாள். எதிர்பாராத வேளையில் அவள் தாக்கிய வேகத்தில், அவன் கால் சறுக்கிப் பாறையின் உயரத்தினின்று உருண்டு புரண்டு விழுந்தடித்துக் கொண்டு கீழே வந்து சேர்ந்தான். எழுந்ததும் உடல் மண்ணைத் தட்டிக் கொண்டு, வந்த கோபாவேசத்தில் அவளைச் சம்ஹாரம் பண்ணி விடுவதென்றே புறப்பட்டான். ஆயினும், அறிவு வந்து சமயத்தில் தடுத்தது.

—சீ, கேவலம் பெண் புத்தியைக் காண்பித்துவிட்டாள். அதிலும் ஈன ஜாதி, நம் வைராக்கியத்தை மறந்தது நம்மேல் அல்லவா தப்பு? விசுவாமித்திரன் மாதிரி ஏமாந்து போனோம். இது நமக்கு நல்ல பாடம். உன்னையே நீ எண்ணிப் பார்.

அவ்விடத்து மண்ணை உதறிவிட்டு, அப்பால் அகன்றான்,

* * *

தாவரங்கள் சில மலர்ந்தன. சில வாடிக் காய்ந்து கருகி யழிந்தன. நீர் இருந்த இடம் வறண்டு உலர்ந்து வெடித்தது. வெடித்த இடம் சுரந்தது, பூத்திருந்தது செத்தது. செத்தது மறுபடியும் வித்து வைத்தது. வாழ்ந்தது, அழிந்தது, பிறந்தது.

காலம் பல கோலமாய்ச் சென்றது. அவன் திகம்பர னாய், தன்னைத் தவிர வேறேதும் சிந்தியாது, காய் கனி இலை சருகுகளைத் தின்று அலைந்தான். அவனது தனித் தவத்தின் விந்தை யாதெனில், மேனி இளைக்கவில்லை. மயிர் சடைத்ததால், உடம்பில் உரம் ஏறி, ஆள் உருவாய் விளங்கினான். நினைத்தபோது ஆகாரம். கண்ட விடத்தில் படுக்கை. தாடி முழங்கால் வரை தொங்கியது. அதிலிருந்தே அவன் எவ்வளவு பெரிய தவசி என்று அவனுக்கே தெரிந்தது. அவனை அண்ட எதுவும் அஞ்சியது. அவன் மூச்சிலேயே அவ்வளவு அனல் நெடி,

பிறகு, ஒருநாள் காலை, —வில்வ இலைகளை உட் கொண்டு உள்ளத்தில் வீற்றிருக்கும் பெம்மானை அர்ச் சித்துக் கொண்டிருக்கையில், திடீரென்று அவனுக்கு உடல் இருப்புக் கொள்ளாமல் பரபரத்தது. யாரோ புதர் களிடையே யிருந்து, தன்னைக் கூர்மையாய்க் கவனிப்பது போன்ற சங்கடமான உணர்ச்சி. வாயில் அப்படியே ஒரு

வில்வ கொத்துத் தொங்கியது. அதை உள்ளே தள்ளி அதுக்கு முன், நாலு பேர் நாற்புறங்களினின்றும் பாய்ந்து வந்து, அவன் பாதங்களைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டார்கள். அவனால் அசையக்கூட முடியவில்லை. திடீரென்று அவனை ஒருவன் தோளில் ஏற்றிக்கொண்டான். பின்னால் மற்ற மூவரும் கொக்கரித்துக்கொண்டும் குதித்துக் கொண்டும் ஏதோ புரியாத பாஷையில் பேசிக் கொண்டும் பின் தொடர்ந்தனர்.

எல்லோரும் காட்டோரத்தில் ஒரு கிராமத்தை அடைந்தனர். அது கிராமங்கூட அல்ல. சேரி மாதிரி இருந்தது. இன்னும் ஏழெட்டு பேர் குடிசைகளிலிருந்து ஓடிவந்து, அவனைப் புரியாத பாஷையில் வரவேற்றனர். அவனை ஒரு குடிசைக்குள் கொண்டுபோய் இறக்கி, ஆகாராதிகளையும் ஜலத்தையும் அவன் முன் வைத்து விட்டு, கதவை மூடிக் கொண்டு எல்லோரும் வெளியேறினர்.

அவர்களுடைய 'பிராம்மண பக்தி,' அவனுக்குப் புரியவில்லை. வேளா வேளையிலும், வேண்டாத வேளையிலும் வேணும்வரை தீனி, ஆனால் வெளிக்கதவு மட்டில் எப்போதும் அடைப்பு. அவன் ஒன்றும் பேசவேயில்லை. மௌனித்திருக்கும் சக்தி வேறெதற்கு உண்டு? எவ்வளவுக் கெவ்வளவு நான் மௌனமோ, அவ்வளவுக் கவ்வளவு இவர்கள் நம்மைக் கொண்டாடும் பெருமையும் அதிகரிக்கும். தவிர, என்னதான் நடக்கிறதென்று பார்ப்போமே!

பின்பு—

ஒருநாள் உதயத்தில், சூரிய கோளம் தகதக என்று குன்றின் உச்சியை உதைத்துக் கொண்டு கிளம்புகையில், நாலு பேர் வந்து அவனை எழுப்பி, ஸ்நாந கட்டத்துக்கு அழைத்துப்போய், ஆசையாய், உடம்பை நன்றாகத் தேய்த்து, மயிரின் சடையையும் சிக்கையும் பிரித்து, உடல் பனிபோல் மின்னக் குளிப்பாட்டி, நெற்றியில் பதக்கம்போல திலகமிட்டு, தலையில் பூச்சுற்றி, கழுத்திலே ஆரமிட்டு, கொட்டும் மேளமுமாய்க் கிராமத்தைச் சுற்றி வந்தார்கள்.

நம்முடைய மகத்துவம் இவர்களுக்கு எப்படித் தெரிந்தது? என்ன மரியாதை, என்ன பக்தி; ஏதேது. இவர்களுக்கு அடுத்த ஜன்மமே யிருக்காது போலிருக்கிறதே! அத்தனை பேருக்கும் நேரே ஒரே புஷ்பக விமானந்தான்.

எங்கும் ஒரே புஷ்ப மயம். முன்னால் நாலு பேர், பக்கத்துக்குப் பத்து பேர். உடுக்குப் பாட்டு, பஜனை, தேங்காய், பழம், வெற்றிலை, சந்தனம், விபூதி, எலுமிச்சம்பழம், சாம்பிராணி.

கிராமத்தைத் தாண்டிக் காட்டோரமாய் ஒரு கோயிலை அடைந்தனர், சூர்ய கதியில் கோபுரத்தின் பித்தளை ஸ்தூபி நெருப்புக் கொழுந்தாய் எரிந்தது.

கோயில் பூசாரி தொந்தியும் தொப்பையுமாய், கையில் ஒரு செம்பு ஜலத்துடன் வெளிவந்து பெருத்த விழிகளுடன் சிரித்த முகத்துடன், அவர்களுடைய மகத்தான விருந்தாளியை வரவேற்றார். அம்மன் பிரசாதமாகிய அந்த ஜலத்தைக் கொஞ்சம் அவன் தலையில் தெளித்து விட்டு உள்ளே சென்றார்.

சோம சன்மா நின்ற இடம் த்வஜ ஸ்தம்பத்துக்கடியில். அங்கேயிருந்து நேரே பார்த்தால், வாகன மண்டபத்தைத் தாண்டி, உள்ளே இருளடைந்த கர்ப்பக் கிருஹத்தில், அகல் விளக்குகள் எரிவது தெரிந்தது.

மறுபடியும் உள்ளே போன பூசாரி, கன்னங் கறுத்த மேனியுடன் வெளி வருகையில், உள்ளிருளில் ஒரு பாகமே பிரிந்து வெளி வருவது போலிருந்தது. கழுத்தில் ஒரு தங்கச் சங்கிலி, கை மணிக்கட்டில் காப்பிட்டதுபோல் ஒரு புஷ்ப சரம், கையில் கத்தி, கத்திப்பிடியில் ஒரு சாமந்திக் கொத்து. பிறைச்சந்திரன்போல் வளைந்த அந்த அரிவாளின் கூர்மையில் காலை வெய்யில் பட்டதும், மின்னல்கள் பிறந்து ஒன்றுடன் ஒன்று கோத்துப் பின்னி விளையாடின. அவனை நோக்கி அவர் வந்தார்.

அப்பொழுதுதான் அவனுக்கு விஷயம் புலனாயிற்று— பனிப் படலங்கள் சூழ்ந்த மலையுச்சியில் ஏறுகையில், திடீரென்று பனித்திரை கிழிந்து, தான் செங்குத்தான ஒரு பாறையோரத்தில் கீழே அகண்ட பாதாளத்துக்கு நேராக அடியெடுத்து ஒரு காலை ஆகாயத்தில் தூக்கியவண்ணம் நிற்பதைக் கண்டால் எப்படியிருக்குமோ, அப்படியிருந்தது அவனுக்கு!

தப்பியோடக் கூடத் தோன்றாமல், மனமும் உடலும் வெலவெலத்து விட்டன. அதற்குள் சேர்ந்தாற்போல் ஐம்பது கரங்கள் இரும்புப் பிடியாய் அவன்மேல் விழுந்தாற் போலிருந்தது.

அவனையுமறியாமல். இத்தனை நாள் சாப்பிடுவதற் கன்றி வேறெதற்கும் திறவாத அவன் வாய் திறந்து, ஜகன் மாதாவின் காதுக்கெட்டவோ என்னவோ, தொண்டை யைப் பீறிட்டுக்கொண்டு, ஓர் அலறல் எழுந்தது.

''ம்—மே— ஹே—ஹே—''

இந்த உண்மையென்னும் உபயோகமற்ற தத்துவம் ஒன்றிருக்கிறதே, அது எப்பொழுதுமே பொய்யில்தான் புதைந்து கிடக்கிறது. அது வெளிப்படுவதற்கு வேளையோ நேரமோ கிடையாது. அதன் பலனை அனுபவிக்க முடியாத வேளையில்தான் அது புலனாகிறது.

இத்தனை நாளும், தான் சோமசன்மா எனும் பிராமண னாயிருந்ததெல்லாம் போய், கடைசியில் தான் கேவலம், பூர்வஜன்ம வாசனை முற்றிலும் விலகாத ஓர் ஆட்டு ஜன்மமே என்று அப்பொழுதுதான் தெரிந்தது.

அப்பவே வெட்டும் கழுத்தில் விழுந்தது.

□□□

# அலைகள்

நடுக் கோடையானாலும் பிற்பகலுக்குமேல் எலும்பு வரை ஒரு சிறு உள் நடுக்கம். சிவப்பு சால்வையைப் போர்த்திக்கொண்டு நாலு மணிக்கே வெய்யில் காய, கடற்கரைக்கு வந்தாகி விடணும். வீடு ரொம்ப கிட்ட. அந்த மட்டுக்கும் அவ்வளவு கிட்ட குடி பார்த்ததற்கு நடுப்பிள்ளை மகாராஜன்.

பையன்கள், பள்ளிக்கூடம் விட்டு, காலேஜ் விட்டு, ஆபீஸ்விட்டு 'மாடினி' விட்டு, அவகாசமாய். சேர்ந்தும், தனித்தனியாயும் பின்னால் வருவான்கள். அனேகமாய் அழைத்துப்போகத் தான் வருவான்கள். படகருகே, வலைக் குவியல்மேல் சாய்ந்தபடி, தாத்தா உட்கார்ந்திருக்குமிடம் அவர்களுக்குத் தெரியும்.

அம்மாடி, வெய்யிலின் இதமே! கடலின் தகதகப்பு கண்ணைப் பறிக்கிறது, இப்பவே கண் மட்டுத்தான். ஆனாலும் அதோ அலை உருவாவது தெரிகிறது. வருவதே அலைபார்க்கத் தானே!

முதலில் கடலின் அடி வயிற்றிலிருந்து ஒரு விம்மல். உடனே அதற்கொரு சிகரம். அத்துடன் அது கரை நோக்கி உருண்டு புரண்டு விரையும் ஒரு திரளல். வருகையிலேயே கரையிலிருந்து மீளும் சிற்றலைகள் அத்துடன் விழைந்து திருகும் ஒரு குழையல், சிகரம் உடைந்து வெண் நுரை அலை மீது சரியும் சுக்கல். சங்கதி ஏதோ சொல்ல வந்து, வாய்

திறந்து வார்த்தை வராமல்—இல்லை, ஒருவேளை அதன் பாஷையே அதுதானோ என்னவோ—ஆத்திரத்துடன் கரை மீது மோதியதும் குடம் பால் சரிந்தாற்போல், கரைவரை நுரை—கரை தாண்டிக் கூடி பெரிதாய்ப் பரவி, பெரிதும், சிறிதும் பொடிந்தும் நுரைக் கொப்புளங்கள் தனித்தனியாய், வெய்யிலை வாங்கிக்கொண்டதும், வர்ணங்கள் ஒவ்வொரு குமிழிலும் பிறந்து மிளிர்வது கண்கொள்ளவில்லை. இன்னும் அலுக்கவில்லை.

பொட்டலங்கள் போல் தலைமீது ஓலைப் பின்னல் குல்லாயும், அரையில் கோவணுமுமாய், கரிய உடல் நனைந்து, வெய்யிலில், எண்ணெய்க் காப்பிட்ட மூலவர்கள் போல் பளபளக்க செம்படவர்கள் கட்டுமரத்தை, சமயம் பார்த்து, பின்வாங்கும் அலைமுகட்டின் மேல் சவாரி தள்ளி, தாங்களும் ஏறுகிறார்கள்.

அலைமீது ஒரு மரத்துண்டு மிதக்கின்றது. அலையோரம் பூமி, அலையின் கடைசல் பிடிப்பில் தேய்ந்து பளபளத்துப் பிம்பங்கள் தேய்ந்து தெரிகின்றன. தென்றலின் அலைப்பில் அலைத் திவலைகள் முகத்தில் விசிறுகின்றன. தலைமயிர், கலைந்து தும்பைக் குவியலாகிவிட்டது. இங்கு வந்தாலே மனத்தின் புத்துயிர்ப்பு உடல் முழுவதும் பரவி, விறு விறுப்பது தெரிகிறது.

"தாத்தா! என்னா சிரிக்கறே?"

"தாத்தா! என்னா தலையாட்டறே?"

கரையோரம் நண்டு பிடிக்கும், கிளிஞ்சல் பொறுக்கும், காசை வீசியெறிந்தால் அதை மீட்க, அதன் பின்னாலேயே அலையுள் பாயும் செம்படவச் சிறுவர் சிறுமியரின் நையாண்டி.

"தாத்தா அது என்னா தலை அப்படி லொட லொடன்னு ஆடுதே! கழுத்துப் பூட்டு கயண்டுட்டுதா?"

"தாத்தா நீ பூம் பூம் மாடா?"

வந்த புதிதில் கடும் கோபம்தான் வந்தது. ஆனால் வைவதால், கைகொம்பைத் தூக்கிக்கொண்டு, அவர்களைத் துரத்திக்கொண்டு ஓடுவதால், அவர்கள் சீண்டலும் சிரிப்பும் இன்னும் மீறின. நிச்சயமாய் என் கையில் சிக்கமட்டார்கள் என்று எனக்குத் தெரிகிறது. போகப் போக இன்னொன்றும் தெரிகிறது. அவர்கள் தீங்கற்றவர்கள். நாளடைவில் அவர்கள் இளமையும் சிரிப்பும், சத்தமும் இயற்கையும் இளவெய்யில் போலவே எனக்கு வேண்டியிருக்கிறது.

''தாத்தா! நண்டு வேணுமா?''

''நெத்திலி வேணுமா?''

''கெண்டை ஒணுமா?''

ஒரு குட்டி மற்றவர்களைவிடத் துணிச்சல், கிட்ட வந்து நிற்கிறது, ஓடத் தயாராய் பாவாடைக் கொடுக்கைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு, விழிகள் கூத்தாடுகின்றன. ஏதோ முக்யமான ரகஸ்யத்தில் குரலை எல்லோருக்கும் கேட்க்கத் தாழ்த்தி, இமைகளைப் பூச்சி ரக்கைபோல் படபடத்துக் கொண்டு.

''தாத்தா! பெண்டாட்டி ஒணுமா?''

சிரிப்பு வெடித்து அவர்களிடையில் திகிறி சுற்றி என்னையும் தொத்திக்கொள்கிறது. தேவலை; இந்த அரைப்பட்டினியிலேயே இந்தத் துடுக்கு. கண்ணுக்கும் குறுகுறுப்பாய்த் தானிருக்கிறாள். வயதுக்கு நன்றாவேயிருப்பாள். ஆனால் வாய்தான் காதுவரை கிழியும். வாண்டு பாரேன் ''பெண்டாட்டி வேணுமா'' வாமே! சிக்காமு இப்போ இங்கிருந்தால் சும்மாயிருப்பாளா? வசை பாடியபடியே துரத்திக் கொண்டு ஓடுவாள்.

''சிறுக்கி நாக்கையறுக்க! ஏற்கெனவே பிராம்மணனுக்குச் சொல்லவேண்டாம்; நீ வேறே, 'என்ன வரம் வேணு'முனு கேக்கறையா?''

''ஐயோ பாட்டி, உனக்கு நாட்டுப் பெண்கள் வந்தாச்சு; நாங்கள் பேரப்பிள்ளைகளும் வந்தாச்சு; இன்னும்

தாத்தாவை இப்படிப் பேசாவிட்டால் தகாதா? உனக்கு இந்த வயசில் தாத்தாவைப் பார்த்து அசிங்கையா என்ன?''

''ஏன், நான்தான் வெல்லப் பொதியாய் ஆயிட்டேன். அவர் இன்னும் யாருமே அசிகைப்படற மாதிரி தானே யிருக்கார்! ஏன் பேரப் பிள்ளைகள் நீங்களே பாருங்களேன், வரிச்ச கழிமாதிரி நெட்டையா, நெட்டியா அந்த உடலும் கத்திமாதிரி மூக்கும்! இன்னும் அந்த முண்டா பனியன் தெரியணுமாம் அந்த மஸ்லின் ஜிப்பாவைப் பாரேன்! வயசுதான் ஆச்சே, பஞ்சக்கச்சம் வெச்சுக் கட்டிண்டால் பாந்தமாயிருக்காதா? ஜரிகைக்கரைவேஷ்டி தொங்கத் தொங்கப் பாதத்தை மூடி, தரையையும் தெருவையும் பெருக்கியாறது. மயிர்தான் பக்கெட் பக்கெட்டாய் காப்பி குடிச்சு, வெள்ளைக் கத்தாழையா நரைச்சுப் போச்சு. திண்ணையில் உட்காந்திண்டு வர வாளையும் போற வாளையும் பார்த்துப் தலை ஆட்டங் கண்டு போச்சு. இதுபோக உங்கள் தாத்தாவுக்கு என்னடாப்பா குறைச் சல்? காசுக்கு ஆசைப்பட்டானும் பெண்ணைக் கொடுக்க வரமட்டாளா? மனுஷனும் நான் இருக்கேனேன்னு பார்க்காட்டா, வந்த பெண்ணை வேண்டாம்னு சொல்லத் தயங்குவாரா?''

ஏலே சிக்காமு என்ன நீ என்னை பழித்தாலும், நீ மட்டும் உன் அலங்காரத்தில் மட்டோ? ''எல்லாம் இருக்கிறவரைக்கும் தானே'' என்று வழக்குப் பண்ணி உன் நாட்டுப் பெண்களுடன் போட்டி போட்டுக்கொண்டு, தீவளிக்குத் தீவளி பட்டுப் புடவை வாங்கிக் கட்டிக்கொண் டதில் குறைந்தாயோ?

''இருக்கிறவரை தின்னூட்டும் போறேன்''

''இருக்கிறவரை கட்டிக்கறேன்''

''இருக்கிறவரை பூட்டிக்கறேன்''

இது வயதானவர்களுக்கு நல்லதொரு ப்ரம்மாஸ்திரம். ஆனால் துருப் பிடிக்காமல், வயதிலிருந்தே உன்னைப் போல் உபயோகித்தவர் இல்லை.

''இருக்கிற வரைக்கும் தானே? திரும்பி வரேனோ யில்லையோ?'' என்று பிள்ளைப் பேறுக்குப் பிள்ளைப் பேறு பயமுறுத்திவிட்டு பிறந்தகத்துக்குக் கிளம்புவாய். கையில் குழந்தையை ஏந்திக்கொண்டு புத்தொளிர்வுடன் திரும்பி வருவாய். வண்டியை விட்டிறங்கி, அம்மாவிடம் குழந்தையைக் கொடுத்து நமஸ்காரம் பண்ணி வாங்கிக் கொண்டபின், என்னிடம் கொடுக்கையில், உன் முகத்தில் குழப்பம் வெட்கம், மகிழ்ச்சி, சிவப்பு. ஆயிரம் கேள்வி பதில்களுள், பாம்பு போல் நெளிந்து விளையாடும் சந்தேகம் ஒன்று என்னென்று எனக்குத் தெரியும். ''இருக்கிற வரைக்கும்'' என்று உன் பாஷையில் நீ நட்ட வேலிக்குள், நீ வரும் வரை நான் இருந்தேனோ என்பது தானே!

''நான் இருக்கிற வரையில் என் கண்ணில் மண்ணைத் தூவாதேங்கோ. நான் கண்ணை மூடினப் புறம் என்ன அக்கிரமம் நடந்தாலும் எனக்கென்ன தெரியப் போறது?''

உன் வழக்கமான ப்ரலாபங்களில் இதுவும் ஒன்று.

உன் சந்தேகத்துக்கும் உனக்கு ஒரு பாஷைதான். ஒவ்வொன்றாய் இவ்வுலகத்துள் நீ கொண்டுவந்த உன் பிள்ளைகளுக்கு நீ இட்ட சட்டத்துக்கும் அதே பாஷை தான்.

''நான் இருக்கிறவரைக்கும் உங்களையெல்லாம் ஒண்ணாவே பார்த்துண்டு இருத்துடறேன். நான் கண்ணை மூடினப்புறம் நீங்கள் எப்படிப் புட்டுண்டால் எனக்கென்ன தெரியப் போறது?''

சிக்காமுக்கு என்னவோ ஒன்றும் தெரியாதென்று தான் பெயர். ஆனால் ஒன்றுந் தெரியாதவர்களின்

பாஷைதான் எல்லாம் தெரிந்த பாஷை. சந்தேகத்தில் தான் அன்பு நெறி மீறிடுகின்றது.

சிக்காமு, நீ போன பின் உன் பல்லவியால் நீ போட்ட கட்டும் விட்டுப் போச்சுடீ! வேலையில் மாற்றிப் போன வன்கள் போக, மற்றவன்கள் ஒரு ஊரிலேயே மூலைக் கொருத்தனாய்க் குடித்தனம் பண்ணாறான்கள். வெளிச்ச மாய்ச் சொல்லாமலே என்னை ஆளுக்கு நாலு மாத மாய்ப் பங்கு போட்டுக் கொண்டிருக்கிறான்கள். அவர் களைச் குற்றம் சொல்வதிலும் பேச்சில்லை. உண்ணும் அரிசியை எண்ணி வடிக்கும் இந்த நாளில் ஒரே இடத் தில் ஊன்றிவிட முடியுமா? எல்லோரும் எனக்கு வேண்டிய வர்கள் தான். எல்லோரும் நான் பெற்ற பிள்ளைகள் தான். எல்லோரும் என்மேல் பிரியமாய்த்தானிருக்கிறான் கள். ஆனால் நாளைக்கு நான் தாம்பரம் கிளம்பப் போகிறேன். நாலுமாதம் அப்புவிடம் அங்கிருந்துவிட்டு அப்புறம் வில்லிவாக்கத்தில் வெங்கிட்டுகிட்டே. ஆகை யால் இன்னும் எட்டு மாதங்களுக்கு இந்த அலைகளிடம் விடை பெற்றுக்கொள்ள வேண்டும். பிறகு, பிழைத்துக் கிடைந்தால், எல்லாம் நல்லபடி நடந்தால் மறுபடி இங்கே வருவேன் சிக்காமு பாஷையில் எல்லாம் இருக்கிறவரையில் தானே! இருக்கிறவரையில் என்பது ஆனால் அலைகள் உங்களுக்கில்லை. நாங்கள் போன பின்னரும் நீங்கள் இருப் பீர்கள்; இங்கு வரண்டாலும் நெஞ்சில் அலைந்து கொண் டிருப்பீர்கள்.

சிக்காமு. நீ முற்றிலும் அறிந்தோ அறியாமலோ இருக்கிறவரை" என்று சொன்ன தன் பொருள், நீ இருந்தவரை உறைக்காமல், நீ போன பின் என் ரத்தத்தின் ஏக்கத்தில் உணர்கிறேன்' சிக்காமு, ஏக்கம் இருக்குடீ! இல்லை என்று எப்படி மறுப்பேன்? ஆனால் உனக்காக என்று சொல்ல முடியுமோ? நீ தெய்வத்துடன் கலந்து விட்டபின் உன்னை எப்படித் தனித்துக் குறிக்க முடியும்? நீ உயிரோ டிருந்தாலும், இரத்தத்தின் வெறியில் இந்த சமயம் நமக்கு

ஒருவருக்கொருவர் உடல்வழி ஆக வேண்டியது ஒன்று மில்லை என்றாலும், நீ போனபின் என் தனிமையை உணர் கிறேன். மாலை வேளைகளில் நான் கரையோரம் நிற்கையில், என் கால்களைக் கணு வரை கழுவும் அலை களில் அறிகிறேன். விளம்பில் என்னை நிறுத்தி விட்டு அலைகள் தாண்டிய அமைதிக்கு நீ சென்று விட்டாய். எல்லைக் கோடுகள் அழிந்த ஒன்றுடன் ஒன்றிவிட்டாய். அங்கிருந்து தனியாய்ப் பிரித்து உன்னை எப்படிக் கூப்பிட முடியும்?

சிக்காமு, நம்மிடையில் தர்க்கம் நேரிடும் போது—நம்மி டையில் தர்க்கம் இல்லாத நாள் உண்டோ? உன்னை ஓரிரு தரம் கைகூட மிஞ்சிவிட்ட வெட்கத்தில், அந்த நினைவின் வேதனையில் இப்பொழுது தலை குனிந்து உனக்கும் என்ன பயன், எனக்கும் என்ன சாந்தி?—நம்மிடையில் தர்க்கம் நேரிடும்போது, நீ எதிர்வாதாடும்போது கேட்பாயே "என்னைக் கரிக்கணும்னுதானே கட்டிண்டேள்?" என்று, அதிலும் ஒரு உண்மை யிருக்கிறதோ? கரிப்பதற்காவது ஒரு ஆள் வேண்டித்தான் இருக்கிருக்கிறது. தனிமையோ வேண்டியில்லை. அப்போது அக்கரிப்பும் எதிர்த்துருவங் களின் ஈர்ப்பேயன்றி கரிப்பாமோ?

"என்ன தாத்தா உனக்கே என்னவோ பேசிக்கறே?"

"பேசிண்டேனா என்ன? அது கூட எனக்குத் தெரிய வில்லை."

"என்ன தாத்தா அழுவறே?"

"அழுவறேனா!" கண்ணைத் துடைத்துக் கொள் கிறேன். ஆம், இமைகள் நனைந்திருக்கின்றன.

"தாத்தா நேரமாவல்லே, நீயாச்சும் தனியா குந்திட் டிருக்கையே! தாத்தா! முவம் உனக்கு ஏன் திடீர்னு இவ்வளவு துயரமாப் போச்சு? தண்ணிலே விழப் போறியா? உன்னைப் பார்த்தா எனக்குத் திடீர்னு பயமாயிருக்குது, தாத்தா!"

''பயப்படாதே குழந்தை. என் உயிர் தானே? போற நாள் வந்தாச்சே, அதுக்குள் நான் வேறு அவசரப் படணுமா?

''பேச்சென்னவோ நியாயமாத்தான் பேசறே. ஆனால் என் நயினா சொல்லிச்சு, போறவங்க கூட அப்படித்தான் பேசுவாங்களாம்—என்ன சிரிக்கிறே?''

''உன் பேச்சுக்குத்தான்''

''என்ன தாத்தா திடீர்னு அழுவறே, திடீர்னு சிரிக்கறே? நீ இடம்மாத்தி உக்காரு. சுடுகாட்டுலே தான் ஆவி நடமாடுதுன்னு நெனிச்சியா? இங்கே அதுக்கு மேலே தாத்தா! உங்களவங்க எத்தினிபேர் குளிக்க வந்து உள்ளேயே போயிருக்காங்க! எங்களவங்க பொழுதுக்கு வலையோடே கட்டுமரத்திலே போனவங்க எத்தினிபேர் திரும்பவேயில்லே! அவங்க மனையும் மக்களும் சோத்துப் பானையோடே கரையிலே காத்திருந்து காந்திருந்து குடும்பமே மணலோடு மண்ணா போயிருக்குது எத்தினி! இந்தத் தண்ணியிலே எத்தனை எலும்பு கரைஞ்சிருக்குது தெரியுமா? என் நைனா சொல்லிச்சு, உஜாராயிருக் கணும்னு. ஓயாமல் அலைபாயுதே சிலவங்களுக்கு சில சமயம் அத்தனை கைநீட்டி அவங்களை அழைக்கிற மாதிரியே யிருக்குமாம். உஜாராயிருக்கணும்னு என் நைனா சொல்லியிருக்குது.

''ஓ!''

''ஆமா, மெய்யாத்தான்! சாவணும்னுங்கற நினைப் பிலே வரக்கூடத் தேவையில்லியாம். இந்த அலை அழைக் கிற அழைப்பிலே சாவு பின்னாலே வந்து கழுத்திலே கையைக் கொடுத்துத் தள்ளுமாம்.''

''நல்லாப் பேசறையே பெண்ணே, உன் பேர் என்ன?''

''சிக்காமு—என்ன தாத்தா மாரைப்பிடிச்சுச்சிட்டே? தாத்தா தாத்தா ஒதுங்கு அலைவருது, அலை ஓடிவருது பாஞ்சு வருது!''

''வரட்டும் வரட்டும் சிக்காழு வந்து என்னைத் தொடட்டும்.''

''என்ன கொளந்தையாட்டப் பேசறியே! ஆனால் என் நைனா சொல்லியிருக்குது இந்தத் தண்ணி பெரியவங் களையும் கொளந்தையா ஆக்கிடுமாம்—''

''அதுவும் சரி. உன்னை அது தாயாக்கிய பின், என்னைக் குழந்தையாக்க வேண்டியதுதானே!''

''சரி தாத்தா, நீ போவமாட்டியா, எனக்குப் பொழுது சாயுது நான் போய் வாரேன்.''

''இல்லை குழந்தை, பொழுது உனக்கு இப்போதுதான் துவக்கம். பொழுது சாய்ந்தவன் நான். உன் ஆரம்பப்பசிக்கு பொழுது போதவில்லை, இன்னும் தேடி நீ போகிறாய். எனக்கோ இருக்கும்வரை உலகத்தின்போது அத்தனையும் என்னுடையதுதான். ஆகையால் அலையோரம் படுத்து, பொழுதை நான் அசை போடுகிறேன். நீ போய்வா அம்மா!''

போகிறாள், என்னைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே. அவளுக்கு என்மேல் இன்னும் சந்தேகம்தான். சிக்காழு பேரோடு இல்லை, சந்தேகமும் உன் போல்தானோ? உனக்கும் அவளுக்கும் ஜாடை ஒற்றுமை துளிக்கூட இல்லை. ஆனால் இவள் என்னைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு போகையில், எங்களிருவரிடையே தூரம் மிகுகை யில், ஏனோ இவளில் உன்னைப் பொருத்திப் பார்க்கிறேன். அதோ கரை முகட்டில் மறைந்து போனாள். அவள் மறைந்த இடத்தில் அலை புரண்டு வந்து மோதி மூடுகின்றது. அவள் போன வழியில் விட்டுச் சென்ற அவள் அடிச் சுவடுகள், அலைகளின் கடைசலில் பளபளக்கும் பூமிக்குத் தம் கோர்வையில் தனிமாலையாய், அர்த்தமாய்த் துவள் கின்றன. ஒருவேளை அலைகளின் சேதியை சொல்லவே வந்து, சொன்னபின், வந்த வழியே மறைந்த கடல் தேவதையோ? அப்படியே சிக்காழு நீ திரும்பி வந்து

போனாலும் நான் ஆச்சரியப்படமாட்டேன், என் வயதில் நான் எதற்கும் ஆச்சரியப்படலாகாது.

ஆனால் அந்தக் குட்டி சொன்னமாதிரி பொழுது சாய்ந்துதான் போச்சு. கொட்டிய மசிபோல் மேகங்கள் அலைகள் தாண்டிய கடலமைதியில் இறங்குகின்றன. இன்றிரவின் இருள் அங்கு பிறந்து கரைநோக்கிப் புறப்பட்டாச்சு. இன்றையக் கிறுக்கல்களை யழித்து, நாளையப் பாடத்திற்குக் கரும் பலகையைத் தயாராக்குவதுபோல், பூமியைத் துடைக்க இரவு புறப்பட்டாச்சு. கறும்பலகையின் சுத்தம் அதன் கறுப்பில்தான். இருளுக்குத் தக்கபடிதான் அதினின்று புறப்படும் ஒளி. அது வருகையிலேயே, அலைகள் கடலில் தம் இடைவிடா ஸ்னானத்தில், அதைத் தம்மிடம் இழுத்து, சேலையாய் அவசரச் சுற்றாய்த் தம்மேல் சுற்றிக் கொள்கின்றன. அவைகளின் மேடு தாழ்வு, என் கண்ணுக்கு மூடாந்தமான நிழல்களாகின்றது. உருவக் கோடுகளின் உள் அடைப்பில் தெரியும் வெறும் இருளின் இடையே அவ்வப்போ அலையின் வெண்நுரையோட்டம், கறுப்புப் புடவையில் வெள்ளி சரிகைபோல் ஒளி விட்டுவிட்டுக் காட்டுகின்றது.

அலைகளின் ஓயாத ஓசைக்கு என்செவி புதிதாய் விழித்துக் கொள்கின்றது. அம்முழு முழக்கத்தினின்று வித விதமான ஓசைகள் பிரிந்து வந்து, பாகுகூட்டி, என் நெஞ்சில் தந்தி அமைத்து இசைமீட்டலில், நான் புரிந்தும் புரியாததும், அறிந்தும் அறியாமலும் நினைவில் புதைந்த அருவங்கள், கதிர் முளைத்து எழுகின்றன.

அவசரத்தில் நான் ஸ்திரீகளின் ஸ்னானத் துறையில் இறங்கிவிட்டேன் போல், என்னைச் சுற்றி வெட்கம் கலந்த வெற்றிச்சிரிப்புகள், கேலிக் கொக்கரிப்புகள், சீற்றச்சீறல்கள், விரட்டலுடன் அழைப்பு கலந்த கூவல்கள், நீண்ட பெருமூச்சுகள், எல்லாம் ஒருங்கே நினைவில் அலைமோதுகையில் குழலினின்று ஜலமெனச் சிரிப்பு என்னின்று பீச்சியடித்து, என் நினைவு ஒட்டுக் கேட்குங் அரவங்களுடன்

மோதியுடைந்து, ஸ்படிகச்சிற்கள் உதிர்கின்றன. அவைக ளூடே, வருடங்களின் பின்னணியில் புதைந்துபோன நினை வின் மொத்தமான அருபம் புகுந்து புறப்படுகையில், ஒளிச் சிதர்களாய் ரூபம் பிரிகின்றது.

மடித்த விசிறி திடீரென விரிந்தாற்போல்,
பஞ்சவர்ணக்கிளி சிறகு விரித்துப் பறந்தாற்போல்
கோடைமழையில் வானவில் வளைந்தாற்போல்
காலடியில் மழைத்தேக்கத்தில் ஜாலவர்ணங்கள்
தோய்ந்தாற்போல,
சுண்டிய தந்தி தன் விதிர்விதிர்ப்பில் எட்டுத்
தந்திகளாய் விசிறினாற்போல்,
மந்தர ஸ்தாயியில் குரலின் கனத்த கார்வைபோல்
நான் ஒண்டியில்லை எத்தனை எத்தனையோ!

சிக்காமூ, நீயும் தனியில்லை. நீயும் அத்தனை அத்தனை. உன் பேர் சிவகாமசுந்தரி. நீ சிவாவாயும் காமுவா யும் சுந்தரியாயும் சிதறிப் போனாய்.

சிவை சிவே, பவே பவீ
காமு, காமி, காமினி, காமா, பூமா, ரமா, ஹேமா
காமாக்ஷி, மீனாக்ஷி, அஞ்சனாக்ஷி, அஞ்சனா, காஞ்சனா
சுந்தரி, நிரந்தரி, சுந்தரா, சுந்தா, சுந்து, சுகந்தி...

பெயர்கள், பெயர்களின் ஓசை, ஓசைகளின் சாயை, சாயையிலிருந்து மறுபடியும் ததும்பும் பெயர்கள். பெயர் களைத் தாங்கும் உயிர்கள், உயிர்களின் தனித்தனி வாழ்வு களாய்ப் பிரிந்து விட்டாய்.

இத்தனை பேர்களுடன் நானும் தனித்தனிப் பிரிந்து அவரவர்களின் தனித்தனி இயல்புடன்பின்னி இழையோடு கின்றேன்.

சிவகாமூ, உடல் பறக்கிறதடீ! இப்போ என்ன நேர்ந்து கொண்டிருக்கிறது? நான் பேசும் பாஷையென்ன? நான்

எங்கேயிருக்கிறேன்? சிவகாமு, நீ வேறு நான் வேறு, நீயுமில்லை, நானுமில்லை. ஸ்ருதி பிறப்பித்துப் பிரிந்த பேதங்கள் மறுபடியும் கூடிய ஒன்று. மறுபடியும் ஒன்றி லிருந்து. நூறு. ஆயிரம், ஒன்றின் லக்கத்தின் பக்கத்தில், விழி விழியாய்ச் சுழித்த எத்தனையோ சுழிகள், ஒவ்வொன்றாய், உடன் உடனே அடுக்கடுக்காய் விழிக்கையில், அலைகளின் விளிம்பிலிருந்து நான் விழுந்தேனா, நீ பின்னிருந்து தள்ளி னாயோ, முன்னிருந்தே, கைப்பற்றியோ, கால்வாரியோ இழுத்துவிட்டாயோ? நான் உள் அமிழ்ந்துகொண்டே போகும் ஆழத்தின் சுழிப்பில், என் உயிரின் வெறும் தாது வாய் என் உள் ப்ரக்ஞை மாத்திரம், தன் வியாபக பூரணத் தில் அடித்துக் கொள்கின்றது. சிவகாமு, இந்நிலையை ஆத்மாவின் ராஸக்ரீடையை கரையிலிருந்தாலும் சரி, கடலி லிருந்தாலும் சரி, உனக்குப் புரியச் சொல்ல எப்படி என் னால் ஆகும்?

அட, உனக்குச் சொல்லித்தான் ஆகவேண்டியது என்ன?

இந்தச் சமயத்தின் பக்குவத்தில், என் இதயத்தில் அன்பு பொங்குகிறது. யார்மேல், என்னால் குறித்துச் சொல்ல இயலாது. காலமும் இடமும் உருவமும் என் ப்ரக்ஞையின் இஷ்டத்திற்கு வளைந்து கொடுக்கும் இந்நேரத்தில், தன்னையே ஒருபெரும் இதயமாய்க் காண்கிறேன். அது சுரக்கும் அன்பில் என் ரத்தம் எல்லாம் பாலாய்மாறி இதயம் நிரம்பி வழிந்து, தன்னைச் சுற்றிப் பாலருவிகள் கிளை யோடி, ஒன்றி ஈரருவி ஓரருவி, ஓரருவி பேரருவி, பேரருவி பாற்கடலாய்ப் பரவிவிட்டது. அலை கக்குவது அலைநுரை யன்று; அன்பு வெள்ளத்தின் பால்நுரை இவை அலை களல்ல, உள்ளத்தின் நெகிழ்ச்சிகள்; ஆத்மபரவசத்தில் ஆங்காங்கே ப்ரஞையின் விம்மல்கள்.

நிழலுக்குச் சட்டென சாளரத்தை இழுத்தாற்போல், கண்இமைகள் என்மேல் பாதி கவிந்துவிட்டன. இந்த நிலை யின் பாதையில் அரைக்கண்தான் முழுக்கண்ணோ? அரைக் கண்ணின் நிழலும் முழுவிழிப்பின் ஒளியாலுமாய் நினை

வோட்டத்தில், திரவியங்கள், ஞாபகங்கள், எண்ணங்கள், சம்பவங்கள் பிதுங்கி, கழன்று, தம்மைத் தாமே சுழன்று, மிதந்து செல்கின்றன.

இப்போது பாதாளம் தன் அடிவயிற்றில் பதுக்கி வைத்திருக்கும் புதையல்களும், சப்தரிஷிமண்டலம் ஏர்பூட்டி ஆகாயத்தை உழுது. அதைச் சுற்றிச் சிதறி கிடக்கும் மணிக் கற்களும், பூப்பொறிகளும் பொன்விதைகளும் ஒன்று கலந்து அவை நடுவே நான் திளைக்கிறேன். ஒவ்வொரு எண்ணமும் ஒரு நக்ஷத்திரச்சுடர். ஒவ்வொரு உணர்ச்சியும் ஒவ்வொரு ஞாபகமும் ஒரு சதங்கைமணி—கல் கல் கலீர் கிண் கிண் கிண் கிணி ஒவ்வொரு சம்பவக் கோர்வையும் ஒரு மலர்ச்சரம். இங்கு பகையென்பதேயில்லை. பகைகூட நாகம் கக்கிய நாகமணியாய்ப் பொலிகிறது.

ஆனால், நானே என் தன்மையில் பகை பாராட்டுபவனல்ல என இப்பொழுது நிச்சயமாய்த் தெரிகின்றது. நெஞ்சில் வைத்துக்கொண்டு நஞ்சாய்ப் புகையுமளவுக்கு எனக்கு நெஞ்சில் அழுத்தமில்லை. அப்பாகூட கவலைப் படுவார். ''மாதவா, புற்றுமண்ணாய்ப் பிசுபிசுக்கும் மனசை வைத்துக்கொண்டு நீ எப்படித்தான் உலகத்தில் பிழைக்கப் போகிறாயோ? போவோர் வருவோர் எல்லாம் உன் தலையைத் தடவித் தடவி நீ உருப்படுவதெப்போ?''

அம்மா அடுப்பங்கரையிலிருந்து வெளிப்படுகிறாள். ஒரு கையில் தட்டில், வெங்காய பஜ்ஜியின் வாஸனையும், மறு கையில் டம்ளரில் ஆவிபறக்கும் காப்பி மணமும் கலந்து எனக்குத் தலை லேசாய் சுற்றுகிறது.

''ஆமாம் உங்களுக்கும் எனக்கும் என்ன வந்தது? நம் பிள்ளையை நாளுக்கும் நாமே அடைகாத்திண்டிருக்க முடியுமா? அதனதன் தலையில் ஆண்டவன் எப்படி கிறுக்கியிருக்கானோ அப்படித்தானே நடக்கும்! கெட்டிக்காராள் எல்லாம் என்ன கயட்டிப்பிட்டா?''

உண்மையில் அம்மா என்னைச் சலித்துக் கொள்ள வில்லை. அம்மாவின் பாஷை என்னவென்று எனக்குத் தெரியும். அம்மா அப்பாவை விலாவில் குத்துகிறாள். அப்பா உருட்டிவிட்டாற் போலிருந்த நாள், நடந்தால் பெருச்சாளி ஓடுவதுபோல் இருந்த நாள் எனக்குத் தெரியும். அப்பாவை இப்போ X-ரே எடுக்க வேண்டிய அவசியமே யில்லை. இப்போது விலாவெலும்புக்குள் 'ராக் ராக்'காய் முண்டி நிற்கின்றன. அந்த நாளில் தைத்த சட்டைகள் அவர்மீது இப்போ 'லாலிபீலி'யாய்த் தொங்குகின்றன. ஆனால் அம்மாவுக்கு இரக்கமில்லே. அம்மாவின் மறையடி சொல்குத்து அப்பாவின் விலாவில் 'சதக்'கென்று இறங்குவது எனக்குத் தெரிகிறது. கேட்கிறது என்றுகூட சொல்வேன். அந்த ஊமைவலியில் அப்பாவுக்கு மூச்சு கொக்கி வாங்குவதும் தெரிகிறது.

''பிள்ளையைச் சொல்லப் போய்விட்டாயே. நீ என்ன வாழ்ந்தாய்?'' என்றுதான் அம்மா சொல்லாமல் கேட்கிறாள். இந்த வீட்டில் நுழையும்போது என்னோடு கொண்டு வந்த பிறந்த வீட்டு சொத்து. கொஞ்சமாய்க் கொண்டு வந்தேனா? அத்தனையும்,

''பஸ் ஸர்வீஸ் ஓட்டறேன்''

''பால் பண்ணை வைக்கிறேன்.''

''Share மார்க்கட்டில் விளையாடறேன்''

''பிஸினேஸ் பண்ணறேன்''

(அம்மாவின் உச்சரிப்பின் கொச்சையில் சிந்தும் கேலியையும் வைரத்தையும் என் ஓசையில் கொண்டுவர முடியவில்லை) என்று அழிச்சது யார்? யாரிடத்திலும் ஏமாறாதவாள் வண்டவாளம் எல்லாம் எனக்குத் தெரியாதா என்ன?'' என்று பளிச்சென்று கேட்காமலே இடிக்கிறாள். பாவம், அப்பாவின் உடல் குன்றுவதைப் பார்த்தால் பரிதாபமாயிருக்கிறது.

ஆனால் அம்மாவைப் பார்த்தாலும்தான் பாவமாயிருக்கிறது. கல்லுக்கணக்கில் கழுத்து கனக்க காசுமாலையும், வடம் வடமாய்ச் சங்கிலியும், கையில் பூட்டிய பொன்விலங்காய் கெட்டிக்காப்பும் போட்டுக் கொண்டு வளைய வந்ததெல்லாம் எனக்கே ஞாபகமிருக்கிறது.

''மரத்தொட்டிக்குப் பட்டை போட்டாற்போல், ஒட்டியானம் உனக்குக் கணிசண்டீ!'' என்று அப்பா அம்மாவின் (அந்தநாள்) உடல் 'கொஷ்குமுஷ்கு'வைக் கேலிபண்ணுகையில், அம்மாவுக்குக் கோபத்தில் கண் துளும்புகையிலேயே, சிரிப்பில் கன்னங்குழியும் (''ஐய, என் அதிர்ஷ்டமே!'')

ஆனால் ஒருநாள் இருவருக்குமிடையில் 'லடா'யில் அம்மா எது எதையோ கழற்றிக் கொடுத்துவிட்டு, சமையலறையில் நுழைந்து அடுப்பெதிரில் தலைமேல் கைவைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்ததும், அடுப்பு சரியாய் எரியாமல் புகைந்து கண்ணைக் கரித்ததால் ஆத்திரத்துடன் கிண்ணி நெய்யை, கூடத்தில் அப்பா காது கேட்க நெருப்பில் 'ஸ்வாஹா!' என்று சொல்லிக் கொண்டு ஆஹுதி விட்டதும் ஞாபகம் வருகிறது ஜவாலை 'குபீ'ரென்று கிளம்பியதும் அம்மா, ''மாதவா, இது என் வயிறுடா!'' என்றாள்.

எனக்கும் துக்கம் தொண்டையை அடைத்தது.

அம்மாவின் கழுத்தெலும்புக்குழியில் மஞ்சள் கயிறு மாத்திரம்தான் தங்கியிருக்கிறது.

அப்பா அம்மா இரண்டு பேரைப் பார்த்தாலும் பாவமாயிருக்கிறது.

ஆனால் எனக்கு யாரைப் பார்த்தாலுமே பாவமாயிருக்கிறது.

நான் இன்று முதல் யாரிடமும் ஏமாறப் போவதில்லை.

* * *

குருட்டு யோசனையில், வாசற்படியில் உட்கார்ந்திருக்கிறேன்.

''ஷாமி!''

திடுக்கிட்டுத் திரும்புகிறேன். என் வலது பக்கத்தில் இரண்டு குருவிக்காரன்கள் நிற்கிறார்கள். நாள் கணக்கில் குளிக்காமல் உடல்வாடை நேரிடையாய் முகத்திலடித்தும் வயிற்றைக் குமட்டுகிறது.

இருவர் கழுத்திலும் வரிவரியாய், கறுப்பும் சிவப்பும் வெள்ளையுமாய்ப் பாசிமணி மாலைகள் தொங்குகின்றன. உடம்பிலும் முகத்திலும் மீசையிலும் அழுக்கு காய்ந்து, கறையோடிக் கிடக்கிறது.

''இவன் என் தம்பி. இவன் பெண்சாதி அதோ புள்ளார் கோவிலுக்குப் பின்னாலே மரத்து மறைவுலே இடுப்பைப் புடிச்சுக்கிட்டு, பல்லைக் கடிச்சுக்கிட்டு துடிக்கறா. உன் காலைப புடிச்சுக்கிட்டு கெஞ்சறோம்—'' என் கால்மேல் கைவைக்க வருகிறான். விரல்நுனி பாதத்தில் படுகையிலேயே எனக்கு உடல் குலுங்குகிறது. ''எங்கள் மானம் நீதான் காப்பாத்தணும். இவன் பெண்சாதி உன் தங்கச்சி மாதிரி. எங்களுக்கு ரொம்ப வேணாம். ஒரு வண்டிச் சத்தம், அவ்வளவு தான். எங்கள் கூட்டத்துலே போய் ஷேர்ந்துட்ட அப்புறம் கவலையில்லே.''

நான் அவசரமாய் ஜேபியில் துழாவுகிறேன். இரண்டு ரூபாய்கள் தட்டுப்படுகின்றன.

இளையவன் ஊமையாகவே நிற்கிறான். அவன் வேதனை அவனுக்கு வாயடைத்து விட்டது. அண்ணன் கண் தளும்புகிறது. அவனுக்கு என் தகப்பனார் வயது இருக்குமோ?

'ஷாமி, உன் புண்ணியத்தை என்னிக்கும் மறக்கமாட்டேன் உன் ரூவா எங்களுக்குச் ஷும்மா வேணாம். நாங்கள் பிச்சையெடுப்போம். எச்சில் தின்னுவோம். ஆனால் இப்போ உன் துட்டு எங்களுக்கு ஷும்மா வேணாம். இதோ-இதோ''- அவசரமாய் ஒரு கறுப்பு மணிமாலையைத் தன் கழுத்திலிருந்து கழற்றி என் கையுள் திணிக்கிறான். ''இது

சின்னதுன்னு நினைக்காதே ஷாமி, இது எங்கள் ஷத்தியம். ஷாயங்காலமோ, காலையிலோ ஒரு மான்தோல் கொண்டு வந்து உன்கிட்டே கொடுத்துட்டு பாஷி மணியை மீட்டுப் போவோம். என்னவோ நினைக்காதே. நாங்கள் பொய் சொல்லுவோம், ஷத்தியம் வைப்போம். ஆனால் சொன்ன சொல் தவறமாட்டோம். நினைப்பிலே வெச்சுக்க. நாங்க தேசிங்கு ராஜா வம்சம்—வரோம் சாமி—''

மாலை வருகிறது.

ஒருத்தருக்கும் தெரியாமல், அந்த பாசிமணியைப் பனியனுக்கடியில் அணிந்து கொண்டிருக்கிறேன்.

மறுநாள் காலை வருகிறது, போகிறது.

ஒருவாரம் ஆகிறது.

''இவன் பெண்சாதி உன் தங்கச்சி மாதிரி!''

நள்ளிரவில் தட்டியெழுப்பினாற்போல் விழித்து கொள்கிறேன்.

கழுத்தைப் பாம்பு சுற்றிக்கொண்டாற்போல், ஒரு பயங்கரச் சில்லிப்பு.

இம்மாதிரி எத்தனையோ பொய் சத்தியங்களை விழுங்கிவிட்டு-அதுவே ஒரு தனி உயிர் பெற்றுவிட்டதோ?

பயவெறியில் அப்படியே கழுத்தினின்று அறுத்து ஜன்னல் வழி வீசி எறிகிறேன். மீது நேரத்துக்கு சரியாகவே தூக்கம் வரவில்லை. அது யாரையாவது கடித்துவிட்டால்?

விடிந்ததும் குழிதோண்டி, யாரும் கண்காணாது அதைப் புதைத்து விடவேண்டும்.

ஆனால் மறுநாள் அது விழுந்த இடத்திலும் தோட்டம் முழுதும் சல்லடைபோட்டுச் சலித்தும் அது கிடைக்கவேயில்லை. வெகுநாள் அது மறைந்த கிலேசம் மனதை உறுத்திக்கொண்டேயிருந்தது.

பிறகு ஒருநாள் மாலை ஆபீஸிலிருந்து சைகிளில் திரும்பி வருகையில் இரும்பு வாராவதி ஓரத்தில் இரண்டு பேரையும்

பார்க்கிறேன். மும்முரமாய் பதினெட்டாம் புள்ளி ஆடிக் கொண்டிருக்கிறார்கள்.

''ஊம்; என்ன பிறந்திச்சு உன் தம்பி சம்சாரத்துக்கு, பெண்ணா, பிள்ளையா?''

திடுக்கிட்டுத் திரும்பியதும் பெரியவன் என்னை அடையாளம் கண்டு கொள்கிறான். திக்பிரமையில் வெறிச்சிட்ட முகம் கண்ணோரங்களில், கன்னங்களில், நெற்றியில், சுட்ட கத்திரிக்காய்போல் அடக்கிய சிரிப்பில் சுருங்குகிறது. ஆனால் முழுக்க அடக்க முடியவில்லை. என் முகத்தில் அவன் சிரிப்பு பீச்சியடிக்கின்றது. என்னையறியாமல் என்னையும் தொற்றிக் கொள்கிறது. மூவரும் ஒருவரை யொருவர் பார்த்துச் சிரிக்கிறோம். சிரித்துக்கொண்டே யிருக்கிறோம். எனக்கு வயிறு கூட வலிக்கிறது. ஆனால் சிரிப்பு ஓயவில்லை.

* * *

ஆனால் அவன் சொன்னது ஒன்றுசரி. ரூபாயை அவன் என்னிடமிருந்து சும்மா வாங்கிக்கொண்டு போய் விடவில்லை. அதற்குப் பதில் அவன் என்னிடம் ஒரு வாக்கை விட்டுச் சென்றிருந்தான்.

சிந்தித்து சிந்தித்து, நான் அறியாமலே, வாக்கை வாயில் உருட்டுகையில், இன்னும் செவிக்கும் நாவிற்கும் மணம் கிட்டியும் ருசி கெட்டாதோர் தித்திப்பு. நினைக்க நினைக்க நெஞ்சின் அடிவாரம்வரை கமழும் ஒரு காவிய சௌந்தர்யம், அத்துடன் புதிதாய் மிளிரும் கவிதையின் இன்ப சோகம்.

அவன் எவனாயிருப்பினும் சரி
இவன் எவனாயிருப்பினும் சரி
''இவன் பெண்சாதி உன் தங்கச்சி மாதிரி.''

எனக்குத் தங்கையிருந்தாலும் தங்கச்சி என்கிற போது அத்தை ஞாபகம்தான் வரும். அப்பா அத்தையை அங்கச்சி என்றுதான் அழைப்பார்.

அப்பா! அங்கச்சி எப்படியிருப்பாள் தெரியுமா? பச்சைப் பாலில் கடைந்த வெண்ணெய்போல் எப்பவும் புதிதாய், தள தளவென்றிருப்பாள். எப்பவும் குஷியாவே பிருப்பாள். ("தின்னு தெறிச்சுட்டு வளைய வரது தவிர வேலை என்ன?" என்று அம்மா உரக்கவே கத்துவாள்.)

குழந்தைகளைத் தவிர, அம்மாவும் பெரியவர்களும் வீட்டில் இல்லாத சமயம் பார்த்து, அத்தை 'குறத்தி வேஷம் மார்வாடி வேஷம் பாருங்கோ!' என்று பாவாடை யணிந்து ரவிக்கை பொத்தான் நடுவில் மேலாக்கு நுனியை சொருகிக் கொண்டு தலைமேல் முக்காடு இட்டு நின்றால் அசல் அப்படியேதான்! அம்மாவின் சவுரியை யும் திருடி, தளரப்பின்னிய கூந்தல், குஞ்சலத்துடன் டம்பங் கூத்தாடி சாட்டை போல் தரையிலிடிக்கும்.

வேஷத்தின் பாவனையில், அடியை மிடுக்காய் எடுத்து வைக்கையில் என் இதயத்தில் சதங்கை குலுங்கும். நான் சின்னப் பையன். இன்னும் உடையாத என் இளங்குரலில் கக்கடகடகட வென என் சிரிப்பைக் கேட்கக் கேட்க அவ ளுக்கு ஆனந்தம் பொங்கும். அப்படியே ஓடிவந்து என்னை வாரிக் கொள்வாள்.

"அத்தை 'நொன்னுன்னு தடவை, நொன்னுன்னு தடவை" என்று மழலையில் கொஞ்சுவேன்.

"அங்கச்சின்னுதான் அழையேன், அத்தையென்ன அத்தை, அவரைக்காய் சொத்தை! நான் என்னவோ நூத்துக் கிழவியாட்டமா!"

அத்தைக்குக் கல்யாணம் ஆகவில்லை. சீக்கிரம் வரன் குதிரவில்லை, இத்தனைக்கும் தோஷ ஜாதகம் கூட இல்லை.

"இவளைப் பார்க்க வரவாளுக்கு பஜ்ஜியும் ஸொஜ்ஜி யும் பண்ணியே இந்தக் குடும்பம் பாழாப் போச்சு!" என்று அம்மா அலுத்துக்கொள்வாள். அம்மா எனக்குத் தான் அம்மா. ஒரோரு சமயம் அவள் பேசுவதைக் கேட்

டால். ஐயே!... அப்பா அம்மாவுக்கென்றே நாமாவளி பாடம் பண்ணியிருந்தார். இருவருக்கும் சச்சரவின்போழ் அர்ச்சனை நடக்கும்.

சண்டி

சிகண்டி

லண்டி

லவண்டி

ரூப பயங்கரி

கோப ரூபிணி

சாபோத்பவி

மஹிஷா சூரி

அல்ப மயி

ஆக்ஷேபணி

அபஸ்மாரி

கனகதுர்க்கா (அம்மா பெயர் கனகம்)

துர்க்குணி

துன் மதி

துர்முகி

துராங்காரி

இதே ரீதியில் இன்னும் ஏதேதோ.

ஆனால் அம்மா ஆயிரம் வசை பாடியும், அப்பா அம்மாவை அர்ச்சித்தும், அத்தைக்கு இன்னும் வேளை வரவில்லை.

அப்பாவுக்குக் கலியாணமாகு முன்னரே, பாட்டி இறந்துவிட்டாள். அத்தை அப்பாவின் பொறுப்பாகி விட்டாள். அம்மா வரும் வரை அத்தை அப்பாவின் ஆசை அங்கச்சி. அம்மா வந்ததும், அம்மா வீட்டின் சட்டக்காரியாகி விட்டாள். அம்மா வீட்டுக்கு வருகையில் அத்தைக்குப் பத்து வயது.

தேள் கொட்டிப் பாத்திரமே ஓட்டையாகி விடும் என் பார்கள்.

அத்தை என்னதான் பருவமானாலும் மனுஷிதானே! வற்றா ஊற்றாயிருந்த அந்தச் சிரிப்பும் வேடிக்கையும் சுண்ட ஆரம்பித்து விட்டது.

ஆனால் அத்தைக்கு வேளை இன்னும் வரவில்லை.

ஒரு நாள் அத்தை கோயிலுக்குப் போய்வருகையில், காலடியில் ஏதோ இடறிற்று. செம்புழுதி படிந்து, அந்தி வெளிச்சத்தில், கிராவல் கல் மாதிரியிருந்தது. கையில் எடுத்தால், தாமிரத்தில், சுமார் மூன்றங்குல உயரம் கிருஷ்ண விக்ரஹம். புல்லாங் குழலை அபினயம் பிடித்த கைகள்.

கண்ணன் உரு கிடைத்ததையே அத்தை ஒரு சூசகமாகக் கொண்டாள். அல்லது கொள்ள முயன்றாள் என் கட்டுமா? அதை என்னவோ தானே தனியாய்ப் பூஜிப்பதும், அதனெதிரே உட்கார்ந்து அடிக்கடி சிந்தனையில் ஆழ்வது மானாள். தானாய் நேராததை, அல்ல நேர மறுத்ததை, தன் எண்ணத்தின் வலிமையால், நேர வைக்க முயன்றாள் போலிருந்தது. ஆனால் இப்பொழுது புரிகின்றது. எண்ணம் பலிதமானால், தான் பலிதமாகும் குறிகளாவது முன் தெரிந்தால் தான், வலிமையுடன் வலிமை கூடும். வலிமைக்கு ஊட்டம் வலிமைதான்.

ஆனாலும் வேளை வரவில்லை.

வேளையை நேர வைக்க, அவள் கூட்டும் வலிமையிலே அவள் உள்முறிந்தாள். அவளை மூட்டம் மேலும் சூழ்ந்து கொண்டது.

அத்தைக்கு உடலிலேயே ஒரு அசதி கண்டு விட்டது. மணிக் கணக்கில் ஜன்னலண்டை உட்கார்ந்திருப்பாள். அம்மாவின் கரிப்புகூட அவளைத் தார்க்குச்சி போட்டு எழுப்ப முடியவில்லை. தேன்குழல் நாழியைத் திருப்பிக்

கொடுக்கப் போன இடமானாலும் சரி, பொழுதைக் கொல்லத் தானே போனவிடம் ஆனாலும்சரி. போன இடத்திலேயே ஐக்கியமாகி விடுவாள். திரும்பி வந்ததும் அம்மாவின் ஆயிரம் திட்டலுக்கும் மந்தமாய், ஊமையாய், நின்றவிடத்திலேயே நின்று கொண்டிருப்பாள். அங்கச்சி ஏன், எப்படி, இப்படி அத்தையாய் மாறிப்போனாள்?

அத்தையைத் திடீரென்று ஒரு நாள் பிற்பகலிலிருந்து காணோம். அது எங்கேயாவது, பக்கத்துத் தெருவில், அதுக் கென்று யாரேனும் தோழிவீட்டில் உறங்கிக் கிடக்கும் என்று அம்மாவுக்கு என்றைக்குமே அசுவாரஸ்யம்.

அப்பா அந்த சமயம் ஏதோ ஒரு புது 'பிஸினெஸ்' ஸில் இறங்கியிருந்தார். யாரைக் கவனிக்கவுமே அவருக்கு நேர மேது?

ஆனால் இரவு நேரமாகியும் அத்தை திரும்பவில்லை என்றதும்தான் அம்மாவுக்கே வயிற்றில் கொஞ்சம் புளியைக் கரைக்க ஆரம்பித்தது. அப்பாவுக்குச் சொல்லியனுப்பி னாள். மூலைக்கொருவராய் அனைவரும் தேட, ஆரம் பித்து விட்டனர், அன்று ராமுழுக்க குழந்தைகள்—நாங்கள் கூடத் தூங்கவில்லை. விடியவே காத்திருந்தாற்போல் அண்டை அசலார் வீட்டுள் புகுந்து புறப்பட ஆரம்பித்து விட்டனர்.

''ஏண்டி கனகா, இப்படியும் உண்டோடி, நல்ல மரத்தில் புல்லுருவி யோடினமாதிரி?''

''ஏன் மாமி என்கிட்ட சொல்றேள்? எந்த இடியை எங்கள் தலையில் போடக் காத்திண்டிருக்காளோ மகராஜி தெரியல்லே. அப்பவே படிச்சுப் படிச்சு அவர்கிட்டே முட்டிண்டேன். குதிராட்டம் வீட்டில் வெச்சுக்க வேண் டாம். ஏர்றதோ தாழறதோ எதையோ ஒண்ணை முடிச்சுப் போட்டு கௌரவத்தைக் காப்பாத்திப்போம்னு. அது எங்கே மாமி வீட்டிலே அடைவா தங்கினால்தானே! காலில்தான்

சக்கரம் ஓடறதே! எல்லாம் தும்பை வீட்டுட்டு வாலைப்—''

வாசற் படியில் சட்டென நிழல் தட்டிற்று. அம்மா வாயில் வார்த்தை உறைந்து போயிற்று.

அப்பா வாசற்படியை அடைத்துக் கொண்டு நின்றார் மூழ்கி எழுந்த மாதிரி அப்பாவுக்குத் தலை, உடம்பு பூரா சொட்டச் சொட்ட நனைந்திருந்தது,

அப்பா அங்கச்சியைக் குழந்தைபோல் ஏந்திக் கொண் டிருந்தார். ஏதோ சொல்ல முடியாமல் அப்பாவுக்கு வாய் திறந்து மூடித் திறந்து, நாக்கு விடுபட்டதும் அதனின்று கோரமானதோர் சத்தம் கிளம்பிற்று.

அங்கச்சியின் பின்னல் டம்பங் கூத்தாடி சாட்டைபோல் நுனியில் குஞ்சலத்துடன் பூமியை இடித்தது. அப்பாவின் ஏந்திய அணைப்புக் கடங்காது, விறைத்துக் கொண்டு நின்ற கையின் பிடியுள்ளிருந்து, கிருஷ்ண விக்ரஹத்தின் கழுத்து எட்டிப் பார்த்தது. அதற்கு விழி பிதுங்கிற்று.

கடைசிவரை, பொம்மையைப் பற்றிய விரல்களைப் பிரிக்க முடியவில்லை. அவள் கூடவே அவள் கண்டெடுத்த விக்ரஹமும் காட்டுக்குச் சென்றது.

உண்மையில் அங்கச்சிதான் ஏமாந்து போனவள் என்று தோன்றுகிறது.

மாலை வேளை.

நான் நடை வழியில் உட்கார்ந்து ஸ்வாரஸ்மாய்ப் படித்துக்கொண் டிருக்கிறேன்.

சுவாமி விளக்கை ஏற்றிவிட்டு, அம்மா அவசரமாய், கொல்லைக் கதவை மூடுகிறாள். எனக்கு இருட்டுகிறது. ''ஏனம்மா?''

''உஷ்! சித்தே யிரு, இல்லாட்டா லக்ஷ்மி போயிடு வாள்.''

"லக்ஷ்மி அப்பவே போயிட்டாளே!"

லக்ஷ்மி வேலைக்காரக் குட்டி.

"சீ, வாயை மூடு! ஒரு சமயம்போது கிடையாது. வயசு கடாமாதிரி ஆறது. ஏற்கெனவே வீடு கொழிக்கிறது கேட்க வேண்டாம்!"

ஏதோ இருப்பதை விடாது கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டிருப்பதாய் அம்மா நினைத்துக் கொண்டிருக்கிறாள். எனக்கு இப்போதுதோன்றுவது குயுக்திதானோ என்னவோ? கொல்லைக் கதவை மூடிவிட்டால் வாசற்புறமாய் வந்தவ ளுக்கு வந்த வழியே போகத் தெரியாதோ? வருவதற்கு வழி வாசல், போவதற்குப் புழைக்கடை என்று எந்த சட்டத்தில் எழுதியிருக்கிறது? அம்மா யாரை ஏமாற்றுகிறாள்? என்னையா, தன்னையேவா?

*　　　*　　　*

ஒருசமயம் நான் கிடந்த கிடக்கையாய்ப் படுத்து விட்டேன்.

டாக்டர் வருகிறார். டாக்டர் புட்டியிலிருந்து ஊசி வழி, ஊசிக் குழாயில் மருந்தைக் கறக்கிறார். மருந்தின் நீலம் குழாயில் நிறைகையில் நான் நீலத்தில் மூழ்குகிறேன்.

பிறகு எல்லாமே ஜலத்தில் மூழ்கியிருக்கையில், வெளி யில் கேட்கும் அரவங்கள்.

வருவோர் வந்து படுக்கையண்டை நிற்கிறார்கள்.

அப்பா கவலையுடன் நெற்றியைத் தொட்டுப் பார்க் கிறார்.

தலைமாட்டில் அம்மா, வாயில் முன்றானையைத் திணித்துக் கொண்டு கண்ணீர் உகுக்கிறாள்.

வாசலில் கார் நிற்கிறது, போகிறது.

வெள்ளையடித்த சுவரில் பதித்த வெள்ளைப் பீங்கான் கள் பளபளக்கின்றன.

தலைமேல் ஓயாது விசிறி சுற்றுகிறது.

அவுன்ஸ் கிளாஸில் கிறுகிறுவென ஏறும் சிவப்பு மருந்தின் 'கிளுக் கிளுக்'.

பிறகு மூச்சின் திருகல் தன் சுழற்படிக்கட்டின் வழியே தன் இருள் கிடங்குகளுள் என்னை எங்கோ கொண்டு போய் விடுகிறது.

●

ஒளி மறுபடி நினைவில் மலர்கையில், இமையுள் நீலத்தின் மேல் ரோஜா படர்கின்றது. கண் விழிக்கிறேன்.

அம்மா அப்போதுதான் குத்து விளக்கைச் சேவித்து எழுகிறாள். புன்னகை புரிந்தபடி என்னிடம் வருகிறாள்.

''மாதவா, கண்ணைத் திறந்தாயா? என் வயிற்றில் பாலை வார்த்தாயா?''

அவள் கண்களில் ஸ்படிகம் பளபளக்கிறது.

கூடத்தில் மெல்லிய காற்று அவசரமாய் நுழைகிறது. கொடியில் உலர்த்திய துணிகள் அசைகின்றன. அம்மாவின் பார்வை கவலையுடன் குத்துவிளக்கின்மேல் பாய்கிறது. சுடர் சொடசொடக்கின்றது. விளக்கின் கொண்டையில் சொருகிய பூச்சரத்தினின்று ஒரு சாமந்தி விளக்கின் பாதத்தில் உதிர்கின்றது. அம்மாவுக்கு ரோமாஞ்சலியில் உடல் குலுங்குகிறது. நின்ற விடத்திலேயே விழுந்து விழுந்து நமஸ்கரிக்கிறாள்.

''அவள் விளக்கிலேயே வந்திருக்காடா!''

நெக்குருகி விக்கி விக்கி அழுகிறாள்.

எவள் வந்திருக்கிறாள்? சுற்றுமுற்றும் பார்க்கிறேன். எனக்கு யாரும் தெரியவில்லையே! எனக்கு இன்னும் மயக்கம் தெளியவில்லை. அந்த எண்ணத்தின் அசதியிலேயே தூக்கம் வருகிறது. என் கண்ணிமைகளை யாரோ மூடுகிறாப்போல் இருக்கிறது. என்மேல் போராய்க் குவிந்த நீல

மலர் மெத்தையுள், அதன் ஆழத்தில் அமிழ்கிறேன். என் கண்ணை மூடியவள் அவள்தானோ?

எவள்?

அறியேன். எங்கேயோ ஒரு ஜன்னல் திறந்து மூடுகிறது. எங்கிருந்தோ கவலையற்ற சிரிப்பின் இன்னொலி. கண்ணாடி சாமான்கள் ஒன்றுடன் ஒன்று மோதும் 'டிங்—டிங்.'

படுக்கையில் எழுந்து உட்காருகிறேன். வெளியே எட்டிப் பார்க்கிறேன். ஜன்னலின்கீழ் செடியில் ஒரு மலர்க் கொத்து, என் பக்கமாய்ச் சாய்ந்து சிரக்கம்பம் செய்கின்றது. திடீரென சப்தங்கள் அடங்கிவிடுகின்றன. அவள் என்னுடன் 'கண்ணாமூச்சி' விளையாடுகிறாள். என்னை அவளுக்குத் தெரியும். அதனால் அவளால் என்னை ஏமாற்ற முடிகிறது. இப்படி ஏமாறுவதும் இன்பமளிக்கிறது.

அவள் யார்?

உடல் திடீரென பரபரக்கின்றது. இதோ அவள் தன்னை எனக்கு வெளிப்படுத்திக் கொள்ளப் போகிறாள். வந்துகொண்டேயிருக்கும் விருந்தாளியின் பாதங்களைத் தாங்க, முன் ஓடும் ஜமக்காளச் சுருள் போன்று, என் நெஞ்சை ஒழித்துப் பெருக்கிக்கொண்டு அதனுள் இறங்கி சரசரவென விரியும் மோனத்தில் அவள் வருகையின் முன்னோசையை உணர்கிறேன். பரபரப்பு தாங்க முடியவில்லை. மார்பை இரு கைகளாலும் அழுத்திக் கொள்கிறேன்.

நிலைவாசலில் நிழல் தட்டுவதுபோல் ஒரு உணர்வு. கண்ணை மூடிக்கொள்கிறேன்.

நான் எழுந்து எதிர்கொண்டழைக்க மாட்டேன். எத்தனை நாளாய் இந்த சமயத்துக்கு ஏங்கியிருக்கிறேன்! அவளே உள்வந்து என்னை இப்படிக் காணட்டும்.

அவள் மூச்சு என் முகத்தில் மோதுகிறது. இந்த நிமிஷம் என் நரம்புகளில் ஏறியிருக்கும் முறுக்கில் மூச்சுப்பட்டால்

போதும். நானே ஆயிரம் தந்திகளாய் அலறிவிடுவேன். ஜன்னலுக்கு வெளியே குளவி ஒன்று. அதன் ரீங்காரம் குடையடிக்கின்றது ஆக்கர்போல் அது என்னைத் துருவி, உள் வீங்குகையில், அதில் மூங்கி மூங்கி என் மூச்சுத் திணறுகிறது. தலையை உதறிக்கொண்டு விழித்துக் கொள்கிறேன்.

என்னை அழுத்திய வேகம் சட்டென விட்டுவிடுகிறது. நான் காத்திருந்த சமயம், என் கண்ணெதிரிலேயே என்னை ஏமாற்றி என்னைக் கடந்துவிட்டது. சமயத்தின் வடிவத்தில் வந்து, தன்னைக் காண்பிக்காமலேயே என்னைத் தொட்டு விட்டு, சமயத்தினூடே சென்றுவிட்ட அவள் யார்?

நான் தேடுவது யார்? ஏன் தேடுகிறேன்? ஏன் ஏமாறுகிறேன்?

ஒன்று அறிகிறேன்.

தேடத் தேட ஏமாறல்.

ஏமாற ஏமாறத் தேடல்.

பிறக்கும் கேள்வியிலேயே, அதற்குப் பதிலின் கரு தொக்கியிருப்பது போல் தேடலிலேயே, தேடும் பொருளின் செந்தூரம் கலந்திருக்கிறது.

ஏமாந்தவனே கொடுத்து வைத்தவன். அவனைவிடத் தேடலின் போதையைத் தெரிந்தவன் யார்?

* * *

ஒருநாள்.

லைப்ரரியில் ஏதோ ஒரு புத்தகத்தையெடுத்துப் புரட்டுகிறேன். உள்ளிருந்து ஒரு துண்டுக் காகிதம் பறந்து விழுகிறது. எடுத்து அதில் எழுதியிருக்கும் மூன்று வரிகளைப் படிக்கிறேன்.

"இந்த தடவை ஏமாற்ற மாட்டேன்.
இன்று மாலை 4-30 மணிக்குக் கட்டாயம்,
வேப்பமர 'பஸ் ஸ்டாப்'பில் காத்திருங்கள்."

சுவர்க் கடியாரத்தின்மேல் கண் பாய்கிறது. நிஜார்ப் பையில் காகிதத் துண்டைத் திணித்துக்கொண்டு வெளியே ஓடுகிறேன்.

இந்த அசரீரி விளிப்பில்தான், இன்று, இத்தனைநாள் தவத்தின் கைகூடலா?

மாலையாகியும் கத்தரி வெய்யில் முதுகைப் பிளக்கிறது. கண்ணும் மூக்கும் செவியும் ஆவி பறக்கின்றன.

நிழலுக்கு ஒரு வேப்பங்கன்றுகூட கிடையாது. ஆனால் எனக்கு நினைவு தெரிந்து, அதற்கு முன்னிருந்துகூட- இது வேப்பமர ஸ்டாப்தான்.

பஸ்கள் வருகின்றன. நிற்கின்றன. போகின்றன. யார் யாரோ இறங்குகிறார்கள், ஏறுகிறார்கள், போகிறார்கள்.

நான் நின்று கொண்டேயிருக்கிறேன். பையுள் காகிதத்தை கை நெருடுகின்றது.

இவளாயிருச்குமா?

அவளாயிருக்குமா?

இல்லை இவளா?

இவளா??

இவளா???

எவளா?

யாரோ, யாருக்கோ, என்றோ, கையொப்பம்கூட இல்லாது எதற்காகவோ எழுதின மூன்று வரிகளுக்காக, இன்று நான் இங்கு, இந்நேரம் எதற்கு, யாருக்காகக் காத்திருக்கிறேன்?

கேள்விகள் புத்தியின் ஜன்னல்கள்.

ஆயினும் ஒரு எணணம்—ஒரே எண்ணம் புத்தியுள் புகுத்து சாளரங்களையும் அடைத்துக் கொண்டுவிட்டால், புத்தியே அவ்வெண்ணத்தைச் சுமக்கும் ஓடாகி விடுகிறது.

ஏமாந்து கொண்டே, ஏமாந்து கொண்டேயிருக் கிறேன் என்பதை உணர்ந்து கொண்டே, அது பற்றி

ஒன்றும் செய்ய இயலாது அங்கே காத்துக் கொண்டேயிருக் கிறேன்.

விளக்குகூட வைத்தாகிவிட்டது.

நாற்கூடலில் வண்டிகளுக்குக் கைகாட்டி நிற்கும் செந்தலை என்னைச் சந்தேகத்துடன் பார்க்கிறான்.

இவளாயிருப்பாளா?

இல்லை இவளா?

இவளா??

இவளா???

ஒருத்தி தன் தோழியிடம், என் காது கேட்க ''ஸெமியா?'' என்று ரகஸ்யமாய்க் கேட்டு அவள் தோளையிடித்துச் சிரிக்கிறாள்.

இன்னொருத்தி முகங் கடுக்கின்றாள்.

என்னையறியாமலே என் கண் துளும்புகிறது.

?

ஏமாறுவது என்றால் என்ன? தேடலுக்கு மற்றொரு சொல்லா? அல்லது தேடலுக்கே ஏமாறுதல் என்ற பொருளா?

ஏமாறலே தேடலின் தீவிரத்துக்கு சோதனை.

நாம் என்ன தேடியும், கடைசியில் கிட்டுவதுதான் கிட்டும் பொருளுக்கு நம்மைத் தயாராக்கும் பதனம் என லாமா?

* * *

''மாதவா, இங்கே ஒரு நிமிஷம் வந்துட்டுப் போயேன்!''

விசுப் பலகையில், ஜன்னலோரமாய், அம்மா உட்கார்ந் திருக்கிறாள். அவள் மடியில் இருபாதிகளாய் அரிந்த மாதுளம்பழம் கிடக்கிறது.

''மாதவா, வா இப்படி உட்கார். மாதவா, ஒண்ணு சொல்லப் போறேன் கோவிச்சுக்க மாட்டயே?''

சொல்லிக்கொண்டு வருகையிலேயே அம்மாவுக்கு முகம் திட்டாய்ச் சிவந்துவிட்டது. அம்மா நல்ல சிவப்பு.

ஏதுக்கிந்தப் பீடிகை?

''மாதவா, தெருவில் போற பெண்களை உறுத்து முறைச்சுப் பார்க்கிற சுபாவம் ஆண்களுக்கு உடம் போடே பிறந்ததுன்னாலும்—யாரையாவது நீ கையைப் பிடிச்சு இழுத்துட்டேன்னு நான் சொல்லவில்லை— ஆனால் அதுவும் ஒரு கட்டுலே இருக்க வேண்டாமா? அசலார் எதிரார் என்கிட்டே ஜாடையாவும் பளிச் சுன்னும், 'ஏண்டி கனகா, நான் என்னென்னவோ கேள்விப் படறேனே? உன் பிள்ளை நடுத் தெருவிலே நின்னுண்டு வழியில் போற சிறிசுகள் பெரிசுகள் எல்லாத்தையும் முழுங்கறாப் போல் பாத்துண்டு நிக்கறானாமே? நான் அதை நம்பறேனான்னு கேக்காதே, என் காதில் விழுந் ததை உன் காதில் போட்டு வைக்கறேன். இருந்தாலும் அவனுக்கும் வயசாயிண்டு வரதோன்னோ, காலா காலத் தில் ஒண்ணைக் கட்டிப் போடறதுதானே! யாராவது பெண் கொடுக்க மாட்டேன் என்கிறாளா? கனகா தலையை அசைக்க மாட்டாளான்னு தானே காத்திண்டிருக் கோம்!' இப்படி அவா என் கிட்டே வந்து சொல்ற போது எனக்கு நாக்கைப் பிடுங்கிக்கலாம் போல இருக்கு.''

நான் ஒன்றும் பதில் பேசவில்லை. அம்மாவின் மடியில் மாதுளையின் பாதிகளிலிருந்து முத்துக்கள் அடுக்கடுக்காய் என்னைப் பார்த்துச் சிரிக்கின்றன. இனிக்கச் சுவைக்கும் ரஸத்தின் நடுவே துவர்க்கும் விதை பத்திரமாய் உட்கார்ந்து கொண்டிருக்கிறது. இனிக்கும் சாறும் துவர்க்கும் ரஸமும் சேர்ந்துதான் முத்து.

இதுவும் அவள் சிரிப்புத்தான். "என்னைக் கண்டு பிடிக்க முடிந்ததா பார்!" என்று என்னைப் பின் மண்டையில் ஓங்கித் தட்டிவிட்டு, மாதுளையில் புகுந்துகொண்டு சிரிக்கிறாள். அம்மா மடியில உட்கார்ந்து கொண்டு என்னை 'கருடா சுகமா?' என்று கேட்கிறாள்,

தலை சுற்றுதிறது. மண்டையை இரு கைகளாலும் பற்றிக் கொள்கிறேன்.

*　　　*　　　*

நான் கண்ணால் கண்டிராது, யார் என்றுகூட வெறும் உணர்வில் மாத்திரமேகூட அறியாது, அவள் என் நினைவுள் புகுத்து பீடத்தைப் பற்றிச் கொண்டபின், நான் என் பாதியை உணர்கிறேன்.

பாதியிலும் விபரீதமான பாதி. துண்டாய்த் தனித்திடினும், அதற்கு உயிரற்றாலும். அதன் சாவிலேனும் அதற்கு முழுமையுண்டு. என் நிலையோ, உயிரிலே பாதி சாவிலே பாதியுடன் கலந்து ஊசலின் முழுமையில், ஊசலாடுகிறேன்.

கண்ணாடியுள் அகப்பட்டுக்கொண்ட பிம்பமாய், வெளிவர இயலாது தவிக்கிறேன்,

ஆயிரம் ஆயிரம் சித்திரங்கள், கோலங்கள் நெஞ்சில் பிறந்து விட்டு, தம் உருப்பெற சுவர் தேடித் தவிக்கின்றன.

கீழே சீறும் வெள்ளத்தின்மேல் ஆடும் பாலத்தின் அறுந்த நுனியில் தொங்குகிறேன்.

அதனால், எதனால் தான் அவளுக்கென்ன? நான் அவள் முள்ளில் மாட்டிக் கொண்டவன், அவள் இஷ்டத்திற்கு எந்நேரம் தேணுமானாலும் அவள் என்னுடன் என்னைத் தூண்டிலில் விளையாடலாம். அவள் கரையில் உட்கார்ந்திருப்பவள், காலம் கடந்தவள். காலத்தைப் பற்றி அவளுக்கென்ன கவலை?

அவளைத் தேடித்தேடி, திக்குத் தப்பி, அவளுக்காக ஏங்கித் தவித்து. தேய்ந்து கடைசியில் என்வழியில் எனக்குத் துணை யார் கிடைப்பினும் சரி அவரை, அவளாகக் காணத் தயாராகிவிட்டேன். எனக்கு இப்பொழுது வேண்டுவது அவள்கூட இல்லை. என் பிறப்புடன் என் விதியாய் என்னுடன் வந்திருக்கும் உள்ள எழுச்சி—அன்பு, பாசம், ஆத்திரம் அதை என்ன பெயரிட்டு அழைத்தாலும் சரி. அதற்கு ஒரு வடிகால், ரூப உணர்வு கிட்டினால் போதும்.

ஆகையால், ஜாதகம் பொருந்தி நான் பார்க்கச் சென்ற முதல் பெண்ணையே வரித்துவிட்டேன். ஆகையால், பெண் என்னை நமஸ்கரித்து, என்னெதிரே வெகு நேரம் உட்கார்ந்திருந்தும் பாடியும் அவளை நான் சரியாய்ப் பார்த்தேன் எனச் சொல்வதற்கில்லை, அவளைப் பார்க்கு முன்பேயே, ஏற்கத் தீர்மானித்த பின், பார்த்தாலும் என்ன இருக்கிறது?

அம்மா தன் ஏமாற்றத்தை அங்கேயேகூட மறைக்கவில்லை. வீடு திரும்பியதும் கேட்கவும் வேணுமா?

''என்னடாது? தட்டிக் கழிக்க முடியாது தாக்ஷண்யத்துக்குப் பார்க்கப் போனால், போன இடத்தில் பழத்தோல் வழுக்கின மாதிரி பல்டியடிச்சுட்டே? இதைவிட நல்லபெண், இதைவிட வளத்துடன் உனக்குக் கிடைக்காதா?''

அதற்குள் என் தம்பி குறுக்கிட்டு! ''அம்மா, மன்னியோடு—''

''அது கெட்டுது போ! அதுக்குள்ளே நீ மன்னியுறவு கொண்டாடறது!''

''மன்னி பாடவேயில்லை. வாய்தான் அசைந்தது. அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு அவளுக்குப் பின் குரல் கொடுத்தாளே அவள் தங்கை, குறுகுறுவென்றில்லை, பாடறப்போ, காதுலே டாலர் ஆடினதே ஒரு ஜோர்!''

''என்கிட்டே சொல்லி என்னப்பா பண்றது? உன் அண்ணன்தான் சொக்கி சுருள் பூரியா விழுத்துட்டானே! இதில்

நான் ஏன் பூரணும்? அவன் கண்டது ரம்பை அவன் தாரம் அவன் பாடு! அவன் தலை விதியை அழிச்செழுத என்னாலாமோ?"

சிக்காமு நீ என் வாழ்க்கையில் புகுந்த விதம் இப்போது தான், நீ கரையேறிய பின் உன்னிடம் ஒப்புக் கொள்கிறேன். என் வழியில் கண்ணியமில்லை என்கிறாயோ?

ஆனால் சிக்காமு உன்னை நான் ஒரு நாளும் மோசம் செய்ததில்லை. உனக்கு இப்போது தெரிந்திருக்கும்.

ஆனால் உன் பொறாமைகள், சந்தேகங்கள் பஞ்சணை மேல், உன் கூந்தலிலிருந்து மலர் விழுந்தாலும் லயம் பிசகி விடும் நேரங்களும், இறந்தவரையும் எழுப்பிவிடும் போன்ற உரத்த குரலில் உபயோகமற்ற பேச்சுக்களிடையிலும், பெருங்கணக்கில் நீ நல்லவளாய்த்தானிருந்தாய்.

உன்னில் எனக்கு ஏமாற்றமில்லை.

நான் எதிர்பார்க்கவில்லை.

அதனால் ஏமாற்றமில்லை.

உன்னை நான் அடைந்ததும், என் தேடல் தானே நின்றது.

அவளுக்கும் எனக்குமிடையில் அவளை மறைத்த சாயலாய் நின்றாய்.

உன் மயக்கத்தில் அவளை மறக்க, என்னை மறக்க மனங் கொண்டேன்.

என்னை மறந்தால் அவளை மறக்கலாமன்றோ?

ஆயினும் சாதனை என்பதும் ஒரு நினைப்புத்தான் என இப்போது தானே தெரிகிறது!

அவளை நான் மறந்தாலும் அவள் என்னை மறப்பாளில்லை,

இலைப் பழுப்படியில் மறைந்து கிடைக்கும் பாம்பு போல், நெஞ்சடியில் உறைந்து கிடந்தாள்.

இருவரும் இளைப்பாறினோமோ?

இப்போ "ஜூட்" இல்லை.

அம்பேல்.

என் உத்தியோகம் என்னை எங்கெங்கோ கடத்திச்சென்றது. சிக்காமுவையும் குழந்தைகளையும்கூட பிறந்த வீட்டில் விட்டுவிட்டு வேலை இழுத்த வழி அலைந்தேன்.

பிறகு ஒரு நாள், நெடுநாள் கழித்து ஊர் திரும்பினேன்.

நான் முன்னால் எழுதவில்லை. திடுமென முளைப்பதில் ஒரு குஷி.

வீட்டுப்படி மிதிக்கையில், விளக்கு வைத்தாகிவிட்டது. ரேகை மறையும் சமயம்,

"சிக்காமூ! டேய்பாலூ, வெங்கட்டு!"

யாருமேயிருப்பதாய்த் தெரியவில்லை. திண்ணை சாய்மணைமேல் அகல்விளக்கை ஏற்றி வைத்துவிட்டு, வாசற்கதவையும் திறந்து போட்டுவிட்டு, கிராமத்தில் இங்கேதான் இப்படி 'ஹாய்யா' போக முடியும். பட்டணத்தில் இந்த ஜம்பம் பலிக்குமா?

கூடத்தில் கைப்பெட்டியை இறக்கினேன்.

"யாரது? அத்திம்பேரா, அடாடா! வாங்கோ வாங்கோ—! நில்லுங்கோ நமஸ்காரம் பண்றேன்."

கோயில் ஆராய்ச்சிமணி என்மேல் தீர்க்கமாயிறங்குகிறது. புதுப்புடவையின் சலசலப்பு. அவள் நமஸ்கரித்து நிமிர்ந்து எழுகையில், காற்றில் மிதக்கும் லாந்தர் அடியில் சூழ்ந்த இருளில், மூக்குத்தியின் பச்சை பளீரிடுகிறது. கண்களை இருகைகளாலும் இறுகப் பொத்திக் கொள்கிறேன். தரிசனத்தின் தேஜஸ் தாங்க முடியவில்லை. கண்ணுள் நீல

மின்னல்கள் கிளை பிரிந்து விளையாடுகின்றன. கால்கள் கிடுகிடுத்தன. தூணில் சாய்ந்தேன். அவளை அடையாளம் கண்டு கொள்கையில் கால் கட்டை விரலிலிருந்து உச்சி மண்டைவரை இன்ப பயங்கரம் ஊடுருவுகின்றது.

காத்திருந்து, ஓய்விருந்து, மறுபடியும் விளையாட்டில் இறங்கி விட்டாளா? வெள்ளிக்கிழமையின் கண்மலர், கவசம், ஆபரண அலங்கரண பூஷிதையாய் கர்ப்ப க்ருஹத்தி லிருந்து வெளிப்பட்டு விட்டாளா?

உக்ரமுகி.

''என்ன அத்திம்பேரே, பேந்தப்பேந்த முழிக்கிறேள்? என்னைத் தெரியல்லியா? என் காதிலே டாலர் தேடறேளா? எப்பவுமே 'டாலர்' போட்டுக்கற வயசிலேயே உட்காந்திண் டிருக்க முடியுமா? அக்கா கலியாணத்தின்போது என்னைப் பார்த்தது தானே! அப்புறம் நீங்கள் தான் மச்சினி செத் தாளா இருக்காளா என்றுகூட இந்தப் பக்கமே திரும்பிப் பார்க்கவில்லை. என் கலியாணத்துக்கூட உங்களால் வர முடியவில்லை. உங்களுக்கு உங்கள் வேலை அவ்வளவு மும் முரம், மூக்கியம் இல்லையா? ஹூம் ஹூம் இருக்கட்டும் சொல்றேன்.''

உபசரிப்பில் கூடத்துக்கும் சமையலறைக்குமாய் அலை கிறாள். ஏதோ வாய் ஓயாமல், மூச்சு விடாமல் பேசிக் கொண்டே:

''நீங்கள் என்னை மறந்துட்டாலும் நான் உங்களை இன்னும் அடையாளம் வெச்சிண்டிருக்கேன் பார்த்தேளா! இதே வந்துட்டேன் அடுப்புலே காப்பி சுட்டுண்டிருக்கு. தோசைக்குக் கல்லைப் போட்டிருக்கேன். அவாள் எல்லாம் இன்னிக்குத் தெப்பல் பன்னெண்டு சுத்தும் பார்த்துட்டுதான் வருவா. தோசை ரெண்டு சூடா சாப்பிடுங்கோளேன். லேட்டா சாப்பிட்டுண்டாப் போறது. அவர்கூட நேத்து வரைக்கும் இங்கே தான் இருந்தார். இன்று காலையில்தான் ஊருக்குப் போனார். நீங்கள் வரப்போறேள்னு ஒரு வரி

போட்டிருந்தேள்னா அவரை இன்னிக்கு நிறுத்தி வைச்சிருப்பேன். ஷட்டகரைப் பார்க்கணும்னு அவருக்கு எவ்வளவு ஆசை தெரியுமா? ஆனால் என்னபண்றது, மறுபடியும் எப்போ வாய்க்கறதோ அப்போத்தான். நீங்கள் கல்யாணத்துக்கு வராட்டாலும் உங்கள் புண்ணியத்தில் எனக்கு நல்ல இடமாக் கிடைச்சுப் போச்சு. என் வீட்டிலே எல்லாரும் என் மேல் பிரியமாய்த் தானிருக்கா. அங்கே பெண்ணேயில்லை. நான்தான் செல்லப்பெண். எதுக்காவது நான் பதில் பேசினால்அம்மா என்னை முறைக்கிறாள். 'எல்லாம் உனக்குப் புகுந்தஇடத்தில் கொடுத்திருக்கிற இடண்டீ'ன்னு. எனக்குப் பிறக்கப் போறது பெண்ணாயிருந்தால் அதைக் கண்டு அஸிகைப்படறது முதல் நான் தான். செல்லத்துக்கு என் இடத்தை அது புடிச்சுண்டுடுமே! என்ன அத்திம்பேரே உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கோ? என்னடாது மச்சினி இத்தனை வெகுளியாயிருக்குன்னு! என்ன பண்ணறது ஒத்தரையொத்தர் பாத்துக்கறதே மாமாங்கத்துக்கு மாமாங்கம்னு இருந்தால் அப்படித்தான் ஆகும். என்ன பண்றது எனக்கோ உடன் பிறந்தான் இல்லை. நீங்கள் தான் எனக்கு அண்ணா உங்கள் கிட்டக் கொட்டி ஆத்திக்கறேன்—''

எங்கோ நெஞ்சின் அடிவாரத்திலிருந்து எப்போ கேட்ட மாதிரி ஒரு குரல் செவியண்டை எழுகிறது.

''இவள் பெண் சாதி உன் தங்கச்சி மாதிரி.''

எச்சரிக்கைக்கு எச்சரிக்கை. புத்திமதிக்குப் புத்திமதி.

நெஞ்சுக்கு நேரே ஒரு கையில் கத்தியைப் பிடித்துக் கொண்டு, இன்னொரு கையால், தன் உரிமையின் கேலியில் என் முகத்தை வருடுகிறான்,

'உன் கண்ணில் பட்டால் இப்படித்தான் படுவேன்' என்கிறாளா?

தெரு முனையில் வெங்கிட்டுவின் உரத்த குரல் கேட்கிறது.

* * *

வாஞ்சியின் வீட்டுக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்.

வாஞ்சி, ஆபீஸில் 'தப்புத் தண்டா'வில் மாட்டிக் கொண்டு விட்டான். அதற்கு அவன் தன் சோம்பேறித் தனத்தில், தன் கீழ் சிப்பந்திகளை ரெம்பவும் நம்பி அவர்கள் காண்பித்த இடத்தில் கையெழுத்துப் போட்டதுதான் காரணமோ, அல்லது, எவ்வளவு திடசித்தமுடையவனையும் சமயத்தில் காலை வாரி விடும் சபல புத்தியோ, எனக்கு நிச்சயமாய்த் தெரியாது. மோசடியை நான் கண்டு பிடிக்கும்படி நேர்ந்து விட்டது.

ஆபீஸில் அவன்மேல் நடவடிக்கை எடுத்தாகின்றது. இரண்டு மாதங்களாய் 'ஸஸ்பென்ஷனி'ல் இருக்கிறான். அவன் வேலையை ஒழுங்குபடுத்தி, அதன் கணக்கு வழக்கு ஊழல்களைச் சரிப்படுத்தும் பொறுப்பு என் தலையில் விழுந்தது.

இன்று துரை என்னைத் தன் அறைக்குக் கூப்பிட்டான். நான் உள்ளே நுழைந்ததும் தன் இடத்திலிருந்து எழுந்து மேஜையைச் சுற்றி—(மேஜையா அது, டென்னிஸ் கோர்ட்!) என்னிடம் வந்து கை குலுக்கினான். அவன் இடது கையில் ஒரு கவர்.

''மிஸ்டர் மாடவ், ஹெட் ஆபீஸ் தங்கள் நன்றியை உங்களுக்குத் தெரிவிக்கும்படி எனக்கு எழுதியிருக்கிறார்கள். ஆகையால் அவர்கள் சார்பிலும் என் சார்பிலும்...''

அவன் சொன்னதெல்லாம் முழுக்க வாங்கிக்கொண்டேனா? கையில் வாங்கிக்கொண்ட கவரைத் திருப்பித் திருப்பிப் பார்க்கிறேன். ஒட்டியிருக்கிறது கனக்கிறது.

இப்போது நான் வாஞ்சியின் வீட்டுக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்.

இதுவரை வாஞ்சியின் வீட்டுக்கு நான் போனதில்லை. ஆனால் எத்தனையோ முறை அழைத்திருக்கிறான் வாஞ்சி. ''லஷ்மியின் சப்பாத்தியையும் 'பாஜி'யையும் ஒருமுறை நீ

ருசி கண்டுவிட்டால், நீ என்னவோ பீற்றிக்கொள்ளும் குஜராத்தி பவன்கள் அவள்கிட்ட பிச்சை வாங்கணும்—''

ஆனால் இதுவரை அவன் அழைப்பை ஏற்க எனக்கு வாய்த்ததில்லை. இந்த இரண்டு மாதங்களாய் நாங்கள் சந்திக்கக்கூட இல்லை. காரணம்? ஒருவருக்கொருவர் லஜ்ஜை தான்.

''வாஞ்சீ!'' தொண்டையின் திடீர் கரகரப்பில் என் குரலே எனக்கு வினோதமாயிருக்கிறது. கதவு ஒருக்களித்துத் தானிருக்கிறது. மெதுவாய்த் தள்ளுகிறேன். உள் வாங்கு கிறது.

உள்ளிருந்து ஒரு பையன் ஓடி வருகிறான். என்னைப் பார்த்ததும், நின்று, புரியாமல் மிரள மிரள விழிக்கிறான்.

''அம்மா! அப்பாவைத் தேடிண்டு யாரோ வந்திருக்கா!''

முன்றானையில் கையைத் துடைத்தபடியே அவன் தாய் வருகிறாள். என்னைக் கண்டதும் சட்டென நிற் கிறாள். ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு நிற் கிறோம்.

இது எப்படி சில சமயம் நேருகிறது என்றுதான் தெரிய வில்லை. ஒருவருக்கொருவர் யார் என்று தெரிவித்துக் கொள்ளத் தேவையில்லை. சொல்லாமலே எங்களுக்கு எங்களைத் தெரியும். அவள் முகத்தில் தணல் கணகணக் கின்றது. நெற்றியில் குங்குமம் ஒழுகி வழிகின்றது.

பையனுக்கு என்னைக் கண்டு லஜ்ஜையோ பீதியோ தெரியவில்லை. ஓடி அம்மாவைக் கட்டிக்கொண்டு அவள் பின்னாலிருந்து என்னை எட்டிப் பார்க்கிறான். முகத்தில் இன்னும் பால் மாறவில்லை. தலை குருவிக்கூடாய் வளர்ந் திருக்கிறது. இன்னும் முடி கொடுக்கவில்லை போலும். பெரு விழி வட்டங்களில் நடுவே மூக்கின் எடுப்பு, கிராமத்தில்

பனைமேடு பிரிக்கும் இரு குளங்களை நினைவு மூட்டு கின்றது.

அவள் அவனை ஒரு கையால் அணைத்துக் கொள் கிறாள். என்னைக் கண்ட குளிரில் அவர்கள் இருவரும் அப்படி ஒடுங்குவது காண, எனக்கு நெஞ்சை என்னவோ வேதனை பண்ணுகிறது. வாய் அடைத்துவிட்டது. உறையை அவளிடம் நீட்டுகிறேன். வாங்கி முன்னும்பின்னும் திருப்பிப் பார்க்கிறாள். விழிகள் விரிகின்றன. அவள் கை நழுவுகின்றது. அவள் கீழே விழுந்து என் பாதங்களைப் பற்றினதும் எனக்கு உடல் பதறுகிறது. ஆயினும் செய லிழந்து மரமாய் நிற்கிறேன். குனிந்த அவள் குடல் குலுங்கு கிறது.

''அம்மா! அம்மா!!'' பையன் அலறுகிறான்.

அவள் கண்ணீர் என் பாதங்களை நனைக்கையில் ஒவ் வொரு சொட்டும் ஒரு ப்ரளயமாய் வீங்கி, நான் அதில் மூழ்கிப் போகிறேன், என் விழியில் எழுந்த கண்ணீர்த் திரை யில் எழுதிய உருவில் அவள் தரிசனமாய்ப் படபடக் கின்றாள்.

நான் தேடாத சமயம், சற்றும் எதிர்பாராத சமயம் திடுமென எதிர் தோன்றி வேளை காட்டுகிறாளோ? என் பாதம் தொட்டுத் தன் பணிவு காட்டி எனக்கு விட்டுக் கொடுக்கின்றாளோ? அல்ல, தன் வெற்றியை நிலைநாட்டு கிறாளோ?

சமயங்களில் சமயங்களின் உருப்பெறுவதன்றி தனக் கென்று தனி உருப்பெற இயலாள் என எனக்கு ஊமையில் ஒப்புக்கொள்கின்றாளோ? என் வெற்றி இவ்வெற்றி, என்ன வெற்றி?

என் வெற்றியைக் கழற்றி அங்கேயே விடுகிறேன். என் காலை மெல்ல, மெதுவாய், விடுவித்துக்கொண்டு வாசற்படி தாண்டு முன் ஒருமுறை திரும்பிப் பார்க்கிறேன். நமஸ்கரிப்

பின் ஒடுங்கலில் செதுக்கிய சிலையாய் வணங்கிய அதே நிலையில் மெய்மறந்து இன்னும் இருக்கிறாள்.

கதவை மெதுவாய் என் பின்னால் மூடுகிறேன்.

சிக்காமு இதை நான் உன்னிடம் சொல்லியிருந்தால் உனக்குப் புரிந்திருக்குமோ? ஆனால் இது மாத்திரமல்ல இன்னும் எவ்வளவோ உனக்குப் புரியாது என்று நான் கொண்டது, என் தேடலின் மமதை, என்னுடைய புரியாமையே தான் என்று இப்போது புரிகின்றது.

சிக்காமு, நீ கொடுத்து வைத்தவள். உன்னை அடைந்ததில் நானும் கொடுத்து வைத்தவன். என் தராசு தடுமாறும் போதெலாம் எனக்குத் தக்கறு எடையாய் நீ அமைந்தாய். என்ன நிலையில் நிறுத்திவைக்க முடிந்ததோ யில்லையோ நான் தட்டு அறாது காத்தது நீதான். நான் தேடுமவளைத் தேடும் ஆர்வத்தில் எனக்குக் கிட்டியது ஏமாற்றம்தான். ஆனால் உன்னிடம்தான் என் பத்ரமடைந்தேன். நீ தந்த பத்ரத்தின் உதைகாலில்தான் என் தேடலுக்கு எழுச்சியே இருந்தது. ஆனால் பத்ரம் இருக்கும் வரை எங்கு தெரிகிறது? ஒவ்வொரு சமயமும் உன் கயிறின் ஆதாரத்தில் தானே என் முத்துக் குளிப்பில் நான் மூழ்க முடிந்தது. உன்னில் அல்ல—உன்னிலேயே தானோ அவள் என்னருகிலேயே இருந்து என்னை ஏமாற்றிக் கொண்டிருந்தாளோ? பத்ரம் தந்து, தான் தந்த பத்ரத்தைத் தகர்க்கும் ஆர்வமும் அவளே தானோ? காலடியில் புதையலை இடறிக் கொண்டே, இல்லாதவிடமெல்லாம் செல்லாத பொருளைத் தேடியிருந்தேனோ? நீ இல்லாமல் நானே எப்படி இத்தனை நாள் இருந்திருக்க முடியும்?

கிணற்றடியில் சறுக்கினதே சாக்காய், தப்பிய நினைவு திரும்பாமலே நீ கண் மூடியதும் எனக்குக் கண் திறந்து விட்டது. உன் யாத்திரைக்கு உன்னைத் தயாராக்கிக் கொண்டிருக்கிறார்கள். பற்றிய மஞ்சளும், நெற்றியில் குங்குமமுமாய் மடியில் கட்டிய தேங்காய் வெற்றிலையுடன்

படுத்தபடி, அரைக்கண்ணில் என்னைப் பார்த்து நீ புன்னகை பூக்கையில், ''உன் கண்ணெதிரில் நான் இருக்கையிலேயே தேடுமிடம் தெரியாமல் தேடிக்கொண்டிருந்த முட்டாளே, இதோ நான் போய்விடப் போகிறேன் இனி என்ன செய்யப் போகிறாய்?'' என உன் உதட்டோரக் குழிவில் தேங்கிய மௌன ஏளனம், என்மேல் அர்த்தம் விடிகின்றது.

அவள் அல்ல நீ, நீ அல்ல அவள்—அவள் நீ, நீ அவள்

அவளா நீயா? அவளே நீ

என என்னைச் சுற்றிச் சுற்றி அவளும் நீயும் மின்னவிடுகை யில் என்னால் அடக்க முடியவில்லை. ''சிக்காமு சிக்காமு கண் அவிந்து போனேனே!'' என் கதறல் கேட்டு எல்லோ ரும் சற்று வியப்புடனேயே என்னை நோக்குகிறார்கள்.

''கிழவர் இத்தனை நாள் வயிற்றுக்குள் இவ்வளவா அடக்கி வெச்சிண்டிருந்தார்! என்னமோன்னு நினைச் சோமே!'' என்று ஒரு பேச்சு காதில் விழுகிறது. இன்னொரு குரல்;

''நன்னாயிருக்கு உன் அதிசயிப்பு! கிழவரானாலும் மனுஷன்தானே! இனி அவர் கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்க யாரிருக்கா? பிள்ளைகள் நல்லவா. நாட்டுப் பெண்கள் தங்கக் கம்பின்னே வெச்சுப்போம். ஒரு தலையை வலிச்சால் பிள்ளைகள் டாக்டரை வரவழைப்பா. நாட்டுப் பெண்கள் கஞ்சி வெச்சு, வேணும்னா படுக்கையைத் தட்டிப் போடுவா. ஆனால் 'ஐயோ!'ன்னு பதர்றவா யார்? தொப்புள் சுழியிலிருந்து கிளம்பற அந்த 'ஐயோ'வின் அதிகாரம்தான் உயிர் வளப்பாண்டி! பாக்கி உன் உபசாரம், மரியாதை, கடமையெல்லாம் வெறும் நாள் வளப்பான் கள்!''

அலைகள் திரள்கின்றன. உருண்டு ஓங்கிக் கொந்தளித் துக் கக்குகின்றன. அத்தனையும் கரைமீது அறைந்து பரவி நீர்த்து வடிகின்றன. திரும்பத் திரும்ப இதேதான். இருப்ப தைக் காணாததும், இல்லாததைத் தேடுவதும், இருப்பதைக்

கண்டதும், கண்டதுமே இழப்பது மட்டுமின்றி வேறு என்ன?

என் கையுள் ஒருகை, சொப்புக் கை, நுழைந்து கட்டை விரலைக் கவ்விக் கொள்கிறது.

''அழாதே தாத்தா, நேக்குப் பயமாயிருக்கு என்னைத் தூக்கிக்கோயேன்!''

குனிந்து நோக்குகிறேன். என் கண்ணின் நீர்தாண்டி, ஸிந்து நிற்கிறாள்.

பாலுவின் கடைக்குட்டி. அவளை அப்படிக் காணும் அந்தச் சமயமே, இதுவரையில்லா என் நெஞ்சின் அடி இலைப் பழுப்புகளிடையே சலசலப்பு கேட்கிறது.

மறுபடியும் நெஞ்சடைப்பின் அடித்தகர்ப்பில் உள்ளத்தின் பெருந்தாவல். உடல் நரம்புகளை ஊடுருவும் உள் உணர்வின் 'பராக்!'

அவள் வந்துவிட்டாள்.

குழந்தையைத் தூக்கிக்கொள்கிறேன். இனி என்னை நடத்த, என்னைப் பிடித்த குஞ்சுக் கையைக் கண்களில் ஒத்திக் கொள்கிறேன்.

* * *

ஸிந்துவோடு பாலுவுக்கு அடுக்காய் ஆறு பெண்கள். 'இந்த சமயம் பிள்ளை'யென்று ஒவ்வொரு சமயமும் ஏமாந்து ஸிந்து பிறந்ததும், பாலு வெட்கங்கெட்டவன் பெட்டைப் பயல், கூடத்தில் புரண்டு புரண்டு அழுதான். பாலுவுக்கு ஸிந்துவைத் தந்த அவன் மனைவிமேல் கோபம். அவன் மனைவிக்கும் ஸிந்துமேல் அலுப்புத்தான் என்றாலும், ஸிந்து வந்த பின்தான் பாலுவுக்குப் பெருகிற்று.

ஸிந்து இப்போது என் உள்ளத்தின் படிதாண்டி அதன் பொட்டலைப் போக்கி, என்னைப் புதுப்பிக்கவே வந்து விட்டாள்.

இதுவரை நான் ஸிந்துவைக் கண்டதில்லையா? என் காலடியிலேயே அவள் விளையாடவில்லையா? அவளை மற்றவர் கடிகையில் நான் சிபாரிசுக்குப் போனதில்லையா? நான் அவள் விஷமம் பொறுக்காது அவளை கடிந்ததில்லையா?

ஆனால் அவள் வந்தாள் என்று அறியத் தெரிவதே ஒரு வாய்ப்பு என்று அன்றி அவள் நேரிடும் சமயத்தையும் ரூபத்தையும் விதிக்க யாரால் முடியும்!

துக்கத்துக்கு மாற்றாய், தன்னை மறக்கடிக்க, ஏற்றிக்கொள்ளும் மயக்கம் பட்டுப்பட்டு, பதமாகி, தேடித் தேடித் தேர்ந்த அறிவின் கத்திவிளம்பில் நர்த்தனமாடும் உள் பிரஞையின் ரூபதிவ்யம்; என் அந்தியில், ஸிந்துவில், அவளை அவள் அம்சபூரணத்தில் சந்திக்கும் அநுபவானந்தம். அதன் பெருக்கில், எங்களிடையில் வயதின் கோடுகள் அழிகையில், ஸிந்துவே என் குழந்தை.

ஸிந்துவே என் தாய்.

என் ஸஹி.

ஸிந்து என் சுமைதாங்கி.

நாங்கள் இருவருமே, ஏதோ ஒரு வகையில், மற்றவருக்கு வேண்டாப் பொருளாகி விட்டோம், நான் என் மூதால்; அவள் தன் வருகையால். அதனாலேயே நாங்களிருவரும் ஒருவருக்கொருவர் தேடிய பொருளாகி விட்டோம்.

மாலை நேரம் நாங்கள் கைப்பிடித்துக்கொண்டு நடக்கையில், என் வீட்டிலுள்ளவர்களின் கேலிக்கும் ஆத்திரத்துக்கும் ஆளாகிறோம்.

''நூத்துப் பாட்டனும், நூத்துக் கிழவியும் உலாத்தக் கிளம்பியாச்சா?''

''அதுக்கென்ன குறைச்சல்? அவா ரெண்டு பேருந்தான் ஒருத்தருக்கு ஒருத்தர் சரி. அது பிஞ்சுலே பழுத்த அத்துரு.

அவரும் பழுத்து ஆச்சு. இப்போ அழுகிண்டிருக்கார்! ஒரு சுமுகம் உண்டா, சதா விஷத்தைக் கக்கிண்டு!''

''நம்பேரில் விஷம் கக்கினால் என்ன? பாம்பு தன் மண்டை மாணிக்கத்தைக் காப்பதுபோல் அல்லவா அவளை அடை காக்கிறார்!''

எனக்கு மயிர் கூச்செறிகிறது. ஸிந்துவைப் பிடித்த என் கை இறுகுகிறது.

ஸிந்து என் மாணிக்கம்.

என் தேடலிலேயே ஊறி ஊறி அவள் உறைந்து கருவாகி உருவாகி, தன் ஒளி காட்டி, தன்னிடம்வர வழியும் காட்டும் என் தேடற் பொருள்.

ஆனால் எதுவுமே எதுவரை? ஸிந்து என்னை இப்போது பிரிந்துவிடப் போகிறாள். என் கழுத்தை நெறிப்பதுபோல் கட்டிக்கொண்டு என் மார்மேல் படர்ந்திருக்கிறாள் உடல், நெருப்பில் வதங்கிய வெற்றிலையாய்ச் சுருண்டுவிட்டாள்.

கொட்டு மழையில் ஒதுங்க இடமின்றி இருவரும் சொட்டச் சொட்ட நனைந்து வந்த அன்றிலிருந்து ஒரு வாரம் நேற்றிரவுவரை உடல் மழுவாய்க் காய்ந்தது. இன்று கம்பளிக்கடியிலும், முழங்கால் சில்லிப்பு மெதுவாய, ஆனால் தீர்மானமாய் இரக்கமற்று மேல் ஏறிக்கொண்டே வருகிறது.

என்னை அவளுக்குத் தெரியவில்லை. அவள் தாய் என்னிடமிருந்து அவளைப் பிடுங்கப் பார்க்கிறாள். ஆனால் குழந்தையின் ஆலிங்கனம் என் கழுத்தை நெறிக்கின்றது. வாய்க் கூரையை வரண்ட நாக்கு ''தாத்தா தாத்தா'' என்று சப்தமற்று உதைக்கின்றது.

''என் கண் எங்களிடம் ஒட்டாமலே போயிட்டாளே!'' என்று பாலுவின் மனைவி வாயிலும் வயிற்றிலும் அடித்துக்

கொள்கிறாள். பாலு என்னை ஒரு தினுசாய்ப் பார்க்கிறான். எல்லோரும் எங்களைப் பார்க்கிறார்கள்.

அவர்கள் கொடுத்து வைத்தவர்கள். அவர்களிடம் அழுகையிருக்கிறது. அதுகூட என்னிடமில்லை.

திடீரென என் கழுத்தின்மேல் பிடி தளர்கின்றது. குழந்தையின் தலை சாய்கின்றது. கனத்தை மெதுவாய் கீழே இறக்கிவிட்டு எழுகிறேன்.

பாம்பைக் கண்டாற்போல், எல்லோரும் எனக்கு வழி விட்டு, ஒரு மூலையாய் ஒதுங்கி என்னையே பார்க்கிறார்கள்,

திண்ணையில் போய் உட்கார்ந்து விடுகிறேன்.

எல்லோரும் அலைகளே.

என்னை அழைத்துப்போக வரும் பேரப் பிள்ளைகளின் குரல்கள் கேட்கின்றன.



## "தெறிகள்"

பொல பொலவெனப் பொழுது புலரும் வேளை. கூக் குரல். ஒரே அமர்க்களம். விழித்துக் கொண்டேன். படுக்கை யினின்று எழுந்து அலறிப் புடைத்துக் கொண்டு ஓடினேன். எதிர்வீட்டு மேலண்டை சுவரின் அருகே சந்தில் கூட்டம் அலையிரைந்து நெரிந்தது. உள்ளே புகுந்து சுவருக்கெதிரே வெளிவந்தேன். சுவரில் கன்னம். கன்னத்தின் பக்கத்தில், எடுத்த கல்லையும், மண்ணையும் ஒழுங்காய் குவித்திருந் தது. கன்னம் வைத்தவன் வேலையில் சுத்தம். சுவரின் திறந்த வாய்ச் சிரிப்பின் ஒழுங்கற்ற பற்கள் போல் கன்னத் தின் வழி அடுக்குள் சாமான்கள் தெரிந்தன.

கன்னத்தின் எதிரே வீட்டுக்கு சொந்தக்காரர்கள் வட்ட மாய் நின்றனர். வீட்டுக்கார முதலியார் வழக்கப்படி முழங் காலுக்கு மேல் தூக்கி, ஒற்றை வேட்டி கட்டி, பானை வயிற் றின் மேல் கைகட்டி நின்றார். அவர் எப்பொழுதுமே பேசமாட்டார். பக்கத்தில் அவர் மனைவி கன்னத்தில் கைவைத்து நின்றாள்.

ஐயா யானைக்குட்டி.

அம்மா வெள்ளை யானைக்குட்டி.

'அத்தை! அத்தை!!' உள்ளிருந்து மூத்த மருமகள் பதறி ஓடி வந்தாள். 'ஐயோ அத்தே! ஐயோ!' மலை போன்ற மாமியை இறுகக் கட்டிக் கொண்டு அழுதாள்.

'என்னதான் சொல்லேன் அம்மே!'

ஆனால், மருமகளுக்குப் பேச வரவில்லை. அத்தையின் தோளில் புதைந்த முகம் நிமிர அஞ்சிற்று. வலது கரம் மாத்திரம் தூக்கிற்று. அதிலிருந்து அறுந்த தாலிச்சரடு பொட்டுடன் தொங்கிற்று.

'ஹா!—'

மார்பின்மேல் கவ்விய கையுடன் முகம் மேனோக்கிய நிலையில் என் மனத்தில் விறைத்துவிட்ட அவ்வுருவத்தின் வார்ப்பு இன்னமும் கனவிலும் நினைவிலும் வட்டமிடு கின்றது.

பொல பொலவெனப் பொழுது புலரும் வேளை.

வெள்ளிக்கிழமை

அடுத்த வருடம் நான் ஊருக்குச் சென்றபோது அவள் இல்லை. ''மஞ்சள் கயிறை மருமகள் கண்டெடுத்துக் கொண்டு வந்து கொடுத்த அன்னிக்கே, அப்பவே, அவளுக்கு பூமிலே வேர் விட்டுப்போச்சுடா! அவமானம் ஒருபக்கம். அந்த நிலை தனக்கு நேர்ந்துவிடுமோ என்கிற திகில் வேறே கண்டூடுத்து—அதனாலேயே கணவனை முந்திக்கத்திடம் பண்ணிண்டூட்டா. பிள்ளையார் மாடத்துக்கெதிரே உறியில் தொங்கும் விபூதிப் பல்லாயிலிருந்து தினம் ஒருகை வாயில் அள்ளி அள்ளிப் போட்டுண்டு, சோகை புடிச்சுப் போச்சு. இங்கே நடக்கிற வைத்தியமும் அப்படி இப்படித்தான்! விஷயம் முற்றிப் போச்சு. ஆனால், உயிரின் எண்ணத் தையே துறந்தவளிடம் சஞ்சீவியே என்ன பண்ண முடியும்?''

அம்மாவின் பேச்சை நின்று கேட்க முடியவில்லை. மூச்சு திணறிற்று. வெளியே வந்தேன்.

எதிர்வீட்டுத் திண்ணையில் முதலியார் உட்கார்ந்திருந் தார்.

யானைக்குழியில் விழுந்துவிட்ட காட்டானையைப் பார்ப்பது போல் பயமாயிருந்தது. மண்பிள்ளையார் முகத் தில் பதித்த குந்துமணிகள் போன்று சிவப்பேறிய கண்களில்

விழிகள், கீழே விழ மறுத்து அங்கேயே வரண்டுவிட்ட கண்ணீரின் காங்கையில் கனன்றன. மழமழத்துக் கருங்கல்லாயிருந்த சதை சுருங்கி, சொரசொரத்து எலும்புக்குப் பாரமாய்த் தொங்கிற்று.

முறை மறந்துபோய், சேர்ந்து வருவதுபோல், நேரத்துக்கொருமுறை நீண்ட உலைமூச்சு கிளம்பிற்று.

முதலியார் எப்பவுமே பேசமாட்டார். கால்மணி, அரை மணிக்கொருமுறை, மூக்கில் சதை அடைத்துக்கொண்டாற்போல், ஒரு கரடி உறுமல்தான் அவர் பாஷை.''

' நெல்லை மாடு மேயுது.''

''தலை முழுவணும், சுடுதண்ணி விளாவு.''

''எள்ளுத் துவையலில் புளிகூட.''

''பிள்ளையார் கோயிலுக்கு விளக்கு வெச்சாச்சா?'.

''பண்டாரம் வாசல்லே பசின்னு நிக்குது.''

அந்தந்த சமயத்தின் அந்தந்த அர்த்தத்தை அவர் மனைவியால்தான் புரிந்துகொள்ள முடியும்,

''உத்தமி, சுமங்கலி கொடுத்து வைத்தவள். முற்றத்தின் நடுவில் மேடை கட்டினாற்போல், மஞ்சள் பற்றிய நெற்றியில் பலகையா அந்தக் குங்குமத்தை இன்னி முழுக்கப் பார்த்துண்டிருக்கலாம்!''

அதெல்லாம் சரிதான். அல்ல சரிதானோ என்னவோ? ஆனால், வாய்விட்டுத் தீர்க்காததால் தன் மேலேயே திரும்பிவிட்ட துக்கத்தின் சிதையில் மனிதன் உயிரோடு வேகும் அனல் என்மேல் தெறிக்கின்றது.

## 2

ஒரு கலியாணத்துக்குப் போயிருந்தேன். ராத்திரி 'டின்னர்' பாதிநடந்து கொண்டிருக்கிறது. பாதம்கீர் சமயம் கையில் ஏந்திய தொன்னையில் பவுனை உருக்கி வார்த்தாற்

போல் கோகர்ணத்திலிருந்து பாயஸம் இறங்குவதைப் பார்த்துக் கொண்டிருக்கையிலே 'குப்'பென்று விளக்குகள் அணைந்தன.

மின்சாரம் திரும்பவில்லை.

கைகாயக் காத்திருந்ததுதான் மிச்சம்.

பெட்ரோமாக்ஸு'க்கு எவனோ ஓடினான். போனவன் திரும்பவில்லை. அப்படியே ரயிலேறி விட்டானா என்று பந்தியில் எவனோ கிண்டல் பண்ணினான்.

பிறகு எந்தப் புண்ணியவானுக்கு யோசனை தோன்றிற்றோ தெரியவில்லை. அவசரமாய்ப் பக்கத்துக் கடையிலிருந்து மெழுகுவர்த்திகள் வாங்கி வந்து விநியோகம் ஆயின. ஒரு வழியாய் சாப்பாடு முடிந்து இலையிலிருந்து எழுந்தோம். ஆனால் மனதுக்குத் திருப்தியில்லை. ருசி கெட்டுவிட்டது. வயிறு நிறையவில்லை. அதனாலேயோ, அதற்கு முன்னாலேயோ நடுப்பந்தியில், நடுக்கூடத்தில் விளக்கு அணைந்துவிட்டதாலோ, மனநிறைவில்லை.

கிணற்றடியில் கைகழுவ 'க்யூ' நின்றது. இடையிடையே மெழுகுவர்த்திகளின் ஒளித்தெறிப்புக்கள், 'லைன்' மாறிக் கொண்டிருக்கும் ரயில் வண்டித் தொடர் போன்ற 'க்யூ'வின் வளைவைக் காட்டின.

எனக்கு முன்னால், கலியாணப்பெண ஒரு வர்த்தியைப் பிடித்துக் கொண்டு நின்றாள். அவளுக்கு முன் கலியாணப் பிள்ளை.

இந்தப் பந்தியிலேயே அவள் ஒருத்திதான் பெண்.

திடீரென்று கலியாணப்பிள்ளை துள்ளிக் குதித்தான்.

''என்ன? என்ன?''—எல்லோரும் பதறினர்.

''ஒன்றுமில்லை''—ஏந்திய எச்சிற்கையில் முழங்கையை மறுகையால் பரபரவென்று தேய்த்துக் கொண்டான்.

''சொல்லேண்டா!'' —ஒரு கிழவர் பொறுமையிழந்து கத்தினார்.

"இருட்டுவேளை இடம் புதிசு, ஒன்றுமில்லேன்னா என்ன அர்த்தம்?"

"ஒன்றுமில்லை பெரியப்பா மெழுகு ஒரு சொட்டு சிந்தி விட்டது."

திகைப்பில் ஒரு கணம் 'க்யூ' முழுக்க வாயடைத்தது. மறுகணம் அத்தனை பேர்களின் சிரிப்பும் ஒரு பிழம்பாய்ப் பீறிட்டது.

கலியாணப் பெண்ணுக்கு முகம் கவிழ்ந்தது. கூட்டத் தில் குஷி இன்னும் தூக்கிற்று. ஆரவாரம் அதிகரித்தது. அப்போது எங்கள் இருபக்கங்களிலும் சாப்பாட்டுக்கு இன்னும் காத்துக் கொண்டு நின்ற பெண்கள் கூட்டத்தி லிருந்து ஒரு குரல்—கட்டைக்குரல்—புகைந்தது.

"ஏற்கெனவே என் பிள்ளைக்கு மிலிட்டேரிலே வேலை.

"சாப்பாட்டு வேளையில் விளக்கணைஞ்சு போச்சேன்னு நான் அடிவயத்துலே நெருப்பை கட்டிண்டிருக்கேன். நீ தாலி கட்டினதும் கட்டாததுமாய் அவனைச் சுட்டுப் பொசுக்க ஆரம்பிச்சூடு!"

கழுத்தை வெட்டி விட்டாற்போல் மணமகளின் தலை இன்னும் தாழ்ந்து தொங்கிற்று. அவள் கை மெழுகுவர்த்தி வெடவெடவென உதறிற்று. திரியடியில் மெழுகின் தண் துளும்பிற்று. அவன் அவள் கையிலிருந்து மெதுவாய் வர்த்தியை வாங்கிக் கொண்டான். மெழுகின் சுடரில் ஒளி வீசிக்கொண்டு அவன் புறங்கையின் மேல் ஒரு அனல் சொட்டு இறங்கிப் பொரிந்து மலர்வது கண்டேன்,

ஆனால், அது மெழுகின் சொட்டு அல்ல.

ஒருவரும் தன்னைப் பார்க்கவில்லை என்றுதான் நினைத்துக் கொண்டபோது, அவன் கையைத் தூக்கி அந்த இடத்தை நக்கிக் கொண்டான்.

அவனுக்கு நாளைக்கு வண்டி. இன்னும் ஆறுமாதம் கழித்துத்தான் வருவான். பிறகுதான் சாந்தி கலியாணம்.

அதுவரை அவன் உட்கொண்ட அவள் நெஞ்சின் உருக்கு, அவன் இதயத்துள் நக்ஷத்திரம்போல் பிரகாசித்துக் கொண் டிருக்கும்.

அதன் ஒளியில் என் விழியோரங்கள் உறுத்துகின்றன.

## 3

இன்னொரு சமயம், இன்னொரு வீட்டில். இன்னொரு விசேஷத்துக்குப் போயிருந்தேன்.

நாட்டுக்கோட்டை செட்டியார் வீடு. அவர் செல்வ னுக்குப் 'புதுமை'. வீடான வீடு! வீடா அது? அரண்மனை!

கிணற்றை ஒட்டிய சிமிட்டித் தொட்டியின் அகலமும் நீளமும் ஒரே சமயம் இந்தப் பக்கம் நாலு அந்தப்பக்கம் நாலு ஆக எட்டுக் குதிரைகளுக்குத் தண்ணீர் காட்டலாம். செட்டியார் வீட்டு விசேஷத்தில் கூட்டத்துக்குக் கேட்க ணுமா? சம்பந்திகள், சிப்பந்திகள், தெரிந்தவர்—தெரியா தவர், வருவோர்—போவோர், புகுந்து புறப்படுவோர்—ஒரே உற்சவந்தான்; கடல் பொங்கிற்று.

வந்திருப்பவர்களுள் ஒரு குழந்தை அத்தனை பேர் உள்ளத்தையும் கொள்ளை கொண்டது. வயது மூணு இருக் குமோ? நாலு இருக்குமோ? வேற்று முகம் இல்லை. யார் அழைத்தாலும் அழைத்தவரின் விரிந்த கரங்களிடையே சிரிப்புடன் சென்றான்.

தந்தப் பொம்மைப்போல் சிறு கூடாய், அதற்குள் அளவில் அமைந்த அவயவங்கள், அவையுள் முகத்தில் செதுக்கிய அங்க நயங்கள்.

குழந்தைக்குரியவர் அவனுக்கு 'கிருஷ்ண' அலங்காரம் பண்ணிவிட்டிருந்தார்கள். நெற்றியில் 'கோபி', கோபியின் பாதத்தில் குங்குமப் பொட்டு. தலையில் முன் கொண்டை, அதில் சொருகிய மயிலிறகு. இடையில் 'ஸேடின்' நிஜார்.

கையில் குழல்தான் பாக்கி. யார் தூக்கிக்கொண்டாலும், அவள் எவ்வளவு ரூபவதியானாலும், அவள் ஒளி உடலே மங்கிற்று- அதைக் குழந்தை வாங்கிக்கொண்டாற் போல்.

'குழந்தைக்குச் சுற்றிப் போடுங்கள் ஆயுசோட நன்றா யிருக்கணும்!''

தாயாருக்குப் பெருமை தாங்க முடியவில்லை. குழந்தை முகத்தைச் சுற்றித் தன் நெற்றியில் நெரித்துக்கொண்டாள். சொடக்குகள் சொடசொடவென்று உதிர்ந்தன. குழந்தை இடுப்பினின்றிழிந்து, கூட்டத்தில் புகுந்து, தன் வயதுக் குழந்தைகளுடன் விளையாடக் கலந்து கொண்டான்.

''ஒரு வயதுக்குமேல் எந்தப் பொம்மனாட்டியும் வெறுங் கையை வீசிண்டு வெளியே கிளம்பக்கூடாது.''

பெண்கள் கூட்டத்தை அவள் வெற்றிப் பார்வை வெள் ளோட்டம் விட்டது. 'இடுப்பில் ஒரு குழந்தை இருந்தால் தான் அழகு. அதுதான் அவளுக்குக் கௌரவம்!'

அவள் பெருமிதத்தில் ஆச்சரியமில்லை. ஆனால் எல் லோருக்கும் அவளுக்கு வாய்த்தாற்போல் இடுப்புக்கு எடுப் பாய்க் கிடைக்கணுமே என்பதுதான் கேள்வி,

செட்டியார் வீட்டு வைபவம் பிரமாதம். தெருவை யடைத்துப் பந்தல். இரண்டு 'ஸெட்' பரிசாரகர். சமை யல் ஓயாமல் நடந்துகொண்டேயிருக்கிறது. மத்தியானச் சாப்பாட்டிற்குப் பிறகு பஜனை. பிற்பகல் நாயனம். மாலை 'டீ பார்டிக்கு'ப்பின் பாட்டுக் கச்சேரி. இரவு விருந் துக்குப் பின் சதிர்க் கச்சேரி. இரண்டு பெரும் அறைகள் தேங்காய்க் கிடங்காயும் பாத்திரக் கிடங்காயும் மாறியிருக் கின்றன. என்னால் மூக்கில் விரலை வைக்காமல் இருக்க முடியவில்லை. முந்திரி, மாகாணிமேல் தன் பாதங்களை ஊன்றித் தானே இங்கு மகாலக்ஷ்மி இப்படிப் பெருகி யிருக்கிறாள்!

பகல் பந்திகள் ஓய்ந்தன. 'கிருஷ்ண கானம்' ஆரம்பிக்க இருக்கிறது. யாருக்கு யோசனை தோன்றிற்றோ தெரிய வில்லை. 'அந்த கிருஷ்ண வேஷக் குழந்தையை முன்னால் உட்கார வையுங்களேன்!'

குழந்தையைக் காணோம்.

ஒரு நிமிஷத்தில் கலவரம் தெருவைப் பற்றிக் கொண்டது.

''ஐயையோ!'' புதிதாய் ஒரு அலறல் புழக்கடையி லிருந்து கேட்டு எல்லோரும் அலறிப் புடைத்துக்கொண்டு ஓடினோம்.

நான் அங்கு போய்ச் சேரக்கூடவில்லை. சேரவேண்டிய அவசியமேயில்லை. கைகள் வெலவெலத்து விட்டன. கிணற்றையொட்டி, எட்டுக் குதிரைகளுக்கு ஒரே சமயத்தில் தண்ணீர் காட்டும் அளவுக்குக் கட்டிய சிமெட்டித் தொட்டி யின் விளிம்பிலிருந்து ஒரு மயிலிறகு எட்டிப் பார்த்தது.

'கிறீச்' சென்ற ஒரு கத்தல், செட்டியாரின் அரண்மனை யைத் துருவிற்று. குழந்தைக்குச் சொந்தக்காரி.

''ஐயோ பெத்தவளுக்கு என்ன பதில்சொல்வேன்!''

அதைக் கேட்டதும் அதன் அர்த்தம் என் மண்டையுள் தோய்ந்ததும், உடல் முழுவதும் பயங்கரமாய் மின்சாரம் தெறித்தது.

குழந்தையைத் தோற்றவள், குழந்தைக்குத் தாயென்று நாங்கள் நினைத்துக் கொண்டிருந்தவள், குழந்தைக்குத் தாயில்லை. தான் சொன்னபடி குழந்தையைத் தன் இடுப் புக்கு அணியாய்க் கொண்டு வந்தவள்தான்.

எனக்கு விழிப்பு வந்தபோது பொலபொலவென்று பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. வண்டியில் எதிர் 'ஸீட்'டில் ஒரு ஸ்திரீ, அவளுடைய முழந்தையைத் தவிர வேறுயாருமில்லை.

அவள் எங்கே, எப்போது ஏறினாளோ, மற்றவர்கள் எங்கெங்கே, எப்போது இறங்கினார்களோ தெரியாது. ரயிலின் தாலாட்டு அவ்வளவு சுகமாய் இருந்திருக்கிறது.

கண்ணன் எனக்கு முன்னாலேயே விழித்துக்கொண்டு விட்டான். அவன் உடம்பில் என்னதான் ஓடுகிறதோ, அவனால் ஒரு நிமிஷம் சும்மாயிருக்க முடியாது. ஆம்பிலேறித்தோம்பில் விழுவதும், ஜன்னல் வழி எட்டிப் பார்ப்பதும், பதில் கிடைக்காத கேள்விகளைக் கேட்பதும்—தூங்கும் சமயத்தில் கூட, நிஷ்டையிலிருப்பதுபோல் விழிப்பிலிருக்கிறான்.

எதிர் 'ஸீட்'டில் இருக்கும் அவள் குழந்தையை சிநேகிதம் பிடிக்க ஆரம்பித்துவிட்டான். அவள் காதுவரை இழுத்த மையின் மாயத்தில், அளவினும் பெரிதாய்த் தோன்றிய அகன்ற விழிகள் முதலில் 'லேடி' தோரணை. பிறகு வியப்பு, பிறகு மகிழ்ச்சி! பிறகு படிப்படியாய் வயதுக்கேற்ற தன்மைக்குக்கிறங்கி கண்ணன் சேஷ்டைகளில் அவை குழைந்தன. ஒருவரையொருவர் முதலில் மௌனமாய் ஆராய்ந்த பின், அவள் பட்டுச் சொக்காயைத் இவன் தொட்டுப் பார்க்க, அவள் தோள்களைக் குலுக்கிக்கொள்ள, இருவரும் விளையாட ஆரம்பித்துவிட்டனர்.

ஜன்னலுக்கு வெளியே கவனித்துக் கொண்டிருந்த தாயின் முகம் பக்கவாட்டில் திரும்பியிருந்தது.

எட்டினால் தொட்டுவிடலாம்போல கிட்டத் தழைந்து தோன்றிய வானில் செந்திட்டு வீசிப் படர்ந்தது. பாலங்களினடியிலே ஜல ஜரிகை ஓடி வீசிற்று. ஒவ்வொரு விடிவும் ஒரு புது வாழ்வு எனும் உண்மையின் துலக்கமாய், ஆங்காங்கே. மிருக மனித உருவங்கள் சிறிதும் பெரிதுமாய், தாவரங்களிடையே திடீரென முளைத்தன.

''இப்படி இப்படி இருந்திருந்தால் எப்படி எப்படி இருந்திருக்கும்?'' என்று பசித்தவன் பழங்கணக்கு எண்ணங்களில்

குழைத்து, ஜன்னலின் சட்டத்துள் தீட்டிய சித்திரமா அல்லது உயிர் முகமா, அல்லது முழுத் தூக்கம் கலையா அரை விழிப்பில், மனத்தின் அடிவாரத்தினின்று, இந்த ஜன்மத்தில் முழுக்காரணம் புரியாது. எத்தனையோ முற் பிறவிகளுள் எப்பிறவியின் அச்சாலோ எழுந்து, இதோ மறுகணம் மறைந்துவிடப்போகும் கனவா?

'வீல்' என அலறல் கேட்டு இருவரும் துடித்துத் திரும்பினோம். அந்தப் பெண் வலது கன்னத்தை ஏந்திக் கொண்டு கத்தினாள். கண்ணன் அவளையும் எங்களை யும் மாறி மாறித் திருதிருவென விழித்தபடி நின்றான்.

'என்னடா கண்ணா?'

அவள் தன் குழந்தையை அணைத்துக்கொண்டு கேட்டுத் தெரிந்துகொண்டதும் அவள் விழிகள் கொதித் தன. கண்ணனைப் பார்த்துத் தெலுங்கில் ஏதோ மளமள வெனக் கொட்டினாள். பிறகு அவள் குழந்தையின் முகத்தைச் சுட்டிக்காட்டி என்னிடம் ஏதோ இரைந்தாள். அவள் பெண்ணின் கன்னத்தில் வெடுக்கென சிவந்து மேலுங் கீழும் இரண்டிரண்டாய் நான்கு பற் குறிகள் தெரிந்தன. எனக்குப் புரிந்துவிட்டது.

'ஏண்டா அவள் கன்னத்தைக் கடித்தாய்?'

'எனக்குத் தெரியல்லேப்பா! பாப்பா மேலே ஆசையா யிருந்தது, கட்டிண்டேன்—'

குழந்தைக்கு முகம் வெளுத்துவிட்டது. அவனுக்குப் புரியாது, தெரியாது. கட்டுக்கடங்காத ஒரு செயலின் பீதி யில் அவன் குழம்பி நிற்கையில் அவனைப் பார்க்கப் பரிதாபமாயிருந்தது. அவனை என் பக்கமாய் இழுத்து அணைத்துக் கொண்டேன்.

அவள் தன் குழந்தையை என்னென்னவோ கொஞ்சி, செல்லம் சொல்லி, கன்னத்தைத் தொட்டுத் தடவி

திடீரெனக் குனிந்து, கடித்தவிடத்தில் முத்தமிட்டாள். அதைக் கண்டதும் என் உடல் முழுவதும் புல்லரித்து, ஒரு இன்ப பயங்கரம் கால் கட்டை விரலிலிருந்து மண்டை உச்சிவரை ஊடுருவிற்று. நான் மூர்க்கவசமானேன். கண்ணனை இழுத்து, அணைத்து முத்தமிட்டேன்.

என் செயல்கண்டு அவள் மீண்டும் தன் பெண்ணை முத்தமிட்டாள். இருவரும் மாறி மாறி அவரவர் குழந்தைகளை முத்தமிட்டுக் கொண்டிருந்தோம்.

ரயில் அகன்ற மைதானத்தின் நடுவே போய்க் கொண்டிருந்தது.

உருவிழந்த ஆசைகள், உருக்குலைந்த ஆசைகள், உருமாறிய ஆசைகள், உருவுக்குக் காத்திருக்கும் ஆசைகள், உருக்கசந்த ஆசைகள், எல்லாம் சேர்ந்த வெறியாட்டங்கள் தன்மேலும், ஒன்றன்மேல் ஒன்றும் தம்தம் வஞ்சம்களைத் தீர்த்துக்கொண்டு, மீண்டும் தம்தம் உரு பிசுபிசுக்கவும், உருமாறவும், உரு அழியவும், உரு, பிறக்கவும் வசதியாய் அமைந்த பலிபீடம் போன்ற மைதானம்.

கீழ்த்திசையில் மேகங்களைப் பிளந்தவண்ணம் புறப்பட்டுக்கொண்டிருக்கும் ஒளி எரிமலைபோல் குமுறியது.

கண்ணன் கோபத்துடன் திமிர முயன்றான். 'உன் மூஞ்சி குச்சி குச்சியாக் குத்தறதப்பா! இதென்ன முத்தப் போட்டி—?'

அவளுக்கு மூச்சு இரைத்தது. அவளுடைய கரடியணைப்பில், அவள் குழந்தைக்கு விழிகள் பிதுங்கின.

ரயிலின் ஓட்டம் மெதுவடைய ஆரம்பித்து விட்டது. கண்ணனையும் கைப்பெட்டியையும் தூக்கிக்கொண்டேன். நான் இறங்கவேண்டிய இடம்.

நாங்கள் இறங்கிக் கொண்டேயிருக்கையில் திடீரென்று அவள் வாய்விட்டுச் சிரித்தாள். பாய்ச்சி கையியைக் குலுக்

கினாற்போல் அதில் ஒலித்தது வெற்றியா? கேலியா? கோபமா? ஏமாற்றமா? எல்லாமேவா? வேறு எதுவோ? இன்னமும் அச்சிரிப்பின் உருட்டு நெஞ்சில் தெறித்துக்கொண்டிருக்கிறது.

## 5

படத்தில் சுவாரஸ்யமான கட்டம். பிரபல கதாநாயகியின் பிரமாதமான நடிப்பு. திரை முழுக்க (இன்னும் இடமிருந்தால் அதையும் அடைத்துக்கொள்ளும்) அடைந்த 'க்ளோஸ் அப்' ஏன், இப்பொழுது தியேட்டரில் இருக்கும் அத்தனை பேர் நெஞ்சையும் அது அடைத்துக்கொண்டு தானிருக்கிறது. குகைகள் போன்ற பெரிய கண்களிலிருந்து இரண்டுபெருக்குகள் புறப்பட்டு, மலைபோன்றபிரம்மாண்டமான கன்னங்களின் சரிவுகளிலிருந்து பின்னணி சங்கீதத்தின் சலங்கை மணி உருளல்களுக்குச் சரியாய், சரிந்து கொண்டிருக்கின்றன.

''த்ஸோ த்ஸோ த்ஸோ?''—நாயைக் கூப்பிடுபவர் எத்தனை பேர்.

''ஹாஹ் ஹா''—மிளகாயைக் கடித்தவர் எத்தனை பேர்! பெண்கள் கூட்டத்தில் ஒன்றிரண்டு விசிப்புகள்.

'பட்'—படம் அறுகிறது.

ஒற்றை 'பல்ப்' ஏற்றிக்கொள்கிறது.

'பாபூ, மீனு, உடனே புறப்பட்டு வாங்கோ. அப்பாவுக்கு உடம்பு ஜாஸ்தி ஆகிவிட்டது.

எனக்கு முன் வரிசையில் எனக்கெதிர் நாற்காலிகள் இரண்டில் கலவரம் உண்டாகிறது.

''அம்மா அம்மா போயிடுவோம். அப்பாவுக்கு உடம்பு ஜாஸ்தி ஆயிடுத்தாமே!—''

'இன்னும் கொஞ்ச நேரம், அஞ்சு நிமிஷண்டா! கதையின் திருப்பம் தெரிஞ்சுண்டுடலாம்.'

''இல்லேம்மா போயிடுவோம்மா, எனக்குப் பயமாயிருக்கு. இதுக்குள்ளே அப்பாவுக்கு என்ன ஆயிடுத்தோ?''

அவன் தாய் சபித்துக்கொண்டே எழுகிறாள். அவள் குரல் தாழ்ந்திருந்தாலும், என் செவிகளில் பளிச்சென்று விழுகிறது,

''இந்த மனுஷனுக்கு என்ன வேலை? நித்யகண்டம் பூரண ஆயுசா வருஷமாத் தள்ளிப்பிட்டு இன்னிக்கு வேலை தேடிக்கிற வேளையைப் பாரு!''

□□□

# இதழ்கள்

ஜகதா வந்துட்டா. வேறே அத்தாட்சியே வேண்டாம். இன்னிக்குக் காலையிலிருந்து வீடு நிர்த்தூளியாறதே போதாதா? கபாலி டப்பா மாதிரி வீட்டையே தலைகீழாக் கொட்டித்தட்டியாறது. ஈசல்மாதிரி மூலைக்கு மூலைக்கு அதுக்குள்ளே புகார். வென்னீருள்ளே ஸோப்பைக் காணோம். ஸோப்பு எனக்கென்னத்துக்கு? பொண்ணாப் பொறந்து குப்பை கொட்ட ஆரம்பிச்சதே மொதக்கொண்டு கடலைமாப் பொடிதான். ஆனால் அவருக்கு வேணுமே? வெச்சது வெச்ச இடத்தில் இல்லேன்னா வீட்டை ரெண்டு பண்ணுவாரே! வாய் கொப்பளிக்கறப்போ 'ஜகதாவே, என்னடி! தண்ணு ஸோப்பு நாத்தம் அடிக்கிறதே'ன்னப் போத்தான் பார்த்தேன். பாத்தா, அண்டா அடிலே சோப்புவில்லை கிடக்கு. தாவாரத்து மூலையிலே தொடைப்பம் அவுந்து விசிறியா சரிஞ்சு விழுந்திருக்கு. கையோட்டிப் புள்ளைக்கு மூதப் புள்ளை, கொப்புளம் ஊதி ஊதிக் காலாக்கரைச்சிருக்கு.

இதெல்லாம் சரிப்படுத்திட்டு அப்பாடான்னு இடுப்பு நிமிர்ரத்துக்குள்ளே முன் மாதிரி இருக்கா? கூடத்துலே பக்கத்தாத்துக் குழந்தை வீல் வீல்னு கத்தறது. என்னைக் கண்டதும் ''ககே-கபே-பாகே-லாப்ளீகா—''ன்னு ஏதோ உளறிக் கொட்டிண்டு ரமேஷைக் காமிச்சு காமிச்சு விக்கி அழறது. வயிறு தொப்பையெல்லாம் வாயெச்சில் தொப்பமா வழிஞ்சிருக்கு.

''என்னடா பண்ணே கொழந்தையே?''

''ஒண்ணுமில்லே பாட்டீ! ஆசையாயிருந்தது, தொட்டாலே ஏன் பாட்டி இதுக்குத் தொட்ட இடம் திட்டா செவக்கறது? அடித்தொடை சதை ரொட்டிமாதிரி மெத்து மெத்துனு சொகம்மாயிருக்கு--அப்பா-!''

''அடப் பாவீ!'' கொழந்தையை அப்படியே வாரிண்டேன். அதுக்கு என் மேலே தனி ஆசைதான். கிருஷ்ண விக்ரஹம் மாதிரி கொழு கொழுன்னு. அதன் அம்மாவுக்கு அது போடற கத்தல் காது கேக்காமல் இருக்கணுமேன்னு நேக்குக் கவலை. ஏற்கெனவே கொழந்தை அவள் இடுப்பிலே ருந்து எங்கிட்டே தாவறதே அவளுக்கு ஒரு சமயம் போல் ஒரு சமயம் வேண்டியில்லே. ஆனால் அவள் கை வேலையாயிருக்கப்பவும் ஆம்படையானோடே கை கோத்துண்டு சினிமாவுக்குப் போறப்பவும் குழந்தையைப் பார்த்துக்க அகிலா மாமி வேண்டி இருக்கே ஒழிய; குழந்தை தானே கால்சறுக்கு விழுந்தாலும் 'மாமி தள்ளிவிட்டாளா?'ன்னு கேக்கறதுக்குக் கூசறதில்லை.

இப்போக்கூடப் பயமாயிருக்கு. தோட்டத்துலே விளையாடிண்டிருக்குகள். போடற கத்தல் காதைப் பொளியறது. என்னத்தைப் பண்றதுகளோ? எந்தச் செடியைப் புடுங்கி எறியறதுகளோ? எந்தப் பாத்தியைத் திமிதிமின்னு மிதிக்கறதுகளோ? ஆசையாப் போட்டேன். அவரும் சேர்ந்து தோண்டி, நட்டு, தண்ணி பாய்ச்சி இருக்கார். கொஞ்சம் நலுங்கினாலும் எனக்குமேல் அவருக்குக் கண்ணுலே ரத்தம் சொட்டும். அதை நெனைச்சுண்டா பயமாயிருக்கு. ஜகதா ஒரோரு தடவையும் வந்து தங்கிட்டுப் போறவரைக்கும் ஒரோரு நாளையும் இன்னிப் பொழுது போச்சா இன்னிப் பொழுது ஆச்சான்னு எண்ணி எண்ணி மூச்சுவிட வேண்டிதாயிருக்கு.

இன்னிக்கு வரப்பவே அவளுக்கும் அவள் அப்பாவுக்கும் சின்ன தர்க்கம் வந்தூடுத்து.

அப்போத்தான் அவர் எங்கோ கிளம்பிண்டிருந்தார். "பாண்ட்" (அது என்ன பாஷையோ-குழாய் மாதிரி யிருக்கே) அதை மாட்டிண்டிருந்தார். வாசல்லே கார் வந்து நிக்கற சத்தம் கேட்டது. நான் அடுப்பங்கரையிலே வேலை யாயிருந்தேன். வந்தால் என்ன, அவரைப் பார்க்க யார் யாரோ வரா. ஜகதான்னு கண்டேனா? அவளை நான் எதிர்பார்க்கவுமில்லை.

''அப்பா வந்தூட்டேன் போங்கோ. நீங்களும் கிளம் பிண்டிருக்கேள். நானும் வந்துண்டிருக்கேன். உங்களுக்கு நல்ல சகுனம்தான் போங்கோ-?''

''அட ஜகதாவா?''

''நானேதான், வேறென்னவா உங்களுக்குத் தோண றது?'

''எப்போ வந்தே?''

''அதான் வந்துண்டேயிருக்கேனே தெரியல்லியா?''

''தெரியறது தெரியறது''

''என்னப்பா ஒரு மாதிரியா பேசறேள்?''

அதுக்குள்ளே நல்ல வேளையா நான் போயிட்டேன். ஈரக்கையை முந்தானையிலே துடைச்சுண்டு.

என்னைக் கண்டதும் அத்தனை குழந்தைகளும் "பாட்டி பாட்டீ''ன்னு ஓடிவந்து மொச்சுண்டுடுத்துகள். குழந்தைகளை எனக்குப் பிடிக்கலையா என்ன? அதுகளின் துஷ்டத்தனத்தைக் கண்டாத்தான் கதி கலங்குகிறது!

''அட வாங்கோடா என் கண்களா! வாம்மா ஜகதா, எப்போ வந்தே? சௌக்கியமா? வரப் போறதா ஒரு வரி போடக் கூடாதா?''

ஜகதா என்னை ஏன் இப்படி ஏற இறங்கக் கண்ணால் அளந்து பாக்கறா?

ஒரு காலை வாசற்படிமேல் வெச்சுண்டு ஜகதா நின்னாள்.

"அப்பாவுக்கு நான் வந்தது அவ்வளவா பிடிக்கல்லை போலிருக்கு அம்மா, ஒரு தினுஸாப் பேசறார்!"

"நான் ஒண்ணுமே சொல்லலையே!" என்கிறார், அவர் திருதிருன்னு முழிச்சுண்டு. அவர் போடறது வேஷமா நிஜமான்னு எப்பவுமே தெரியாது.

"அப்பா என்னை இன்னும் வான்னு சொல்லல் லேம்மா"

"நான்தான் சொல்றேனே; உன் அப்பா சுபாவம் உனக்குத் தெரியாதா ஜகா?"

"நீ சொன்னால் போதுமா அம்மா? பெத்தவாளும் பொண்ணுமானாலும் கோத்ரம் மாறிப்போச்சு, இடம் மாறிப் போச்சுங்கறது எல்லாம் இருக்கே! இன்னும் எவ்வளவோ இருக்கே!"

"நீங்கதான் வாயைத் திறந்து வான்னு சொல்லுங்களேன்! வாய் முத்து உதிர்ந்து போயிடுமா?"

"ஜகதா வா வா வா வா வா—"

அப்புறம்தான் ஜகதா காலையெடுத்து வீட்டுக்குள் வெச்சாள். அடேயப்பா, ஜகதா ரொம்ப ரோசக்காரி. இவ்வளவு முன்கோபத்தை வெச்சுண்டு ஒரு பொம்மனாட்டி குடித்தனம் பண்றான்னா, மாப்பிள்ளை சாதுவாய் வாய்ச்சது அவளுடைய—நம்முடைய பூர்வ பூஜாபலன்னுதான் சொல்லணும்.

ஆனால் அப்புறம்கூட அவள் அப்பா அவளை சும்மா விடல்லே, அவர் நாக்கு சும்மாயிருக்காது. அதுலேதான் பாம்பு விளையாடிண்டேயிருக்குமே!

''ஜகதா நீ காப்பி எல்லாம் குடிச்சாச்சு. ராத்தூக்கம் கெட்ட கோபம், ரயில் பிரயாண அசதி எல்லாம் இப்போ தணிஞ்சிருக்கும், நீ சௌக்கியமா? உன் குழந்தைகள் சௌக்கியமான்னு நான் கேட்க வேண்டியதில்லை, இனிமேல் என் சௌக்கியத்தை நான் பாத்துக்கணும். இருந்தாலும் அதுகளும் சௌக்கியமா? உன் ஆம்படையான் பாவம், அவர் சௌக்கியமா? இதெல்லாம் பத்ததிக் கேள்விகள் இருக்கே, கேட்டாகணுமே!''

''கேளுங்கோ கேளுங்கோ. நன்னாக் கேட்டாகணும். எப்போத்தான் நீங்க தெரிஞ்சுக்கறது? உங்களுக்குப் பொண்ணானாலும் உலக அனுபவத்தில் உங்களைவிட நான் மூத்தவள் என்கிறதை நீங்கள் ஒப்புக்கொள்ளணும். நான் ஆறு குழந்தைகளுக்குத் தாயார்''

அவள் அப்பா அனுமார் மாதிரி கைகட்டி வாய் புதைச்சுண்டார்.

''இதென்ன நீ சொல்லித்தான் நான் தெரிஞ்சுக்கணுமா என்ன? இருந்தாலும் இப்போ வந்த விஷயம் என்னன்னு நான் கேக்கலாமோ?''

அதுக்குள்ளே நான் இடைமறிச்சேன். ''இதென்ன தத்துப் பித்துன்னு கேட்டுண்டு?—''

''அதுக்கில்லே அகிலா, இப்போத்தானே ஆறு மாஸத்துக்கு முன்னாலே இவளை இங்கே பார்த்தாப்போலே இருக்கு. அதுக்குள்ளேயும்? என் பெண்தான் வந்திருக்காள் இல்லேன்னு சொல்லலல்லே. ஒருவேளை மாப்பிள்ளையைத் தனியாச் சமைக்கவிட்டு அவரை சமையல்லே ''எக்ஸ்பெர்ட்''டா ஆக்கறதா உத்தேசமா? இல்லாட்டா அவன் சமையல் இவள் நாக்குக்கு ஒத்துக்கல்லையா?''

அவர் இப்படிப் பேசறப்போல்லாம் எனக்கு அடிவயத்தை பகீர் பகீர்ங்கறது. இந்த மனுஷனுக்கு இதே

சுபாவமாப் போச்சு. ஆகாயத்துலே கயத்தைக் கட்டி அதன் மேலே கண்ணைக் கட்டி நடந்து நடந்து.

ஆனால் ஜகதாவுக்கு என்னவோ கோபம் வல்லே.

''இந்தக் குழந்தைகளை வெச்சுண்டு, இந்தத் தடவை எப்படி சமாளிக்கறதுன்னு வந்துட்டேன். அவாளும் பெரிய காம்பிலே போறா, திரும்பி வரதுக்கு நாலு அஞ்சு மாஸ மாவது ஆகுமாம்.''

''அதற்காக?''

ஜகதாவின் முகத்திலே கோடி அசதி கொடி படர்ந்தது.

''நான் என்னப்பா பண்றது?''

''அப்படின்னா?'' அவர் நிஜமாவே திகைச்சு நின்றார்.

எதையோ தேடறாப் போலே சுற்றுமுற்றும் பார்த்துட்டு ஜகதா எழுந்திருந்து விருக்குனு தோட்டத்துக்குள் போனாள். அப்பா, புளியங்கொட்டை மாதிரியிருந்தவள் எப்படிப் பூசணிக்காயா மாறிட்டா! கூடத்திலிருந்தே தோட்டத்தில் ஒவ்வொரு செடி கொடி மரமும் நன்னாத் தெரியும். ஜகதா சரசரன்னு நேரே போய் பவழமல்லி மரத்தைப் பிடிச்சு உலுக்கினாள். பொலபொலன்னு பூக்கள் அவள் மேலும் கீழேயும் உதிர்ந்தன. ஜகதா நேரே திரும்பி வந்து நடுக்கூடத்தில் எங்களைப் பார்த்துண்டு புன்னகை பூத்துண்டு பேசாமே நின்னா. அவள் தலையிலும் தோளிலும் புடவை மேலும் பூக்கள் ஒட்டிண்டிருந்ததுகள். அவள் மூகத்திலே சிவப்பும் வெளுப்பும் வர்ணச் சாந்தாக் குழைஞ்சு ''டால்'' அடிச்சது. அந்த முகத்திலே வெட்கமும் அர்த்தமும் சந்தனம் மாதிரி கம்முனு கமாளிக்சுது. எப்படியிருந்தாலும் என் ஜகதீசுவரி அழகு அழகுதான். அழகை என்னதான் அழிச்சாலும் அழிச்சுட முடியுமோ?

2

சே!—

நான் வந்திருக்கப்படாதோ?

எனக்கென்னவோ அடிக்கடி இப்படித் தோன்றுகிறது. ஒரு தடவை, ஒண்ணில்லாட்டா ஒண்ணு அப்பாவுக்கும் எனக்கும் தர்க்கம் வந்துடறது. அம்மாவுக்கும் கூடத்தான். சம்சாரம் பெருத்துப் போச்சு. யாருக்கு? எனக்குத்தான், அவாளுக்கில்லை. அப்போ ஆசைக்கு ஒரு பொண்ணா முன் னால் நான் பொறந்துட்டேன், ராஜகுமாரியாத்தான் வளர்ந்தேன். இன்னும் ராணியாத்தான் இருக்கேன். என்றாலும்—

ஆஸ்திக்கு ஒரு அம்பியிருந்தான்.

இன்னிக்கி அவன் நாள்.

இன்னிக்கு அந்தப் பிரம்மச்சாரி பையன் வந்து சாப்பிட் டான். எல்லாம் பஞ்சபட்ச பரமான்னமாத்தான் பண்ணி யிருந்தது. அந்தப் பயல் புது வேஷ்டியைக் கட்டிண்டு கையிலே ஒரு வெள்ளிக் காசையும் வாங்கிண்டு போயிட்டு வரேன் மாமின்னு போயிட்டான். அம்மா ஈஸிசேரிலே சாஞ்சுண்டு செவுத்தைப் பார்த்துண்டு இருந்தவள், மணி ஒண்ணாச்சு, ரெண்டாச்சு, மூணாச்சு ஏந்திருக்கவேயில்லை, அவள் கண்ணுலே தண்ணு விடல்லே. அழுதாத்தேவலாமே!

"அம்மா மணியாச்சே! சாப்பிடவா"ன்னு கூப்பிட பயமாயிருக்கு.

இன்னிக்கு மோர் குழம்பையும் சிவக்க எடுத்த வடை யையும் பாக்கறப்பவே நாக்குலே தண்ணி அப்படி ஊறித்து. என்ன பிரயோசனம்? அம்மா மோரிலே பருக்கையைப் போட்டுக் கரைச்சு பிழிஞ்சு எறிஞ்சுட்டுக் குடிச்சா, எனக்கு எல்லாமே ஆறிப்போயிடுத்து. அப்புறம் என்னவேண்டி இருக்கு?

அப்பா ஆத்துக்கே வல்லே.

இருந்தாலும் எது விடறது? இருந்தாலும் இந்த நாளும் வந்துதானே ஆகணும். அந்தந்த நாள் அதனதன் வேளைக்கு. இப்படியேதான் ஒருஒருநாள் வாஸமும் வருஷமாப் போயிண்டிருக்கு.

கொல்லைப்புறத்துலே பவழமல்லி மரம் இருக்கே, நான் பாவாடையும் சட்டை யும் போட்டிருந்த நாள் முதல் இப்படியே தானிருக்கு. நாம்தான் மாறிண்டிருக்கோம் விடியறத்துலே நான் நாள் தவறாமே முழிப்பு வந்ததும் எழுந்து போய் பார்ப்பேன். அதனடியிலே மெத்தையை விரிச்சாப் போல் புஷ்பங்கள் நெருக்கமா உதிர்ந்து கிடக்கும். அணில் மாதிரி ஒருமுறை அதில் பிரண்டுட்டு வருவேன், என்மேல் மெத்து மெத்துன்னு ஒட்டிண்டிருக்கும்.

கலியாணத்தின்போதுகூட ஊஞ்சல் ஜோடிச்சபோது பார்த்தவா அத்தனைபேரும் அதிசயப்பட்டுப் போனா. என்ன ஜ்வலிப்பு! என்ன ஜ்வலிப்புடீ!! ஒண்ணொண்ணும் ஒரு ஒரு நட்க்ஷத்திரமா உயிர்விட்டு மின்னித்து. அஞ்சு நாளைக்குமா அப்படியே வாடாமல் இருக்கும்!

எப்படித்தான் ஒருநாள் கூட அலுக்காமே, ஒருநாள் தவறாமே அன்னியிலிருந்து இன்னிவரைக்கும் பூக்கறதோ?

ஆனால் எனக்கு அலுத்துப் போச்சு. இந்தத் தடவை நிச்சயமா அலுத்துப் போச்சு, என்ன வேண்டியிருக்கு?

"சே!—

மாஸத்துக்கு முப்பது நாள் அவர் காம்ப் காம்புன்னு போயிடறார். இதுகளைக் கட்டி மேய்க்கப்படல்லே. ஆண் கட்டுப்பாடு இல்லாமல், பறக்கற பட்சிவாயிலிருந்து உதிர்ந்த விதை மாதிரி அது அது அதனதன் இஷ்டப்படி வளந்திண்டிருக்கு. நான் அடிச்சால் என்கை வலிக்கிறது. அதுகளுக்கு நெஞ்சுலே எங்கே பயமிருக்கு?

பண்ணற துஷ்டத்தனமோ ஸஹிக்க முடியல்லே. அழ அடிக்கறதுகள், பண்றதைப் பண்ணிட்டு என்னைக் கண்டதும் சிட்டாப் பறக்கறதுகள். ஓடிப் பிடிக்கறதுன்னா உடம்பு முன் மாதிரியிருக்கா? என் உடம்பே என்னைச் சுமையா அழுத்தறது. போறாத்துக்கு சுமைதாங்கியாவுமா ஆயிட்டேன்.

''டே மரியாதையா என்கிட்டே பிடிபட்டுடு. ஒரு அடியாவது பட்டுக்கோ. என்னைக் கொட்டிக்கற வயத்தெரிச்சல் தீர''-ன்னு என் குழந்தைகளை வரம்கேக்கவேண்டி இருக்கு.

ஆத்திரம் கண் விளும்பிலே விண்விண்ணு தெறிச்சு வலிக்கிறது.

குமார் உடம்பை ஒடுக்கிண்டு அடிமேல் அடிவெச்சு நகந்து நகந்து கிட்ட வரான்.

அடிக்குத்தான் பயமோ, என்னைக் கண்டுதான் பரிதாபமோ! ரெண்டும் சேர்ந்து குழந்தை முகம் குழம்பறப்போ எனக்கும்தான் வயத்தை சங்கடம் பண்றது.

''வா வந்தூடு...''

''ஒரு அடிதான் —''னு பேரம் பேசறான்.

''மரியாதையா வந்தூடு!''

''சொன்னாத்தான். ஒரே அடிதான். இல்லாட்டா வர மாட்டேன்''

''சரி வா''

ஆனால் அவன் கையிலே அகப்பட்டுண்டதும், இதுவரை பண்ணின குத்தம், பண்ணாத குத்தம், இனிமேல் பண்ணப் போற குத்தம், அவன்மேல் ஆத்திரம்-இன்னும் கைக்கு அகப் படாதவா மேலே ஆத்திரம், காம்பிலே இருக்கறவா மேலே ஆத்திரம் எல்லாமா ஒண்ணாச் சேர்ந்து பொங்கிவர வேகத்திலே பல்லைக் கடிச்சுண்டு ஒண்ணுக்கு நாலா இழுத்து வாங்கிடறேன். ''வீல்''னு குழந்தை அலர்றான். அந்த அபயக்

குரல் என்மேல் வீறினதும் எனக்கு மண்டை ''வீர்ர்ர்''ராகி கண்ணை இருட்டறது. அவனை அப்படியே வாரிக்கறேன். என் விரலின் தடிப்பை அவன் விலாவில் பார்க்கறப்போ— அவனே சேப்பு— எனக்குத் துக்கம் பீறிண்டு வரது. அவன் என் கழுத்தை இறுகக் கட்டிக்கறான். ''ஏம்மா அழறே? ஏம்மா அழறே?'' நான் ஊளையிடறேன்; ஒத்தரையொத்தர் கட்டிண்டு ஆத்திரம் கரைய அழுது களிச்சு அடங்கறப்போ ப்ளாட்பாரத்தில் ரயில் குமுறி, இருமி, கக்கித் துப்பி, பெரு மூச்சு விட்டுண்டு நிக்கற ஞாபகம் வரது. மெதுவ்வா, என் கழுத்தைக் கட்டிண்டபடியே, கன்னத்து சதையை வாய் நிறைய அள்ளிக் கவ்வி வெடுக்குனு கடிக்கறான். ''விடு சனியனே''ன்னு உதறி எறியறேன். கன்னத்துலே இன்னும் கண்ணீர் காயல்லே கண்ணோரத்தில் போக்கடாச் சிரிப்பு துளும்பறது, பனியிலே குளிச்ச ரோஜா மாதிரி.

ஆனால் அத்தோட அது அவ்வளவுதான். அடுத்த நிமிஷம் ஆம்புலேறித் தோம்பிலே விழுந்து அதைக் கிளறி இதை நோண்டி, பூஜைப் பெட்டியிலேருந்து ஸாலிக் கிராமத்தை யெடுத்து ''அட. பாதாம்பருப்புப் புட்டு மாதிரி வயவயன்னு ருக்கே நான் விளையாட எடுத்துக்கட்டுமாம்மா''ன்னு கேக் கறது. என்னத்தைப்பண்ண?

இதுகளின் இம்சை நம்மாத்துலே, நம்மாலேயே சமாளிக்க முடியல்லியே, பிறத்தியார் வீட்டிலே பிறத்தியார் ஸகிச்சுக்கணும்னு எந்த ''ரூல்''லே எழுதியிருக்கு? ஆமாம் என் குழந்தைகள் விஷயத்துலே என்னைப் பெத்தவாகூட பிறத்தியார்தான்.

இன்னிக்கு அப்பாவுக்கும் எனக்கும் சண்டை.

சண்டைக்குக் காரணம் என்ன? குழந்தைகள்தான்; என் குழந்தைகளும் எனக்கு வாயும் இருக்கற வரைக்கும் சண் டைக்கு என்ன குறைச்சல்? தப்பு என் குழந்தைகள்மேல் தான் இருக்குன்னு எனக்கு நன்னாத் தெரியறது. ஆனால் நியாயம்னு தீர்க்கவரப்போ, சமயத்திலே கண்ணை

மூடிடறது. இந்த விஷயத்திலே மாத்திரம் எந்த நியாயத்தையும் தெரிஞ்சுக்க மனசு ஒப்பல்லே.

மத்தியான்னம் ரெண்டு, மூணு மணியிருக்கும். நம்மாத்துக் குழந்தைகளுக்கு விஷமம் பண்ண சொல்லித் தரணுமா? பக்கத்தாத்து செல்வங்களும் சேர்ந்தூடுத்து. எல்லாம் சேர்ந்து கூடத்திலே கட்டில்லே சுருட்டிப் போட்ட படுக்கை எல்லாத்தையும் கலைச்சு கீழே உருட்டித் தள்ளியிழுத்து கூடாரம் போடறேன்னு விரிச்ச மெத்தையை தலைமேலே போட்டுண்டு, அதன் அடியிலே மறைஞ்சுண்டபடியே தவழ்ந்துண்டு, ஒண்ணு மேலே ஒண்ணு இடிச்சு விழுந்து பிரண்டு கத்தலும் சிரிப்புமா ஒரே அமக்களம் தமுக்கடி. எனக்கே பொறுக்க முடியல்லே.

ஆனால் என் கத்தல் அதுகளின் இரைச்சலில் அமுங்கிப் போச்சு.

அப்பா பாவம் வாசல் ரூமிலே தூங்கிண்டிருந்தா. அப்பாக்குத் தூக்கம் கலைஞ்சு போயிடுத்து. விடுவிடுன்னு வந்தா. முகம் ஒரே ருத்ராகாரம். கைக்கு எந்த மெத்தை முதல்லே அகப்பட்டுதோ அதை அப்படியே தூக்கி எறிஞ்சா. அதன் அடியே இருந்ததின் முதுகிலே ஒரு அறை அறைஞ்சா. மத்தது அத்தனையும் சிட்டாப் பறந்தூடுத்துகள். திடீர்னு அடிபட்ட பயத்துலே ஸீமாக்கு அரையோடே ஊத்திடுத்து. எனக்கு அப்படியே வயத்தை ஒட்டிண்டது.

''என்னப்பா என் குழந்தையை பேய் மாதிரி அறையறேள்?'' எனக்கே நான் என்ன வார்த்தை சொன்னேன்னு சொன்னப்புறம்தான் தெரிஞ்சது. வார்த்தை நாக்குலேருந்து வந்தா தெரிஞ்சிருக்கும், அடி வயத்துலேருந்து வரப்போ?...

அப்பாவையே நான் அறைஞ்சுட்ட மாதிரி ஒரு வினாடிக்கு மூக்காடி அப்படியே நின்னூட்டா. அப்புறம் மெதுவா திரும்பினா என் பக்கம், சிலை திரும்பற மாதிரி. நேக்குப்

பயமாயிருந்தது. ஆனால் துணிச்சல் ஒண்ணு தனியா எங்கிருந்தோ வந்துடுத்து.

''குழந்தைகளா இது? ஒண்ணொண்ணும் ஓரொரு வானரம்னா—''

''வானரம்னு சொல்லாதேங்கோ என் குழந்தைகளை''ன்னு சீறினேன்.

''வானரம்னு சொல்லல்லே கிஷ்கிந்தாக்கள்ன்னு அழைக்கட்டுமா?''

நேக்கு ஒரேயடியா அழுகை வந்தூடுத்து. ''வாடி கண்ணே ஸீமா''ன்னு அவளை இழுத்து அணைச்சுண்டு விக்கிவிக்கி அழுதேன். (அதென்னமோ தெரியலை. அழறதுக்கு மாத்திரம் கூட ஒரு ஆள் வேண்டியிருக்கு!)

அப்பாக்கு மூஞ்சி கிளிஞ்சல் சுண்ணாம்பு மாதிரி தளைச்சுது.

இத்தனை நாழி இதெல்லாம் அம்மா வேடிக்கை பார்த்துண்டிருந்தவ. கிஷ்ணிச்சுண்டு ஏதோ தினுஸ்ஸா குரலைப் பாகுமாதிரி ஸன்னமா இழுத்துண்டு:

''ஏண்டிம்மா ஜகதா, உன் குழந்தைகளை எடுத்துக் கொஞ்சவும் சீராட்டவும் உரிமையுண்டு—துஷ்டத் தனம் பண்ணா ஒரு தட்டுத்தட்ட பெரியவாளுக்கு சுதந்திரம் கிடையாதா?''

''கிடையாது'' சுண்டைக்காய்த் தோசை கடிபடறாப் போல வெடுக்குன்னேன். அம்மாக்கு ஆத்திரம் புட்டூண்டுடுத்து.

''என்னடீ சுயபுத்தியோடேதானிருக்கையா இல்லே—''

''நீ சும்மாயிரு'' அப்பா அம்மாவை அடக்கினார். ''ஜகதா—'' அப்பா குரல் நிதானத்திலிருந்தே, நெஞ்சுலே எவ்வளவு அடக்கிண்டிருந்தார்ன்னு தெரிஞ்சுது. ''ஜகதா,

நாம் சின்ன விஷயத்தைப் பெரிசு பண்ண வேண்டாம். என் வீட்டிலே உன்னை நான் பேசி அவமானப் படுத்தக்கூடாது. அதனாலே நான் இத்தோடே நிறுத்திண்டுடறேன். இப்போ உன் மனசைப் புண்படுத்தினதுக்கு என்னை மன்னிச்சுடு.''

அப்பா விர்ர்ன்னு தன் ரூமுக்குப் போய்க் கதவைச் சாத்திண்டுட்டார். எனக்கு வாயடைச்சுப் போச்சு.

''ரொம்-ம்-ம்-ப சமத்துத்தான் போன்''னு அம்மா மொண மொணன்னு ஆசிர்வாதம் பண்ணிண்டே அடுக்களைக்குப் போனாள்.

சுவத்துலே சாஞ்சுண்டு முழங்காலைக் கட்டிண்டு நான் பாட்டுக்கு மணிக்கணக்கிலே உட்காந்துண்டிருந்தேன். என்னைச் சுத்தி மறுபடியும் உலகம் இயங்க ஆரம்பிச்சுடுத்து. குழந்தைகள் சத்தம் போட்டிண்டிருந்ததுகள்.

அப்பா ஜோரா தலையை சீவிண்டு. வண்ணான் மடிப்பிலிருந்து புதுசா ஜரிகை வேஷ்டியும் சந்தனக்கலர் ஜிப்பாவும் உடுத்திண்டு (அப்பா ஜிப்பா போட்டுண்டா என்ன வாட்டசாட்டமாகக் காட்டறது!) ஸீமாவைத் தூக்கிக் கொஞ்சிண்டு வெளியிலே போயிட்டா. அம்மா கீழே அலங்கோலமா கிடக்கிற படுக்கையெல்லாம் சுருட்டி கட்டில்லே வெச்சுட்டு ஸ்னானம் பண்ணிட்டு வந்தாள். (விழுப்புப் பட்டுண்டாளே!)

''பால்மா!''

பளிச்சுனு தேச்ச வெண்கலச் சொம்பை அம்மா கொண்டு வந்து ஊஞ்சல் பலகை மேல் வெச்சா.

தோள்மேல் அணை கயிறு தொங்க பால்காரன், பால் குவளையோடு சொம்புமேல் குனியறான்.

''நுரையை அடக்கி ஊத்தேண்டா!''

''அடக்கித் தானே ஊத்துறேன், பாத்துட்டுதானே இருக்கிங்க!''

பால் ஒரு தினுசா படபடத்துண்டு குவளையிலிருந்து சொம்புலே யிறங்கி, சொம்பு நிறைஞ்சு நுரை வழியறப்போ அதுக்கு ஒரு உசிரு இருக்கு. எப்படியும் அது பசுவின் ரத்தம் தானே!

அம்மா கூடத்தைப் பெருக்கினாள். என்கிட்ட வந்ததும் என்னை சுத்திப் பெருக்கிண்டு போனாள்.

நான் உக்காந்திண்டேயிருக்கேன்.

அம்மா தோட்டத்துக்கு போய் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வந்து, மடியிலிருந்து ஊஞ்சல்லே பூவைக் கொட்டறாள். புலுபுலுன்னு சின்னப்போரா குவிஞ்சு நிக்கறதுகள். ஒருவேளை நான் தொடுப்பேன்னு எண்ணமோ என்னவோ!

ஆனால் நான் உக்காந்த இடத்தை விட்டு அசையல்லே.

அம்மா மறுபடியும் அதையெல்லாம் வாரி எடுத்து மடிலே போட்டுண்டு சமையலறைக்குப் போயிட்டா.

வெத்தல் குழம்பு சுண்டக் காயற வாசனை கம்முனு சமையலுள்ளேருந்து கிளம்பறது. (என்னதான் நீ ஆயிரம் சாம்பார், கறி பண்ணு, அந்த வெத்தக் குழம்புக்கும் சுட்ட அப்பளாத்துக்கும் இருக்கிற ஏர்வைக்கு மிஞ்சித்தான் எல்லாம்!)

அம்மா பூச்சரத்தோடு வந்து ஒண்ணுமே பேசாமே எனக்கு சூட்டிட்டுப் போனா, அவளும் வெச்சிண்டிருக்கா. ஆனால் எனக்குத்தான் நிறைய.

கொல்லைப்புறத்திலேருந்து கொஞ்சம் கொஞ்சம் வானத்தின் வர்ணம் தெரிகிறது. வெளுப்பு நீலமாகி, நீலம் பச்சையாகி, பச்சை சேப்பாகி, சேப்பு இப்போ மசிக்கறுப்பா ஆயிண்டேயிருக்கு.

அம்மா சுவாமி விளக்கை நமஸ்காரம் பண்ணறாள். மனஸுக்குள்ளே ஸ்தோத்திரத்தின் உச்சரிப்பில் அவள் உதடு

மாத்திரம் அசையறது. அம்மா முகத்தில் லக்ஷ்மி களை அப்படி சோபிக்கிறது. அம்மா திடீர்னு சின்னப் பொண் ணாத் தோணறா, நான் பெத்துப்பெத்துக் கட்டுத் தளர்ந்து கிழவியாயிட்டேன். என் மனஸுலே என்னென்னெல்லாமோ படறது.

கிழக்கு மேற்காகி, இடம் வலமாகி, நடக்கக் கூடாத தெல்லாம் நடக்கக் கூடிய—ஏன், நடந்துண்டேயிருக்கிற ஒரு எல்லைக் கோட்டிலே நான் நிக்கற மாதிரி தோணறது. சே! என்ன இதெல்லாம்! நம் வாழ்க்கையிலே எவ்வளவோ அழகான நிமிஷங்கள் எத்தனை இருக்கு! அப்பவே மொக்கு கட்டி அப்பவே மலர்ந்து, அலரி, நெஞ்சின் நினைப்பிலே பட்ட மாத்திரத்திலேயே தீஞ்சு கருகிப்போற எத்தனையோ நிமிஷங்கள்! இப்படி நினைச்சுண்ட அந்த நிமிஷத்திலேயே நெஞ்சுக்குள்ளேயே ஒரு அழகான எண்ணம் பூக்கற மாதிரி யிருக்கு. அந்த உணர்ச்சியிலே உடல் பரபரக்கிறது. ஆனந்தமாயிருக்கு! ஒரே பயமாயிருக்கு. தாங்க முடியல வில்லை. ஆவி, உடம்பிலேருந்து பறந்துடறாப் போலே சிட்டுக்குருவியா ரக்கையை அடிச்சுக்கறது.

ரெண்டு கையாலும் மார்பையமுத்திப் பிடிச்சுக்கறேன். கொஞ்சங் கொஞ்சமா என் பரபரப்பு அடங்கறது. புண் ணுலே தைலம் தடவினமாதிரி நெஞ்சுக்கு இதமாயிருக்கு. மனஸுகு திடீர்னு ஒரு காரணமுமில்லாமே உலகத்தோடே சுமாதானமாயிருக்கணும்னு ஆசைப்படறது.

குழந்தைகள் விளையாடிட்டு திரும்பிவர சப்தம் வாசல்லே கேக்கறது.

ஸீமா குடுகுடுன்னு ஓடிவந்து மடியிலே விழறா. ''அம்மா இதோ பாரு''ன்னு வாயைக் குதப்பிண்டே என்னத்தையோ மூக்குக்கு நேரே நீட்டி நீட்டிக் காண்பிக் கிறாள். உதட்டோரத்தில் சாக்கலேட் பாகு வழியறது.

''யார் வாங்கிக் குடுத்தா?''

''தாத்தா—''

''சை கழுதை!'' அப்பா குரல் பின்னாலேருந்து கேக்கறது. ''என்னைத் தாத்தான்னு கூப்பிடக் கூடாதுன்னு சொன்னேனா?''

''மறந்து போச்சு தாத்தா—''

''இங்கே வாங்கோளேன்—'' அம்மா சமையலறையி லிருந்து கூப்பிடறா. அப்பா போகிறார். ஆம்படையான் பெண்டாட்டி ரெண்டு பேரும் என்னவோ ரகஸியமா பேசிக்கறா.

எனக்கு அவர் நினைவு வரது. இப்போ என்ன பண்ணிண்டிருக்காரோ?

ஒருவேளை நிஜமாவே அவர் செளகரியத்தை நான் சரி யாய்க் கவனிக்கல்லையோ!

போற இடத்திலெல்லாம் அவருக்கு சாப்பாடும் தண்ணி யும் செளகரியமா அகப்படறதுன்னு நிச்சயமாச் சொல்ல முடியுமா? கண்ட இடத்திலே அகப்பட்டதைப் பொங்கித் தின்னுண்டு, அதுவும் இல்லாத இடத்தில், ரெண்டு வாழைப் பழத்தையோ கிழங்கையோ முறிச்சுப் போட்டுண்டு அவர் காலத்தைத் தள்ள வேண்டியதுதானே! நல்லவயசு காலத் தில், இஷ்டப்படி தின்னு அனுபவிக்கிற, நாளில் அவர் தலை யிலே மாத்திரம் அப்படி எழுதியிருக்கணுமா? கேட்டால் அதுக்கும் தான் பதில் சொல்றார். ''எல்லாம் நம் குழந்தை களுக்காகத் தான். எல்லாம் ஓடறகாலத்தில் ஓடி சம்பாதிச் சால்தானே, திண்ணையோடு விழுந்து கிடக்கற நாளுலே நம் குழந்தைகள் வாயிலே புகுந்து புறப்படாமயிருக்கலாம்!'' அவர் அப்படி சொல்ற சமயத்திலேயே நான் குடும்பத்தைப் பெருக்கிண்டிருக்கேன்.

புரியாத ஒரு ஆத்திரம் திடீர்னு எனக்கு; என் வயத்துலே யிருக்கறத்துக்கு மேலே இன்னமும் நான் எத்தனை குழந்தை களுக்கு தாயாராக—என் தலைவிதியும் எனக்கு சக்தியு

மிருக்கோ அத்தனை குழந்தைகள் மேலேயும் பள்ளம் மேடு தெரியாத மூடாந்தமான ஒரு கோபம் ஜ்வாலை மாதிரி கிளம்பித்து. அதிலேருந்து ஒரு தீர்மானமும் உருவாகிப் புறப் பட்டது.

சட்டுனு எழுந்திருந்தேன். சுவாமி பிறையில் சூட டப்பாவிலேயிருந்து எலுமிச்சம்பழம் பெரிசுக்கு ஒரு கற்பூரக் கட்டியை எடுத்துண்டேன். இங்கே இருந்தால்கூட தெரிஞ் சுடும்னு கையுள்ளே மடக்கிண்டு தோட்டத்துக்குப் போனேன். கடையக் கடைய வெண்ணெய் கெட்டியாற மாதிரி நெஞ்சில் தீர்மானம் திடமாயிண்டிருக்கறது எனக்கே தெரியறது.

அப்போ என்மேல் ஏதோ உதிர்ந்து தோள்மேல் தங்கித்து. எடுத்து உன்னிப் பார்க்கிறேன். நட்சத்திர வெளிச்சத்துலே, உள்ளங்கையில் ஒரு பவழ மல்லியின் வெளுப்பு பளீர் என்கிறது. எனக்கு ஒரே அதிர்ச்சியா இருந்தது.

அது ஏதோ ஒரு எச்சரிக்கையின் அடையாளமா யிருந்தது.

என் கையில் அது தங்கி என்னையே விசனத்தோடு பாக்கற மாதிரி இருந்தது.

"அடி ஜகதா முட்டாள்! என்ன காரியம் செய்யத் துணிஞ்சுட்டே? நீ பிறக்கறத்துக்கு முன்னாலேருந்து நான் இங்கே நின்னுண்டு என் வேலையை செஞ்சுண்டிருக்கேன், நீ இன்னும் முளைச்சு மூனு இலை விடல்லை. என்ன அலுப்புடி உனக்கு வந்துடுத்து? என்னத்தடி கண்டுட்டே அதுக்குள்ளேயும் நீ?"

"அம்மா அம்மா!" எனக்குத் திடீர்னு அழுகை வந்து டுத்து. பயங்கூட இல்லை. என்னையறியாமலே தடால்னு விழுந்து நமஸ்காரம் பண்ணிட்டு மரத்தை அப்படியே கட்டிண்டுட்டேன். தேம்பித் தேம்பி வரும் அழுகையில் என்

உடல் சருகா நடுங்கிற்று. ஆனால் என்மாரை யழுத்தின்டிருந்த நெஞ்சுச்சுமை குறைய ஆரம்பிக்கிறது.

''அம்மா மன்னிச்சுடு என்னை, எனக்கு ஒண்ணும் தெரியல்லே!''

''முட்டாள் முட்டாள்! பெத்திருக்கையே தவிர புத்தி எங்கே போச்சு? நீ பிறந்து வளர்ந்ததிலிருந்து என் பூக்களைச் சூடிண்டு, அப்புறம் எனக்கே பழியைத் தேடி வைக்கணும்னு பாக்கறையா?''

''ஜகதா! ஜகதா!''

அம்மாவின் மிரண்ட குரல் கொல்லைத் தாழ்வாரத்திலிருந்து எங்களை எட்டித்து.

''சரி போ உன் அம்மா கூப்பிடறா! மூஞ்சியைத் துடைச்சுக்கோ! ஆ அப்படி! இனிமேலாவது சமத்தாயிரு. குழந்தையா லக்ஷணமாயிரு. மேதாவியா நினைச்சுண்டூடாதே''

நான் அடிமரத்தைத் தொட்டு கண்ணில் ஒத்திண்டேன். இந்த சமயம் நான் மறக்க முடியாத சமயம். அது எனக்கே சொந்தமான ரகஸ்ய சமயம் இல்லியா?

''என்னடி ஜகதா எங்கேடி போயிட்டே? இந்த இருட்டிலே தனியா இப்படிப் போவாளா? பூச்சி பொட்டு இருந்து பிடுங்கினா என்னடி பண்ணுவே? நாங்கள் யாருக்கு என்ன பதில் சொல்றது?''

அம்மாவின் குரலில் அழுகை நடுங்கித்து.

''என்னை எதுவும் ஒண்ணும் பண்ணாதம்மா!''

''நீ என்ன அப்படி வரம் வாங்கிண்டு வந்திருக்கையா?''

நான் சிரிச்சேன். ''உனக்கு எப்படித் தெரிஞ்சுதோ எனக்குத் தெரியாது. ஆனால் நான் நீ சொன்னபடி தான்!''

''நீ பேசறதும் சிரிக்கறதும் வருத்தப்பட்டுக்கறதும் உடனே சந்தோஷப்பட்டுக்கறதும் யாருக்குடிம்மா புரியறது?''

''உனக்கு இப்போ ஒண்ணும் புரியவேண்டாம்.''

அப்பா பின்னால் கையைக் கட்டிண்டு கூடத்தில் நின்னிண்டிருந்தார்.

''சரி சாப்பிடவா—''

நான் கொண்டுபோன கற்பூரத்தை ஏத்திக் கீழே வெச்சுட்டு சுவாமி பிறைக்கு நமஸ்காரம் பண்ணினேன்.

''ஏதேது கொளுத்தியிருக்கிற கற்பூரத்தைப் பார்த்தால் இன்னும் பத்து மாஸத்துக்கு பக்தி பண்ணவேண்டாம் போலயிருக்கே!''

நான் நெருப்புக் கொழுந்தையே பார்த்துண்டிருந்தேன்.

உள்ளூர சிரிப்பு வந்தது. நான் சூடக்கட்டியை முழுங்கியிருந்தால் அப்பாக்கு இது மாதிரி வேடிக்கை பண்ண முடிஞ்சிருக்குமோ? அது எரிய எரிய என் நெஞ்சு ப்ரகாசமடைஞ்சது.

''ஜகதா சாப்பிடவரையா?''

அம்மா முகம் வெளிறிப் போயிருந்தது. அவள் குரலில் மரியாதையிருந்தது.

அப்போத்தான் எனக்கு எவ்வளவு பசி என்கிற நெனைப்பு வந்தது. எனக்கு மாத்திரமா பசி, வயத்திலேயிருக்கிறதுக்கும் சேர்த்துன்னா பசி!

பாதி சாப்பிடறப்போ அம்மா குழம்புஞ்சாதத்தை உருட்டி வாயிலே போட்டுண்டு ஜாக்கிரதையா:

''ஜகதா ஒரு விஷயம் வெச்சுக்கோ, நானும் நாலு நாத்தனார், மூணு ஓர்ப்படிகள், மாமியார், மாமனார் கொழுந்தன்மார் எல்லோரோடும் சேர்ந்து குடித்தனம் பண்ணிட்டுத் தான் வந்திருக்கேன். கழுத்திலே தாலி கட்டின

கையை உடனே பிடிச்சு இழுத்துண்டு, தனிக்குடித்தனம் போட்டுடல்லே—''

''எதுக்கு இந்தப் பீடிகை?''

நாக்கைக் கொட்டிண்டு அம்மா, ''எதுக்கு சொல்ல வந்தேன்னா சம்சாரத்துலே ஒவ்வொண்ணுக்கும் அத்தோட அது போச்சுன்னு இருந்தால்தான், மேல் காரியத்தை ஒட்ட முடியும்! ஏன்னா ஒண்ணு பின்னாலே ஒண்ணு வந்திண்டே தான் இருக்கும்.''

''ஓ—ஹ்—ஹோ! அப்புறம்?''

அம்மா திருதிருன்னு முழிச்சா.

''அப்புறம்?''

அம்மா திருதிருன்னு முழிச்சா. அவள் முழி சரியா யில்லை.

''ஏம்மா ஒரு மாதிரியாயிருக்கே?''

''வயத்தை—''

வாக்கியத்தை முடிக்கல்லே கலத்துலே கையை உதறிட்டு குடுகுடுன்னு வென்னீருள் பக்கம் ஓடினாள். குமட்டல் சப்தம் அங்கிருந்து வந்தது.

நான் சாவதானமா எழுந்து கொல்லைத் தாழ்வாரத்தில் கையலம்பிட்டு வந்து மறுபடியும் சமையலுள்ளே வந்து உட்கார்ந்துண்டேன், வந்தன்னிக்கே சந்தேகப்பட்டேன்.

அம்மா உள்ளே குனிஞ்ச தலையோடு வந்து நின்னா. அவள்முகம் இப்போ அசல் ஸீமாமுகம் மாதிரியே இருந்தது. ஒரு தினுசா வேதனையும், வெட்கமும், மிரட்சியுமா, அவள் கையை இழுத்துப் பிடிச்சு உட்கார வெச்சேன்.

அம்மா என்னை நிமிர்ந்து பார்க்கல்லே. என் கழுத்து வளைவிலே முகத்தைப் புதைச்சுண்டா, ஒருகையால் அம்மாவை அணைச்சுண்டேன்.

இப்போ என் அம்மாவுக்கு நான் குழந்தையா, இல்லே என் அம்மா எனக்குக் குழந்தையா?

என் பக்கத்தில் பித்தளைக் குடலையில் இன்னும் பவழ மல்லி இருந்தது.

ஒரு கையால் அள்ளி அம்மாவின்மேல் தூவினேன். சிதறி அவள் தலைமேலும் தோள்மேலும் உதிர்ந்தது.

மரத்திலிருந்து பூவா?

பூவிலிருந்து மரமா?

பூவெல்லாம் அம்மா உடம்பிலிருந்து என்னைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டித்துகள். அந்த ரகஸ்யம் அதுகளுக்குத் தான் தெரியும்.



